# குறையொன்றுமில்லை




## எட்டாம் பகுதி

முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்

வானதி பதிப்பகம்

# குறையொன்றுமில்லை

(எட்டாம் பகுதி)

முக்கூர் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்



வானதி பதிப்பகம்
23, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை – 17.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | டிசம்பர், 2006 |
| இரண்டாம் பதிப்பு | : | நவம்பர், 2007 |
| மூன்றாம் பதிப்பு | : | ஜூலை, 2008 |
| நான்காம் பதிப்பு | : | ஜூலை, 2009 |
| ஐந்தாம் பதிப்பு | : | ஏப்ரல், 2010 |
| ஆறாம் பதிப்பு | : | ஜூன், 2011 |
| ஏழாம் பதிப்பு | : | செப்டம்பர்,2012 |
| எட்டாம் பதிப்பு | : | மார்ச், 2014 |
| ஒன்பதாம் பதிப்பு | : | மார்ச், 2015 |
| பத்தாம் பதிப்பு | : | நவம்பர், 2016 |



**வானதி வெளியீடு**

**விலை : ரூ.100.00**

- TITLE : **KURAIONDRUMILLAI (PART-VIII)**
- AUTHOR : MUKKUR LAKSHMI NARASHIMACHARYAR
- LANGUAGE : TAMIL
- SUBJECT : RELIGIOUS
- EDITION : TENTH EDITION, NOVEMBER, 2016
- PAGES : iv + 212 = 216
- PUBLISHED BY : **VANATHI PATHIPPAKAM**
  23, Deenadayalu Street,
  Thyagaraya Nagar,
  Chennai-17. ☎ 24342810, 24310769
  E-mail : vanathipathippakam@gmail.com
  Website : www.vanathi.in
- PRICE : **₹ 100.00**

மேலட்டை உட்புற ஓவியங்கள் : வேதா

Laser typeset at : Azhagu Systems, Chennai-17 Ph.52127214
Printed at : Novena Offset Printing Co., Chennai - 5 ☎ 28446891, 28446166



முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்

# பதிப்புரை

'குறையொன்றுமில்லை' என்னும் பவித்ரமான மகுடத்தோடு 'கல்கி' வார இதழில் வெளியான, முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார் ஸ்வாமியின் அருளுரைத் தொடரின் எட்டாம் பாகத்தை இப்போது நூலாக வெளி யிடுவதில் வானதி பதிப்பகம் பெருமகிழ்ச்சி கொள்கிறது.

இந்தத் தலைப்பில் வெளியிடப்பட்டுள்ள எட்டுத் தொகுதிகளில் இடம்பெறும் அருள்மழை முழுவதும், சென்னை ஆழ்வார்ப்பேட்டை ஆஸ்திக சமாஜம் அரங்கில் ஸ்வாமிகள் ஆற்றிய உரைகளின் தொகுப்பு.

இவற்றை ஒலிப்பேழைப் பதிவிலிருந்து தொகுத்துக் கல்கி இதழ்களில் தொடராகப் பிரசுரித்தார்கள். இந்தத் தொடரை மிகுந்த அக்கறையோடு பிரசுரித்த கல்கி ஆசிரியர் சீதாரவி அவர்களுக்கும், இதனை வானதி பதிப்பகத்தில் நூலாக வெளியிட இசைவளித்த முக்கூர் ஸ்வாமிகளின் குடும்பத்தாருக்கும் அழகான வரை படங்களையும் முகப்போவியத்தையும் தீட்டியுள்ள ஓவியர் வேதாவுக்கும் வானதி பதிப்பகத்தின் நன்றியைத் தெரிவித்து மகிழ்கிறோம்.

ஆன்மிக வாசக அன்பர்கள் வழக்கம் போல் இந்த நூலையும் வரவேற்றுப் பயனடைய வாழ்த்துகிறேன்.

சென்னை-60017 — வானதி ஏ. திருநாவுக்கரசு

வானதி பதிப்பகம்

# குறையொன்றுமில்லை

## (எட்டாம் பாகம்)

## 1

**வி**ஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஆரம்பத்திலேயும் நரசிம்ஹ அவதாரம்தான்; கடைசியிலேயும் — சர்வ ப்ரஹரணாயுத:— என்று நரசிம்ஹ அவதாரம்தான். கடைசி திருநாமம் சர்வப்ரஹரணாயுத: இதற்கு ஆதி சங்கர பகவத் பாதாள் பாஷ்யம் இயற்றுகிறபோது சொல்கிறார்: 'எம்பெருமானுக்கு எல்லாமே ஆயுதம்' என்கிறார். நரசிம்ஹனாக அவன் அவதாரம் பண்ணிய போது, அவன் நகங்களே அவனுக்கு ஆயுதமாகின அல்லவா! ஆகவே சர்வப்ரஹரணாயுத: என்ற நாமம் நரசிம்ஹனையே குறிக்கும் என்கிறார் பகவத் பாதாள்.

சஹஸ்ரநாமத்தின் இடையிலேயும் நரசிம்ஹ பிரபாவமே வருகிறது. ஒரு கிரந்தத்தைக் கொடுத்து அதனுடைய தாத்பர்யத்தைக் கேட்டால், முதலில் வருவதைப் பார்க்க வேண்டும், கடைசியில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்று பார்க்க வேண்டும். இடையிலே கொஞ்சம் பார்க்க வேண்டும். இப்படிப் பார்த்தால் அதன் தாத்பர்யத்தை நாம் சொல்லலாம். இப்படிப் பார்க்கிறபோது சஹஸ்ரநாமத்தின் ஆயிரம் திருநாமங்களுக்கும் பொருளாக இருக்கக்கூடியவன் யார் என்று கேட்டால் அந்த நரசிம்ஹன்தான்.

அப்படிப்பட்ட நரசிம்ஹன் திருவடியிலே ஆத்ம சமர்ப்பணம் நாம் பண்ணினோமானால், மறுபடியும் நமக்குப் பிறவியே கிடையாது.

முமுக்ஷுபோத்ய தேவதை என்று பெயர், நரசிம்ஹனுக்கு. மோக்ஷத்தை விரும்பக்கூடியவர்கள் உபாஸிக்க வேண்டிய மூர்த்தி லக்ஷ்மி நரசிம்ஹன். எங்கு நாம் பார்த்தாலும் மடங்களிலே நரசிம்ஹ அவதாரம்தான். அந்த நரசிம்ஹனை ஆராதிப்பது மிகவும் சிரமமான காரியம். பரமாத்மா தன்னுடைய ஆராதனத்துக்கு சந்நியாசிகளையே வரித்தான். ஏனென்றால், மற்ற விஷயங்களிலே பற்றை அறுத்துக்கொண்டு, அவனிடத்திலே மட்டும் ஈடுபாடு கொண்டு, அவன் திருவடியிலே நித்ய கைங்கர்யம் பண்ணவேண்டுமென்பதாலே, அவனுடைய மந்திரத்துக்கு மஹா மந்திரம் என்று பெயர்; மந்திர ராஜம் என்றும் பெயர் அதற்கு. அப்படி மந்திரத்துக்கெல்லாம் உயர்ந்த மந்திரமாக விளங்கக்கூடிய நரசிம்ஹனுடைய பெருமை, எல்லா சாஸ்திரங்களிலேயும் பரக்கப் பேசப்படுவதனாலே, அவனை ஆராதிக்கக்கூடிய தகுந்த அதிகாரிகளை, பரமாத்மா தானே வரித்து, தன்னுடைய ஆராதனத்தை நடத்திக் கொள்கிறான்.

லோபமில்லாமல் அவன் திருவாராதனத்தை நடத்த வேண்டும். நிறைய சாப்பிடக்கூடியவன் அவன்! நரசிம்ஹனுக்கு நிறைய நிவேதனம் பண்ணவேண்டும். ‘பெரிய பெரிய பெருமாள்’ என்று அவனுக்குப் பெயர்! பெரியவனுக்குப் பெரியவன்! பெருமாள்களால் ஆராதிக்கப்பட்டவன் என்பதனாலே பெரிய பெரிய பெருமாள் என்று அவன் பேசப்படுகிறான்.

'பெருமாள்களால்' என்பதால் பகுவசனம் — (பன்மை). ராமபிரான் அஹோபில க்ஷேத்திரத்துக்குச் சென்று வணங்கி, ஸ்தோத்திரம் பண்ணினான் நரசிம்ஹனை. அந்த 'ஸ்தோத்திரத்துக்கு, பஞ்சாமிர்த ஸ்தோத்திரம்' என்று பெயர். ஸ்தோத்திரம் பண்ணி, நல்ல பலத்தைப் பெற்று சீதையை மீட்டான்; ராவணனை ஜெயித்தான்.

ஹரிவம்சம் என்கிற உயர்ந்த கிரந்தமானது இதை எடுத்துக்காட்டுகிறது.

அஹோபில க்ஷேத்திரத்தில் ராமனால் ஸேவிக்கப் பட்டவன் நரசிம்ஹன். அதே க்ஷேத்திரத்தில் இருக்கும் படியான எம்பெருமானை, ஸ்ரீநிவாஸன் கல்யாண காலத்திலே ஆராதித்தான் — பத்னி பத்மாவதியோடு வந்து ஆராதித்தான். திரவியங்களும், கல்யாணத்துக்குப் பண்ணிவைக்கப்பட்ட அத்தனை பதார்த்தங்களும், அஹோபில க்ஷேத்திரத்தில் இருக்கும்படியான நரசிம்ஹனுக்கு நிவேதனம் பண்ணப்பட்டது! இதை பகவான் ஸ்ரீநிவாஸனே பிரும்மாவுக்கு ஆக்ஞாபித்துப் பண்ண வைத்தான். பிரும்மாண்ட புராணத்திலே வேங்கடாசல மஹாத்மியத்திலே எல்லோரும் இதைப் பார்க்கலாம்.

ஸ்ரீநிவாஸன் மணவறையிலே மாப்பிள்ளையாக உட்கார்ந்திருக்கிறபோது பிரும்மா வந்தார். பதார்த்தங் களெல்லாம் மலை மலையாகக் குவித்து வைக்கப் பட்டிருக்கிறது மடப்பள்ளியிலே. மகான்களான மஹரிஷிகளெல்லாம் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அதை யாருக்கு நிவேதனம் பண்ணுவது என்று தெரிய வில்லை, பிரும்மாவுக்கு!

அப்போது, மாப்பிள்ளைக் கோலத்திலே உட்கார்ந்திருக்கும் பகவான் ஸ்ரீநிவாஸனிடத்திலே போய்க் கேட்கிறார் பிரும்மா. ஸ்ரீநிவாஸன் சொல்கிறான்:

'அஹோபில க்ஷேத்திரத்தில் இருக்கும்படியான அந்த நரசிம்ஹனுக்கு யதா விதியாக (முறைப்படி) பூஜை பண்ணி, இந்த திரவியங்களெல்லாம் விநியோகிக்கப் படட்டும்' என்று சொல்கிறான்.

அந்த ஸ்ரீநிவாஸ தம்பதிகள் அஹோபிலம் சென்று நரசிம்ஹனை ஸேவித்தார்கள்.

அதனால்தான் நித்யஸ்ரீயோடு, நித்ய கல்யாண வைபவனாக அந்த ஸ்ரீநிவாஸன் இன்றும் விளங்குகிறான். இவ்வளவு பெருமை அந்த திருவேங்கடமுடையானான ஸ்ரீநிவாஸனுக்கு ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால், அதற்குக் காரணம் என்ன...? நரசிம்ஹ ஆராதனத்தினுடைய பெரும் பயன்தான்.

அப்படிப்பட்ட பெருமைமிக்கவன், இரண்டு பெருமாள்களால் ஆராதிக்கப்பட்டவன் என்று ஆசார்யர்களால் எடுத்துக்காட்டப்பட்டவன் என்பதனாலே பெரிய பெரிய பெருமாள் என்று அவன் பெயர் பெறுகிறான். இந்த நரசிம்ஹனுடைய பெருமைதான் சஹஸ்ரநாமத்திலே பேசப்படுகிறது.

**யோ**கிகளுக்கு அந்த நரசிம்ஹன் ஹ்ருதயத்திலே தியானம் பண்ணக்கூடியவனாக விளங்குகிறான். வெறும் நரசிம்ஹனை தனித்து தியானம் பண்ணக் கூடாது. உக்ரரூபியாக தியானம் பண்ணக் கூடாது. யக்ஞத்திலேகூட அப்படிப் பண்ணுவதில்லை. அந்த

லக்ஷ்மியோடு கூடியிருக்கும்படியான லக்ஷ்மி நரசிம்ஹனாகத்தான் அவனை உபாஸிக்க வேண்டும். ஜபம் பண்ணுகிறபோதும் தியானம் பண்ணுகிற போதும் லக்ஷ்மியோடு கூடியிருக்கும்படியான நரசிம்ஹனை உபாஸித்தோமானால் பரம மங்களம் நமக்கு ஏற்படும்.

'மாங்கல்ய ஸ்தவம்' என்கிற ஸ்தோத்திரத்திலே (தினமும் ஸ்த்ரீகள் இதைச் சொல்ல வேண்டும் — புருஷர்களும் சொல்ல வேண்டும்) இந்த நரசிம்ஹன் யார் என்பது சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்திரத்தைச் சொன்னால் என்ன ஆகிறது?

த்ரவந்தி தைத்யா: தைத்யர்களெல்லாம் ஓடி விடுகிறார்கள். அசுர ப்ரவ்ருத்திகள், துஷ்ட ப்ரவ்ருத்தி களெல்லாம் இருக்கிற இடம் தெரியாமல் ஓடுகிறார்கள்.

ப்ரணவந்தி தேவதா: இதைச் சொல்லக்கூடியவர் களிடத்திலே, இந்திராதி தேவதைகளெல்லாம் வந்து கையைக் கட்டிக்கொண்டு நிற்கிறார்களாம். நீங்கள் என்ன சொன்னாலும் கேட்கிறோம் என்று நிற்கிறார் களாம்! இப்படி மாங்கல்ய ஸ்தவத்தைச் சொல்பவர் களுக்கு, தேவதைகளெல்லாம் கிங்கரர்களாக வந்து நின்று காத்திருக்கிறார்கள்.

நச்யந்தி ரக்ஷாம்ஸி — ராக்ஷஸர்களெல்லாம் நாசனத்தை அடைகிறார்கள். 'ராக்ஷஸர்களெல்லாம் இப்போது பூலோகத்தில் இல்லையே, எப்போதோ துவாபர யுகத்திலே அல்லவா இருந்தார்கள்... திரேதா யுகத்திலே அல்லவா இருந்தார்கள். கலியுகத்திலே இல்லையே?' என்று கேட்கலாம்.

அதற்கு சாஸ்திரம் சொல்லிற்று: அப்போதெல்லாம் தனித்து ராக்ஷஸர்கள் இருந்தனர் என்று புராணத்திலே சொல்லப்பட்டிருக்கிறது — இப்போது மனிதனே ராக்ஷஸனாக இருப்பதனாலே பிரத்யேகமாக ராக்ஷஸர்கள் வேண்டியதில்லை என்று சொல்லப் பட்டிருக்கிறது! இந்த மாங்கல்ய ஸ்தவத்தைச் சொல்வானேயானால் ஒருத்தனிடத்திலே இருக்கக் கூடிய ராக்ஷஸ குணமெல்லாம் அழியும்; அவனை அண்டக்கூடியவர்களின் ராக்ஷஸ குணமும் அழியும் என்பது பலன்.



## ②

**மா**ங்கல்ய ஸ்தவம் என்கிற ஸ்தோத்திரத்தைச் சொல்லிவர, நம்மிடம் இருக்கும் ராக்ஷஸ குண மெல்லாம் அழியும். நம்மை அணுகி வரும் ராக்ஷஸ குணம் படைத்தவரிடத்திலும் அது அழியும் என்று பார்த்தோம்.

அடுத்த பலன் அபயாந்தி சாரய:

அபய: என்றால் சத்ருக்கள். சத்ருக்களெல்லாம் இருக்கிற இடம் தெரியாமல் ஓடிவிடுகிறார்கள்.

**யத் கீர்த்தநாத் ஸோத்புத கேஸரீ**
**மமாமஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி:**

கேஸரங்களை உடையவன் கேஸரி பகவான் நரசிம்ஹன். பிடரி மயிர்கள், கேஸரங்களை உடையவன். அப்படிப்பட்டவன்— அந்த அத்புத கேஸரியை யாரொருவர் ஹ்ருதயத்திலே நினைத்து அவனை இந்த மாங்கல்ய ஸ்தவ ஸ்தோத்திரத்தைச் சொல்லி வழிபடு கிறாரோ, அவரிடத்திலிருந்து துஷ்டப்ரவிருத்தி களெல்லாம் ஓடிவிடுகின்றன. நல்லோர்களெல்லாம் வந்து அடிபணிந்து காத்திருக்கிறார்கள். எல்லாக் காரியங்களும் ஈடேறும், நரசிம்ஹனை உபாஸிப்ப தாலே, ஸேவிப்பதனாலே. ஹரி என்று சொல்லக்கூடிய அந்தச் சொல்லுக்கு சிம்ஹம் என்று ஓர் அர்த்தம்.

ஸிம்ஹமாகிய நரசிம்ஹன் நம்மைக் காத்தருள்வான். பரம மங்களத்தையும் தருவான். ஆரம்பத்திலே,

மங்களம் பகவான் விஷ்ணு:
மங்களம் மதுசூதன:
மங்களம் புண்டரீ காக்ஷ:
மங்களாயதனோ ஹரி:

என்று மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமாய் அவனைக் குறிப்பிட்டிருக்கிறது.

தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை பாடினார் எம்பெருமானுக்கு. 45 பாசுரம். அதிலே அவர் சொல்கிறார். "திருமாலை அறியார் திருமாலை அறியார்!" என்று. அதாவது, அவர் பாடிய திரு



மாலையை யார் அறியவில்லையோ, அவர்கள் திருமாலாகிய எம்பெருமானை உணர மாட்டார்கள். நிறையப் பாசுரங்களிலே இவர் நிர்வேதப்பட்டுக் கதறி அழுது ரங்கநாதன் விஷயமாகவே பாடியிருக்கிறார். ரங்கநாதனைத் தவிர மற்றொன்றை அவர் பாடவேயில்லை.

திருவேங்கடமுடையானுக்கு எதிரிலே பெரிய வேள்வி. ஜீயர் என்ற மகான் வந்தார். அப்போது ஒருத்தர் அங்கே நின்றுகொண்டு, “அப்படிப் பாடா தீர்கள், அந்தப் பெருமை அந்த எம்பெருமானுக்கு இல்லை; ஸ்ரீரங்கத்திலே உள்ள நம்பபெருமானுக்கே உண்டு... சோழியன் கெடுத்தான் காணும்” என்றார்!

சோழியன் என்பது தொண்டரடிப்பொடி யாழ்வாரைக் குறிக்கும். எல்லா ஆழ்வார்களும் ரங்க நாதனைப் பாடினார்கள். ஆனால், தொண்டரடிப் பொடியாழ்வார் ரங்கநாதனையே பாடினார். ஆகவே திருவேங்கடமுடையானுக்கு எல்லா ஆழ்வார்களாலும் பாடப்பட்ட பெருமை இல்லாது போயிற்று!

தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருமாலை மொத்தமும் ரங்கநாதன் விஷயம்தான். பகவானுக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடினால் அது மொத்தமும் ரங்கநாதன் விஷயம்தான். ஆகையாலே, ஆழ்வார் கோஷ்டியிலே இவருக்குப் ‘பரம ஏகாந்தி’ என்று பெயர். பரம ஏகாந்தமாக ரங்கநாதனையே அனுபவித்தார்.

புலனைக் காவலில் வைத்து, இந்தக் கலியுகத்தி லிருந்து நாம் விடுபட வேண்டுமானால் அவன் திருநாமத்தை நாம் கற்க வேண்டும். திருநாமத்தை நாம் கற்றோமானால் யம பாதை இல்லை.

அதற்கு யார் நிதர்சனம் இங்கே...?

"காவலிற் புலனை வைத்து கலி தன்னைக் கடக்கப் பாய்ந்து.
நாவலிட்டு உழிதர்கின்றோம் நமன் தமர் தலைகள் மீதே
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ நின் நாமம் கற்ற...
ஆவலிப்பு உடைமை கண்டாய் அரங்கமா நகருளானே"

என்றார்.

இதிலே ஒரு சரித்திரமானது காட்டித் தரப்படுகிறது. கல்யாண காலத்திலே த்ருவ—அருந்ததி பிரதர்சனம் என்று கல்யாண தம்பதிக்கு ஹோமம் நடக்கும். ராத்திரி வேளையிலே பண்ணுவார்கள் இந்த ஹோமத்தை.

இப்போது அவகாசமில்லாமல் மத்தியானம் மூன்று மணிக்கே சத்திரத்தைக் காலிபண்ண வேண்டியிருக்கிறது. அவசர யுகத்தில் இருக்கிறோம். வேகமாக எல்லா காரியமும் ஆகி, அடுத்து சாயங்காலம் நாலு மணிக்கு இன்னொருத்தர் கல்யாணம் பண்ணுவதற்கு சத்திரத்தைக் காலிபண்ண வேண்டும். ஆகவே பகலிலேயே எல்லாம் காட்டப்படுகிறது. அப்போது அந்த நக்ஷத்திரம் வராது. ஆனால் நாம் அந்த மந்திரத்தைச் சொல்லி அருந்ததி காட்டுகிறோம். இப்போதும் நடந்து கொண்டுதானிருக்கிறது.

அந்தச் சமயத்தில் த்ருவ நக்ஷத்திரத்தைக் காட்டணும். அருந்ததி வசிஷ்டருடைய தர்மபத்னி. மஹா பதிவ்ரதை. அருந்ததியைப் போன்று அந்த மணப்பெண்ணும் பதிவ்ரதையாக விளங்க வேண்டும் என்பதற்காக அருந்ததி நக்ஷத்திரமும், த்ருவனைப் போன்ற சத்புத்திரனை அவள் பெறவேண்டும் என்பதற்காக த்ருவ நக்ஷத்திரமும் காட்டிக் தரப்படுகின்றன.

த்ருவ நக்ஷத்திரத்துக்கு வேத்ய நக்ஷத்திரம் என்று பெயர்—பரம பவித்ரமான நக்ஷத்திரம். எல்லா நக்ஷத்திரங்களுக்கும் முளைக்குறுத்தாக அது இருக்கிறது.

மற்ற நக்ஷத்திரங்களெல்லாம் — கிருத்திகாதி நக்ஷத்திரங்களெல்லாம் இந்த நக்ஷத்திரத்தைப் பிரதக்ஷிணம் பண்ணி வருகின்றன. அந்த த்ருவனுக்காக ப்ரத்யேகமான இடத்தை பகவான் சிருஷ்டி பண்ணிக் கொடுத்திருக்கிறான். அதற்கு த்ருவ பதம் என்று பெயர்.

அப்பா மடியில் ஏறி உட்கார முடியாத அந்தக் குழந்தைக்கு, இதுவரைக்கும் யாராலும் அனுபவிக்க முடியாத — யாருமே ஏறாத உயர்ந்த பதத்தை உண்டாக்கிக் கொடுத்தான் பகவான். அந்தக் குழந்தை, அம்மாவோடு அந்த உத்தமான இடத்துக்குப் போகிறது. பல வருஷம் பூலோகத்திலே பரிபாலனம் பண்ணி 36,000 வருஷ காலம் பரிபாலனம் பண்ணி, ராஜ்ய யோகத்தையெல்லாம் அனுபவித்த பிறகு, த்ருவ பதத்துக்கு அவன் போகிறபோது, அந்த த்ருவ பதத்திலே அவன் ஏறி உட்காருவதைப் பார்ப்பதற்காக எல்லா தேவதைகளும் வந்து சூழ்ந்து நிற்பார்கள். அப்போது அந்த த்ருவன் கிட்டே போய் பதம் ஏறப்போகிற சமயத்தில், அந்த த்ருவ பதத்துக்கும் இவன் வந்த விமானத்துக்கும் இடையே இடைவெளி சற்று அதிகமாய் இருந்தது. இவனுக்குக் கால் எட்டவில்லை. ஒரு படிக்கட்டு இருந்தால் செளகரியமாக இருக்கும் போல் தோன்றியது. அவன் அப்படி நினைத்துக்கொண்டேயிருந்த போது, யம லோகத்திலேயிருந்து யமன் கொஞ்சம் காலதாமதமாக வந்து, அத்தனை தேவதைகளையும் தள்ளிக்கொண்டு த்ருவன்

அந்தப் பதத்திலே ஏறுவதைப் பார்ப்பதற்காகத் தலையைக் கொண்டு வந்து முன்னே நீட்டினான்! த்ருவனுக்கு அந்தத் தலையே படிக்கட்டு மாதிரி சௌகரியமாய் இருந்தது! அதன் மேல் காலை வைத்து ஏறி உட்கார்ந்தான். 'நமன் தமர் தலைகள் மீதே' என்னும்படியான அந்த பாக்கியம் கிடைத்தது.

எதனாலே... த்ருவனுக்குக் கிடைத்தது...? "உன்னுடைய திருநாமம் கற்றதனாலே!" என்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார்.

இவ்வாறு பகவானை நினைத்தால், அவன் திருநாமத்தை உச்சரித்தால், யமனுடைய தலையிலேயே கால் வைத்து ஏறும்படியான அளவுக்குப் பெருமை ஏற்படுகிறது என்றால், அவன் நாமாவை ஸ்மரிப்பவர்களுக்கு நரக லோகத்தில் யாதனம் ஏற்படுமா?

ஆகையினால், எம்பெருமானுடைய திருநாமத்தில் ஒன்றைச் சொன்னாலும் உயர்ந்த கதி நமக்கு ஏற்படுகிறது. இதில் சர்ச்சையே கிடையாது.

இருபத்தியாறு நரகங்களை விஷ்ணுபுராணம் விவரிக்கிறது. அதையெல்லாம் கேட்டால் நடுநடுங்கிப் போய் விடுவோம். அத்தனை நரகங்களிலிருந்தும் காக்கப்பட அதற்கு ஒரே ஒரு பிராயஸ்சித்தமும் சொல்லியிருக்கிறது:

'கிருஷ்ணானுஸ்மரணம்!'

இவ்வளவு நரகங்களிலிருந்தும் விடுபடவேண்டும் என்று சொன்னால் ஒரேவழி—

கிருஷ்ணனை ஸ்மரியுங்கள்!

## 3

கிருஷ்ண நாமத்தைச் சொல்லுங்கள். அவனுக்கு தாஸன் என்கிற எண்ணத்தோடு நித்யம் அவனை தியானம் பண்ணுங்கள். அவன் திருநாமத்தை உரக்கச் சொன்னால் நரக யாதனை கிடையாது.

யமலோக சர்ச்சையே நமக்கு இருக்கக் கூடாது என்றால் பகவான் நாமாவைச் சொல்லியாக வேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறது.

எம்பெருமான் திருநாமம் கற்றவர்கள் தொண்டரடிப்பொடியாழ்வார் சொன்னது போல் நமன்தமர் தலைகள் மீதே பாதம் பதித்து இறைவனடி எய்திவிடலாம்.

சுவாமி தேசிகனும் இதையேதான் சொல்கிறார். 'ராமா தயித ரங்கபூ!' என்று ரங்கநாதரை அழைத்துச் சொல்கிறார்.

ரமாதயித ரங்கபூரமண
க்ருஷ்ண விஷ்ணோ ஹரே
த்ரிவிக்ரம ஜநார்த்தந த்தியுகநாத நாராயண!
இதீவ ஸுபதாநிய: படதிநாம தேயாநிதே
நதஸ்ய யம வஸ்யதா நரகபாத பீதிகுத:

அபீதி ஸ்தவம் என்று அந்த ஸ்தோத்திரத்துக்குப் பெயர். ரங்கநாதர் விஷயமான இந்த ஸ்தோத்திரத்தைச் சொல்கிறவர்களுக்குப் பயமே ஏற்படாது.

சில பேர், "ரொம்ப வியாகூலமாக, பயமாக இருக்கிறது; மனசிலே பீதி இருக்கிறது" என்று சொல்கிறார்கள் பாருங்கள்... அவர்கள் இந்த சுலோகத்தைச் சொன்னால் பயமெல்லாம் ஓடிப்போய் விடும். அபயங்கரன் எம்பெருமான். அவன் திருநாமத்தைச் சொன்னால் எல்லா பயமும் நீங்கும் என்றார். யாருக்காவது அப்படி நீங்கியிருக்கிறதா என்று கேட்டால் கயாதுஸுதனுக்கு நீங்கியிருக்கிறது என்கிறார்.

கயாது என்பவள் ஹிரண்ய கசிபுவினுடைய தர்மபத்னி. அவளுடைய பிள்ளை பிரஹ்லாதன்.

'சோகம் தவிர்க்கும் சுருதிப் பொருள் ஒன்று
சொல்லுகின்றோம்:
நாகம் தனக்கும் இராக்கதர்க்கும் நமக்கும் சரணாம்.'

என்று சொல்கிறார் சுவாமிதேசிகன்.

காகாசுரனை அவன் ரக்ஷித்தான். கஜேந்திரனை அதிவேகமாய் ஓடிவந்து ரக்ஷித்தான். 'ஆழிதொட்டானை திருவல்லிக்கேணி கண்டேனே' என்கிறார்.

எட்டுத் திருக்கரங்களோடு காஞ்சிபுரத்திலே காட்சியளிக்கிறான் எம்பெருமான். அந்த எட்டு புஜங்களோடு எதற்காக ஓடிவந்தான் அவன்? அந்த கஜேந்திரனை ரக்ஷிப்பதற்காக. அரைகுலைய, தலைகுலைய ஓடிவந்தான், அவன் திருநாமத்தைச் சொல்லிக் கூப்பிட்டதற்காக அப்படி ஓடிவந்தான்.

நாராயண பட்டத்திரி குருவாயூரப்பனைப் பார்த்துக் கேட்கிறார். "ஹே குருவாயூரப்பா! நீ ஓடிவந்து கஜேந்திரனை ரக்ஷித்தாயாமே? வாஸ்தவமா?" என்று கேட்க, பகவானும் தலை அசைத்து அதை அங்கீகரித்தான்!

பூரி காருண்யத்தோடு ஓடிவந்தான் அவன். அந்த கஜேந்திர வேழமே அந்த பரதத்வத்தை— பகவானுடைய காருண்யத்தை — காட்டிக் கொடுத்தது உலகத்துக்கு...

வாரணம் அழைக்க வந்த காரணனாய் அத்திகிரி அருளாளப் பெருமாள் வந்தார்.

அந்த எம்பெருமானுடைய வருகையைத் தெரியப் படுத்துகிறார், 'திருச்சின்னமாலை' என்கிற பிரபந்தத்திலே —சுவாமி தேசிகன்.

கஜேந்திரனை ரக்ஷித்தான். திரௌபதியை ரக்ஷித்தான்.

ஹா கிருஷ்ணா! துவாரகா வாஸின்
க்வாஸி யாதவ நந்தனா
சங்க சக்ர கதாபாணே துவாரகா நிலையாச்சுதா
கோவிந்தா புண்டரீகாக்ஷா ரக்ஷமாம் சரணாகதம்

என்று கதறினாள் திரௌபதி.

ஓடிவந்து கஜேந்திரனை ரக்ஷித்த மாதிரியே திரௌபதியையும் ரக்ஷித்தானா பரமாத்மா என்றால், இல்லை! அந்த 'கோவிந்தா' என்கிற திருநாமமே அவளை ரக்ஷித்தது.

ஒவ்வொரு அவதாரத்திலேயும் ஒரு குறை உண்டு என்றான் பகவான். இந்த கிருஷ்ணாவதாரத்திலே என்ன குறை?

"திரௌபதி கூப்பிட்டபோது நான் போய் அவளை ரக்ஷிக்கவில்லையே!" என்கிறான் பகவான்.

அவன் ரக்ஷிக்கவில்லையா! அப்படியானால் திரௌபதிக்கு வஸ்திரம் சுரந்ததே? புடைவை சுரந்து ரக்ஷிக்கப்பட்டாளே?

இதற்கு பகவான் சொல்கிறான்: "நான் எங்கே போனேன் அவளை ரக்ஷிக்க? என்னுடைய நாமா, கோவிந்த நாமா ரக்ஷித்தது" என்றான்.

அதனால்தான் 'குறையொன்றுமில்லாத கோவிந்தா' என்றாள் ஆண்டாள். 'கோவிந்தா என்ற உன்னுடைய திருநாமம் இருக்கிறபோது எங்களுக்கு என்ன குறை? அந்தத் திருநாமமே எங்கள் குறையை யெல்லாம் தீர்த்தது.'

அவன் குறையையும் நீக்கிய திருநாமம் அல்லவா அது! பக்தை அவள் (திரௌபதி) கூப்பிட்டபோது திருநாமமல்லவா ரக்ஷித்தது! ஜடமான திருநாமமே ரக்ஷித்தது என்று பகவானே சொல்லியிருக்கிறான் என்றால் அந்தத் திருநாமத்தின் பெருமையை என்ன வென்று சொல்வது?

கஜேந்திரன், காகாசுரன், திரௌபதி, விபீஷணன், புஜங்கவன் என்கிற காளீய சர்ப்பம், வ்ரஜகணமாகிய கோபிகாஸ்த்ரீகள், அம்பரீஷன் என்று சகலரையும் பரமாத்மா விசேஷமாக ரக்ஷித்திருக்கிறான். எல்லோரும் அவன் திருநாமத்தை உச்சாரணம் பண்ணியதால் ரக்ஷிக்கப்பட்டார்கள்.

அந்த கோபிகா பக்திக்கு ஈடு இணை இல்லை அவர்களிடையிலே நர்த்தனமாடி அத்தனை பேரையும் ஆட்கொண்டான் பரமாத்மா. அவர்களுக்குப் பூரணமாக அனுக்கிரஹம் பண்ணினான். எப்போதும் பகவானுடைய திருநாமத்தையே சொல்லிக் கொண்டி ருந்தார்கள் அவர்கள். அந்த எம்பெருமானையே நினைத்து நினைத்து உருகினார்கள்.

"இத்தனை பேரை அவன் ரக்ஷித்திருக்கிறான். இவ்வளவு பேரும் பகவானிடத்திலே ஈடுபட்டவர்கள். நீங்களும் அவன் திருவடியைப் பற்றினால் ரக்ஷிப்பான் என்பதில் சந்தேகம் உண்டோ?" என்று கேட்கிறார் சுவாமி தேசிகன்.

'அவர்களுக்கெல்லாம் அனுக்கிரஹம் பண்ணிய தனாலே, ஹே ரங்கநாதா, எங்களுக்கும் கிடைக்கும் படியாக அனுக்கிரஹம் பண்ணு' என்று அவன் திருவடியை நாம் பற்றினோமானால், திருநாமத்தைச் சொன்னோமானால், நம் பயத்தையும் போக்கி உயர்ந்த கதியை அவன் அளிக்கிறான்.

"அவர்களை மட்டுமே காப்பதற்காகவா அவன் அவதாரம்? நம்மையும் ரக்ஷிக்கத்தான்'' என்று சொல்கிறார் சுவாமி தேசிகன்.

சர்வ விதத்திலேயும் எல்லாரையும், எக்காலத்திலும் ரக்ஷிக்கக்கூடியவை அவன் திருநாமங்கள்.

**அ**ந்தத் திருநாமங்களிலே முக்கியமானது யோக: யோகித்யேயம் சதானந்தம் — யோகிகளால் எப்போதும் தியானம் பண்ணப்படக்கூடியவன்; சதா ஆனந்தமாக விளங்கக்கூடியவன் எம்பெருமான்.

ஆனந்தம் — சதானந்தம். எப்போதும் ஆனந்தமாக இருக்கக்கூடியவன் பரமாத்மா. அதனால்தான் உபநிஷத்தானது விசேஷமாக, 'ஆனந்தோ ப்ரம்ஹே வ்யஜானாத்' என்று ஆரம்பித்து விளக்குகிறது. பிரும்ம வல்லி என்கிற தைத்ரீய உபநிஷத்தானது இந்த விஷயத்தை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

பிருகு மஹரிஷி வருணனுடைய புத்திரர். தன் தந்தையாகிய வருணனிடம் போய் அவர் கேட்கிறார்.

'ப்ருகுர்வைவாருணி;' என்று இவரை வருணனின் பிள்ளை என்று குறிப்பிடுகிறது உபநிஷதம்.

பிருகு என்று சொன்னால் போதாதோ? வருணனுடைய பிள்ளையாக இவரைக் குறிப்பிடுவது எதற்கு என்று கேட்டால், இதனால் பிள்ளைக்கும் ஏற்றம்; அப்பாவுக்கும் ஏற்றம்.

வேதத்தில் இன்னொரு இடத்திலே சொல்கிற போது 'யாருக்கும் இடி இடித்துத் தலையிலே விழுந்து மரணம் சம்பவிக்கக்கூடாது' என்று ஒரு பிரார்த்தனை வருகிறது. யார் சொல்கிறார் இந்தப் பிரார்த்தனையை என்றால், வியாஸர் சொல்கிறார். வியாஸர் சொல்கிறார் என்று சொன்னால் போதாதோ?.. 'பராசரருடைய திருக்குமாரரான வியாசர் சொல்கிறார் என்று சொன்னதனாலே, அப்பா உயர்ந்தவர் — பிள்ளையும் உயர்ந்தவர் என்று அந்த சம்பந்தத்தை விவரிக்கிறது. சம்பந்தத்தை இட்டே விஷயம் சொல்லப்படுகிறது:

வியாஸ: பாராசர்ய:

சுகபிரும்மர் இந்த வியாஸரை தியானம் பண்ணுகிறபோது,

'வியாஸம் வஸிஷ்ட நப்தாரம் சக்தே: பௌத்ரமகல்மஷம்
பராசராத்மஜம் வந்தே சுக தாதம் தபோநிதிம்'

என்று சொல்கிறார்கள். நாமும் இப்படியே தியானம் பண்ணுகிறோம்.

'வசிஷ்டருக்குக் கொள்ளுப் பேரனாக இருக்கக் கூடியவர், சக்தி என்கிற அந்த மஹரிஷிக்குப் பேரனாக இருக்கக்கூடியவர், பராசரருக்குப் பிள்ளையாக

இருக்கக்கூடியவர்' என்று முன்னே மட்டுமின்றி பின்னேயும் பெருமையுடைய வம்சம் இது. ஆகவே, வியாஸரை தியானம் பண்ணுகிறபோது, அவருக்குப் பெரியோர்களையும் பின்னால் வந்தவர்களையும் சொல்லி தியானம் பண்ணுகிறோம். பெரியோர்களைச் சொன்னால், சின்னவர்களுடைய திருமுடி சம்பந்தத்தி னால் அவர்களுக்குப் பெருமை. பின்னால் பிறந்தவர் களைச் சொல்லும்போது, பெரியவர்களுடைய திருவடி சம்பந்தத்தினால் இவர்களுக்குப் பெருமை.

முன்னாலே பத்து தலைமுறைகள், பின்னாலே பத்து தலைமுறைகள் — இப்படி, 21 தலைமுறைகள் அந்தக் குலத்திலே பெருமையுடையவர்கள் விளங்கு வார்கள் என்கிறது வேதம்.

அப்படி உத்தமமான பிருகு மஹரிஷி. வருணனி டத்திலே போய்ப் பிரார்த்திக்கிறார்:

"பரப்ரும்மம் என்றால் என்ன? அதை எப்படி நாம் தெரிந்துகொள்வது?" என்று கேட்கிறார்.

கேட்டவுடனே வருணன் என்ன பண்ணினார்... "பரப்ரும்மத்தை அப்படி 'தடால்' என்று எடுத்துக் காட்ட முடியாது! நீயே தெரிந்துகொள்வாய்" என்றார்.

உடனே பிருகு மஹரிஷி போய் கொஞ்சம் நாள் தபஸ் பண்ணிவிட்டு அப்பாவிடம் வந்து சொன்னார்:

"தெரிந்துகொண்டுவிட்டேன், பரப்ரும்மம் என்றால் எது என்பதைத் தெரிந்துகொண்டு விட்டேன்!"

"என்னது அது?" என்று கேட்டார் அப்பா.

“பிரஸாதம் இருக்கிறதே... அன்னம்... அதுதான் பரப்ரும்மம். ஏனென்றால், அது இல்லையானால் உபன்யாஸம் பண்ண முடியுமா? கேட்க முடியுமா? மீதி எல்லாம் சொல்லிக் கொடுத்து வரவேண்டிய வித்யை. இது ஒன்றுதான் — சாப்பிடுவது ஒன்றுதான் — சொல்லிக் கொடுக்காமலே வரக்கூடியது. சொல்லிக் கொடுக்காமலே, சாப்பிட வேண்டும் என்பது இயற்கையிலேயே தோன்றுகிறதே...!” என்றார்.

இதைக் கேட்ட வருணன் சரியென்றும் சொல்ல வில்லை... ‘தப்பு’ என்றும் சொல்லவில்லை. “மறுபடியும் தபஸுக்குப் போ!” என்றார் பிருகு மஹரிஷியைப் பார்த்து!



## 4

**வே**தம் இன்னொரு இடத்திலே சொல்கிறபோது, 'மனிதனுக்கு எது பரம சத்ரு என்று கேட்டால் பசிதான் சத்ரு' என்கிறது!

இந்த வேத வாக்கியத்தைத்தான் 'பசி வந்திட பத்தும் பறந்து போகும்' என்றது! உபநிஷத்தே இதைச் சொல்கிறது.

ஒரு ஆசார்யார் சிஷ்யனுக்கு வேதம் மொத்தமும் சொல்லிக் கொடுத்தார். சொல்லிக் கொடுத்து, கிருஷ்ண பக்ஷத்திலே—தேய்பிறையிலே—கொஞ்சம் கொஞ்ச மாகக் குறைத்துக்கொண்டே வந்தார் அவனுக்குச் சாதத்தை! அப்படியே குறைத்துக்கொண்டே வந்து அமாவாசை அன்று ஒன்றுமே போடவில்லை!

ஒன்றுமே போடாமல், "இப்போ வேதத்தைச் சொல்லு" என்றால் ஒன்றும் சொல்ல வரவில்லை. ஸ்ம்ருதிபலமே இல்லை. சொன்ன மந்திரங்கள்—கற்றுக் கொண்ட மந்திரங்கள் அத்தனையும் மறந்துபோய் விட்டது அவனுக்கு. அதற்கப்புறம் வளர்பிறையிலே சாதத்தைப் போட்டுக்கொண்டே வந்தார். பௌர்ணமி அன்றைக்கு பூரண குக்ஷியாகச் (நிரம்பிய வயிறினனாக) சாப்பிட்டான் அவன்.

"இப்போது சொல் வேதத்தை" என்றால், நன்றாகச் சொல்கிறான்! ஆகவே, இந்த சரீரம் அன்னமயம்.

எப்படி மண்ணினால் ஆன வீட்டை மண் கொண்டு மெழுகினால் கெட்டியாக இருக்குமோ, அந்த மாதிரி பஞ்ச பூதங்களினால் தயாரிக்கப்பட்ட இந்த சரீர மானது, அந்த பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்மங்கள் அடங்கி யிருக்கக்கூடிய அன்னத்தைக் கொண்டு மெழுகினால் கெட்டியாக—பலமாக—இருக்கும். அன்னத்தை வைத்து இதை மெழுகி வளர்க்கவேண்டிய ஒரு நிர்ப்பந்தம் நமக்கு இருக்கிறதனாலே, 'இந்த அன்னம் தான் பரப்ரும்மம்' என்றார் பிருகு!

வருணன் இதைக் கேட்டுத் திரும்பவும் தபஸுக்கு அவரை அனுப்பிவிட்டார் அல்லவா...? மீண்டும் தபஸுக்குப் போய், 'அன்னம் பரப்ரும்மம் இல்லை' என்பதைத் தெரிந்துகொண்டு வந்துவிட்டார். ஏனென்றால், அன்னம் கொஞ்சம் நாள் வைத்திருந்தால் அழுகிப் போய்விடுகிறது. ஊசி வாசனை வருகிறது. அதுவே பரப்ரும்மமாக இருந்தால், ஒரு தடவை சாப்பிட்டாலே பூரண திருப்தியாக இருக்க வேண்டும்! ஆனால், மறுபடியும் மறுபடியும் 'கொண்டு வா' என்கிறது, இந்த வயிறு! மறுபடியும் மறுபடியும் சாப்பிட வேண்டும் என்று தோன்றுகிறது. ஆகை யினாலே, அன்னம் பரப்ரும்மம் இல்லை.

பின்னே எது பரப்ரும்மம் என்றால், 'பிராணன் தான் பரப்ரும்மம்' என்றார் பிருகு. "சரீரத்திலே பிராணன் இல்லை என்றால் அன்னத்தை எடுத்துச் சாப்பிட முடியுமா? பிராணன்தான் பரப்ரும்மம்" என்றார்.

"மறுபடியும் போய் தபஸ் பண்ணு" என்று சொல்லிவிட்டார் வருணன். இவரும் போய் தபஸ்

பண்ணி, பிராணன் பரப்ரும்மம் இல்லை என்பதைத் தெரிந்துகொண்டு வந்தார். ஏனென்றால், பிராணன் உடம்பில் இருப்பதற்கே அன்னம்தான் ஆதாரமாக இருக்கிறது. அது ஒரு வாயு விசேஷம். ஒரு நாள் இருக்கிறது; ஒரு நாள் சரீரத்தை விட்டுப் போய் விடுகிறது. உபநிஷத்திலேயே இது சொல்லப்பட்டிருக்கிறது:



ஒருமுறை உடலிலே எல்லா இந்த்ரியங்களுக்கும் சண்டை வந்தது. கண், காது, வாய் — எல்லாவற்றுக்கும் சண்டை! எல்லாமே பிராணனோடு சண்டை போட்டன. 'நான் பெரியவன்; நீ பெரியவன்' என்று ஒரே சண்டை. அப்போது பிரும்மா என்ன பண்ணி னார்... "எல்லோரும் ஒவ்வொரு வருஷம் சரீரத்தை விட்டு வெளியிலே போய்விடுங்கள்" என்றார்.

நேத்திரம்—கண்—இருக்கிறது பாருங்கள்... அது ஒரு வருட காலத்துக்கு அவரை விட்டுவிட்டுப் போய் விட்டது. சரீரத்துக்குரியவர் பார்த்தார்... இத்தனை நாளாக கண்ணில் பட்ட அனாவசிய விஷயங் களெல்லாம் இப்போது பார்க்கிறதில்லை. குருடானது நல்ல சௌக்கியமாகப் போய்விட்டது!

அங்கே திருதிராஷ்டிரனைப் பார்த்துப் பெரியோர் கள் சொன்னார்கள். "நீ பிறவிக் குருடனாகப் பிறந்தது நல்லதுதான். ஏனென்றால், அன்றைய தினம் திரௌபதியை மானபங்கம் — வஸ்திராபஹரணம் பண்ணுகிறபோது பார்க்காதவன் நீ அல்லவா. ஆகை யினால் குருடாக இருந்ததும் உனக்கு நல்லதுதான்" என்றார்கள்.

அந்த மாதிரி இவர் குருடன் ஆனதனாலே வெளியே எங்கும் போவதில்லை. வேண்டாத விஷயங் களைப் பார்ப்பதில்லை. அதனால் அவர் கட்டுப் படுத்தப்பட்டார். புண்ணியம் நிறைய வந்துவிட்டது. அதனால் கண் பார்வைதான் முக்கியம் என்பது தவறாகிப் போய்விட்டது. பார்வையினால் பலன் இல்லையென்று தெரிந்துபோயிற்று.

ஒரு நாள் செவிப்புலன் இருக்கிறதே, அது வெளியிலே போயிற்று. எதுவும் காதிலே இவருக்கு விழுவதில்லை. வீணான அல்ப விஷயங்கள் காதிலே விழாததனாலே இதரர்கள் வைதாலும் காதிலே விழுவதில்லை. நல்லதாயிற்று! செவிப்புலன் இப்படி வெளியே போய்விட்டுத் திரும்பி வந்தது.

ஒரு நாள் இந்தப் பிராணன் வெளியிலே கிளம்பிப் போய்விட்டது! போனால், கண், காது எல்லாம் போய்விட்டது! அப்படியானால் இதற்கெல்லாம் ஆதாரமாக இருக்கக்கூடியது பிராணன். ஆனால், அந்தப் பிராணனும் ஒரு நாள் போய் விடுகிறதல்லவா? ஆகவே பிராணன் பரப்ரும்மம் இல்லை என்பதை உணர்ந்தார் பிருகு.

மீண்டும் கொஞ்சம் நாள் தபஸ் பண்ணி, எல்லா வற்றையும் நன்கு பகுத்தறிவது மனம்தான். ஆகவே, மனம்தான் பரப்ரும்மம் என்று கண்டுபிடித்தார். ஆனால், மனம் பரப்ரும்மம் இல்லை என்பதைக் கொஞ்சம் நாள் கழித்துத் தீர்மானம் பண்ணினார் — மறுபடியும் தபஸுக்குப் போய் தீர்மானம் பண்ணினார். ஏனென்றால், மனஸ் ஆனது, சரீரம் இருக்கிற வரையில்தானே வேலை செய்கிறது. பிராணன் இருக்கிறபோது வேலை செய்கிறது. பிராணன் இல்லாதபோது வேலை செய்கிறதா? தூக்கத்திலே வேலை செய்கிறதா? ஆகவே மனம் பரப்ரும்மம் ஆகாது.

மீண்டும் தபஸ் பண்ணினார் பிருகு. விஞ்ஞானம் தான் பரப்ரும்மம் என்று கண்டுபிடித்துக் கொண்டு வந்தார். அந்த விஞ்ஞானமும் பூரணமானது இல்லை.

அதிலேயும் லோபங்கள் இருக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்டு, ஆனந்தம்தான் பரப்ரும்மம் என்பதைக் கடைசியிலே கண்டறிந்தார். அதுதான் நிலைத்து நின்றது.

பரமாத்மாவினிடத்திலே பரிபூரணமான ஆனந்தம். அவனை அனுபவிக்கக்கூடியவர்களுக்கு அவனிடத்திலே குறைவில்லாத ஆனந்தம் என்பது ஏற்படுகிறது. நாம் இந்த உலகத்திலே குறிப்பிடுகிற ஆனந்தம் இல்லை அது. அதை அனுபவிக்கிறபோதுதான் அது தெரியும்; அது என்ன என்பது புரியும். நித்யம் ஓர்ஆனந்தத்தை, நாம் உலக விஷயத்திலே சொல்லிக் கொண்டிருப்போம். இதெல்லாம் ஆனந்தமே ஆகாது என்று சொல்லிவிட்டார். உத்தம்மான ஆனந்தம், அந்த எம்பெருமானிடத்திலே நமக்குக் கிடைக்கிறதே... அதுதான்.

பார்கவி வாருணி ப்ரும்ம: —வித்யையிலே இவ்வளவையும் கடந்து, ஆனந்தமே பரப்ரும்மம் என்று கண்டுபிடித்ததனாலே, யோகித்யேயம் — யோகிகளால் அறியப்படவேண்டியவன் பரமாத்மா என்று ஆகிறது.

பரமானந்தம், சதானந்தம், கர்த்தா கர்த்ரு பதிஸ்வயம்—எல்லாவற்றுக்கும் கர்த்தாவாக— கர்த்தாவுக்குப் பதியாக விளங்கக்கூடியவன்— இப்படிப் பட்டவன் யார் என்று கேட்டால், 'மாலோலம் புண்டரீகாக்ஷம் ஸம்ச்ரயே வரதம் ஹரிம்' — லக்ஷ்மியோடு சேர்ந்திருக்கக்கூடிய லக்ஷ்மி நரசிம்ஹன் இருக்கிறானே, அவன்தான் வரதன்—நமக்கு வாரி வழங்கக்கூடியவன். யோகிகள் அவனை ஹ்ருதயத்திலே நித்யம் தியானம் பண்ணுகிறார்கள்.

'ப்ரும்ஹ வித்யா பிரகரண'த்திலே சம்வர்க்க வித்யா என்று ஒரு வித்யை உண்டு. நரசிம்ஹ உபாஸனையை நமக்கு எடுத்துச் சொல்கிறது, அந்த வித்யை. நரசிம்ஹனை உபாஸிக்கிற சுலோகமே யோக: என்றுதான் ஆரம்பிக்கிறது. ஆகையினாலே, அவனை உபாஸிக்கிறவர்களுக்கு உபாஸ்ய பலதாயி அவன். உபாஸிக்கக்கூடியவர்களுக்குப் பலனைக் கொடுக்கக் கூடியவன்.

சம்வர்க்க வித்யா, உபகோசல வித்யா, மது வித்யா, தஹர வித்யா, பர்யங்க வித்யா என்று பல வித்யைகள் உண்டு. அதிலே சம்வர்க்க வித்யை என்பது நல்ல உயர்ந்த வித்யை. சந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப் பட்டிருக்கும்படியான உயர்ந்த வித்யை.

இந்த வித்யையிலே எம்பெருமான் நரசிம்ஹன் உபாஸனையைத்தான் ரைக்வர் என்பவர் ஜானஸ்ருதி என்பவனுக்குச் சொல்லிக் கொடுத்தார்.

அந்த நரசிம்ஹ உபாஸனையினாலே உயர்ந்த கதியை அடைந்துவிட்டான் ஜானஸ்ருதி என்பவன். இதை உபநிஷத் நமக்கு 'ஜானஸ்ருதிஹவை' என்று ஆரம்பித்துச் சொல்கிறது.

பெரும் தலைவன் ஜானஸ்ருதி என்பவன் வாரி வாரிக் கொடுக்கும்படியான வள்ளன்மை மிக்கவன். நித்யம் தானம் பண்ணுவான் எல்லோருக்கும். மத்தியான வேளையிலே தியானம் பண்ணிவிட்டு, ராத்திரி வேளையிலே ஏழடுக்கு உப்பரிகையிலே போய்ப் படுத்துக் கொள்ளுவான்.

அப்படி அவன் படுத்துக்கொண்டிருக்கிறபோது, அவனுக்கு நல்ல ஞானத்தைப் புகட்ட வேண்டும்

என்று இரண்டு மஹரிஷிகள் ஹம்ச பக்ஷி வேஷத்திலே, ஆகாச மார்க்கத்திலே பறந்து போகிறார்கள்.

ஒரு பக்ஷி மற்றொரு பக்ஷியைப் பார்த்து, "பல்லாக்ஷா! பல்லாக்ஷா! மந்தமான பார்வையை உடையவனே... இங்கே படுத்துக்கொண்டிருக்கிறானே, இந்த ஜானஸ்ருதி, எவ்வளவு உயர்ந்தவன் பார்த்தாயா? இவனைப் போன்று ஓர் உயர்ந்தவன் உண்டோ?" என்றது.

அதற்கு இன்னொரு பக்ஷி சொன்னது: "இவன் என்ன உயர்ந்தவன்? ரைக்வரைக் காட்டிலும் இவன் உயர்ந்தவனா?" என்ற உடனே அந்த முதல் பக்ஷி கேட்டது.

"ரைக்வரா? அவர் யார்?"

"ரைக்வரை நீ பார்த்ததில்லையா? காட்டுகிறேன் வா!" என்று அழைத்துக்கொண்டு போய்விட்டது.

இதைக் கேட்ட ஜானஸ்ருதி படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான்.



## 5

'நம்மைக் காட்டிலும் உயர்ந்தவர் ரைக்வர் என்று ஹம்ச பக்ஷிகள் சொல்கின்றனவே! அவர் யார்?' என்று ஜானஸ்ருதிக்கு ஆவல் ஏற்பட்டது.

தான் ஏழு அடுக்கு படுக்கையில் படுத்திருந்ததனாலே, ரைக்வர் பதினாலு அடுக்கு மஞ்சத்திலே படுத்திருப்பார் என்று நினைத்துக்கொண்டு விட்டான் ஜானஸ்ருதி. அவரைத் தேடிக் கண்டுபிடிக்கும்படி சேவகர்களையெல்லாம் அனுப்பிவைத்தான்.

அவர்களும் போய்த் தேடினால், "ரைக்வர் என்று யாருமே இல்லை" என்றுதான் எல்லா இடங்களிலேயும் சொன்னார்கள். கிராமங்கள்தோறும் தேடச் சொன்னான்; குக்கிராமங்கள்தோறும் தேடச் சொன்னான். எல்லா இடங்களிலேயும் தேடிப் பார்த்து விட்டு, கடைசியிலே ஒரு சேரிப்பிராந்தியத்திலே, குடிசைகளெல்லாம் இருக்கிற இடத்திலே ஒரு கட்டை வண்டிக்குக் கீழே கௌபீன வஸ்திரதாரியாக, உடம்பெல்லாம் புழுத்து நெளிய படுத்துக் கொண்டிருந்தார் ரைக்வர்!

பார்க்கவே அருவருப்பாக இருக்கிறார். வண்டிச் சக்கரத்திலே முதுகைத் தேய்த்துக் கொள்கிறார்.

"இவர்தான் ரைக்வர். இவரைத் தவிர ரைக்வர் என்று வேறொருவர் உலகிலே இல்லை" என்றார்கள். உடனே சேவகர்கள் நடுநடுங்கிப் போய்விட்டார்கள்.. போய் ஜானஸ்ருதியிடம் சொன்னார்கள்.

அவன் சொன்னான்: "பக்ஷிகள் சொன்னது சரியாகத்தான் இருக்கும். அவர் எப்படிப்பட்டவராக இருந்தால் என்ன, அவருக்கு நாம் நிறைய கொடுக்க வேண்டும்" — இப்படிச் சொல்லிவிட்டு, எட்டு பெரிய தங்கத் தாம்பாளங்களை வைத்து அதிலே கோபுரமாக ரத்தினங்களைக் குவித்தான் ஜானஸ்ருதி. விலை மதிப்பில்லாத பட்டுப் பீதாம்பரங்கள் வைத்து, ஒரு ரதத்தையும் பூட்டி, ஸ்வர்ண கசிதமான அந்த ரதத் தோடு அவர் எதிரிலே வைத்து, "ஸ்வாமி, இதை நீங்கள் ஸ்வீகரிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

அவர் அது மொத்தத்தையும் பார்த்தார். 'ஸர்வம் கீடவத் பாதிமே...' என்றார்—தன் உடம்பிலேயிருந்து ஒரு புழுவை எடுத்துப் போட்டு "எல்லாம் இந்தப் புழுவுக்குச் சமானம்!" என்றார்.

நாம் நன்றாக கவனிக்க வேண்டும் அவர் வார்த்தையை... இதராளுடைய மனம் புண்படாமல் பேசக்கூடிய மகான் அவர். ஏனென்றால், பேசுவ தென்பது சாமானியமான கலை அல்ல... மற்றவர்கள் மனம் புண்படும்படியாகப் பேசக் கூடாது என்கிறது சாஸ்திரம்.

இவன் வந்து ஏகமாக ஐச்வர்யத்தை வைத்து 'ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்கிறபோது, அது மொத்தம் புழுவுக்குச் சமானம் என்றார்!

“அப்பா ஜானஸ்ருதே! உன்னுடைய நிலையிலே நீ காட்டும்படியான வஸ்துக்களெல்லாம் உயர்ந்ததாக இருக்கலாம். ஆனால், என்னுடைய நிலையிலே அவை எல்லாம் புழுவுக்குச் சமானம்தான்!”

“அப்படியானால்?” அவன் கேட்கிறான்... “இதை யெல்லாம் புழுவாக நினைக்கக்கூடிய அளவுக்கு ஒரு நிலை இருக்கிறதா சுவாமி?” என்று கேட்கிறான்!



“அது மொத்தத்தையும் விட்டுவிட்டு வா, சொல்கிறேன்...” என்றார் ரைக்வர். ஜானஸ்ருதியும் மொத்த ஐச்வர்யத்தையும் கொடுத்துவிட்டு, எதுவுமற்றவனாய் ரைக்வரிடத்திலே வந்தான். வந்து அவரிடத்திலே உபதேசம் பெற்றுக் கொண்டான்.

ஸம்வர்க வித்யையிலே காட்டப்படுகிற நரசிம்ஹ உபாஸனையை அவரிடத்திலே உபதேசம் பெற்று, நேரே மோக்ஷத்தை அடைந்துவிட்டான். மோக்ஷத்தைக் கொடுக்கும்படியான நரசிம்ஹ உபாஸனையை நேரே ரைக்வரிடத்திலே பெற்று, மோக்ஷமடைந்தான் என்று உபநிஷத் சொல்கிறது.

நல்லவர்களோடு, உயர்ந்தவர்களோடு சேர்ந்தால் அவர்கள் உயர்த்தி வைப்பார்கள். அதனால் அத்தகையவர்களுக்கு ஸம்வர்க வித்யா ஸாது கோஷ்டி என்று பெயர். உயர்ந்த கோஷ்டியிலே வந்து இவன் சேர்ந்தான்.

ஜானஸ்ருதி ஏற்கெனவே நிறைய தானம் பண்ணியவன்தான். அந்த தானம் பண்ணியதற்குக் குபேர பதவி அவனுக்குக் கிடைக்கக் கூடும். ஆனால், அவன் மறுபடி பூலோகப் பிறவியைத்தான் அடைய வேண்டும். பண்ணிய தானத்துக்காக மோக்ஷம் கிடைக்குமா!

ஆனால், இப்போது அவன் ரைக்வரை அடைந்ததனாலே, அவர் நல்ல ஞானத்தைக் கொடுத்தார். உபாஸிக்க வேண்டிய மூர்த்தியைக் காட்டிக் கொடுத்தார். அதனால் உபாஸித்தான், உயர்ந்த கதியை அடைந்தான். ஆகையினாலே, நல்லவர்களுடன்

உயர்ந்தவர்களுடன் சேர்ந்தால் அவர்களுடைய அனுக்கிரஹத்தினாலே —ஆசார்ய அனுக்கிரஹத்தினாலே — சிறந்த ஞானம் ஏற்பட்டு உயர்ந்த கதியை அடையலாம். மறுபடியும் பிறவியில்லாத, சாஸ்வதமான நித்யானந்தத்தை ஜானஸ்ருதி அடைந்து விட்டானே! இது தானத்தினால் கிடைக்குமா? மற்றொன்றினால் கிடைக்குமா!

சிறந்த ஞானத்தினால் பகவானை தியானம் பண்ணியதாலேதான் நித்யானந்த நிலை கிடைத்தது.

இப்படிப்பட்ட உயர்ந்த யோகிகளால் தியானம் பண்ணப்படக்கூடியவன், ஸம்வர்க வித்யையிலே, ஸாமவேத உபநிஷத்தான சாந்தோக்ய உபநிஷத்திலே புகழப்பட்ட எம்பெருமானை ஹ்ருதயத்திலே மஹான்களும் யோகிகளும் தியானம் பண்ணுகிறார்கள்.

ஆகையினாலே, 'யோகோ யோக விதாம் நேதா' — யோகிகளுடைய ஹ்ருதயத்திலே அவன் இருப்பதனாலே பகவானையே 'யோக:' என்கிறது சஹஸ்ரநாமம்.

" 'யோக க்ஷேமம் வஹாம்யஹம்' என்று சொன்னவன் அவன்தானே?" என்று கேட்கிறார் ஆதிசங்கர பகவத்பாதாள்.

பகவத் கீதையிலே பகவான் சொன்னதுதான் 'யோக க்ஷேமம் வஹாம்யஹம்.'

"என்னையே நினைத்து, மற்றொன்றை நினைக்காமல், என்னிடத்திலேயே மனத்தை அர்ப்பணிக்கும்படியான உத்தம அதிகாரிகளின் யோகக்ஷேமத்தை நான் வகிக்கிறேன்" என்றான்.

அசுவமேத பிரகரணத்திலே யோகம் நன்கு அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறது.

பரதன், ராமனிடத்திலே பாதுகைகளைக் கேட்கிற போது என்ன சொல்கிறான்:

"ஹே ராமா! இந்தப் பாதுகைகள் மேலே ஏறி நின்று அதை அடியேனுக்கு ஈந்தருள வேண்டும். இந்தப் பாதுகைதான் உலகத்துக்கு யோக க்ஷேமத்தை உண்டுபண்ணும்" என்று அழகாகப் பேசினான்.

எல்லோருக்கும்—உலகத்திலே அத்தனை பேருக்கும் — யோக க்ஷேமம் ஏற்பட வேண்டும்.

"எல்லோருக்கும் க்ஷேமமும் ஏற்படவேண்டும்; யோகமும் ஏற்பட வேண்டும்" என்கிறது வேதம்.

யோகம் வேறு; க்ஷேமம் வேறு. யோகம் என்றால் என்ன...?

"அவனுக்கு நன்றாக யோகம் அடிக்கிறது" என்கிறோம். யோகம் அடிக்கிறது என்றால்...?

புதிது புதிதாக, இத்தனை நாளாக இல்லாத பெருமைகளையெல்லாம் சேர்ப்பதுதான் யோகம். உயர்த்தி, நிறைய ஐச்வர்யம் எல்லாம் அவருக்கு வந்து கொண்டே இருக்கும். அதனால் நல்ல யோக தசை என்று சொல்கிறோம்.

அப்படியானால், யோகம் என்பது என்ன...? 'அப்ராப்தஸ்ய ப்ராபனம் யோகம்' — கிடைக்காததெல்லாம் கிடைப்பது யோகம்.

க்ஷேமம் என்றால்...?

ப்ராப்தஸ்ய லக்ஷணம் க்ஷேமம். இருப்பது போகாமல் ரக்ஷிக்கப்படுவது க்ஷேமம். புதிது புதிதாகக் கிடைப்பது யோகம்.

“இந்த இரண்டையும் அவனுக்கு நான் உண்டு பண்ணுகிறேன். புதியதாகப் பல விஷயங்களைக் கொடுத்து அவனை உயர்த்துகிறேன். க்ஷேமத்தோடு அவன் இருப்பான்” என்று பகவான் சொல்லியிருப்பதனாலே, அவனை அனவரதமும் யார் சிந்திக்கிறார்களோ, அப்படிப்பட்டவர்களுக்கு யோக க்ஷேமம் உண்டாகிறது.

அந்த யோகிகளுக்கெல்லாம் ஹ்ருதயத்திலே உறையக்கூடிய யோகமாய் விளங்குபவன் பரமாத்மா. இந்த மாதிரி யோகமாய் வந்து அவர்களுக்கு விசேஷமாய் அனுக்கிரஹம் பண்ணக்கூடியவன் எம்பெருமான்தான். க்ஷேமமாய் இருக்கக்கூடியவனும் அவனே. க்ஷேமம் என்ற சப்தத்துக்கே பகவான் என்றுதான் அர்த்தம். வித்யாரண்யர் அப்படி பாஷ்யம் பண்ணுகிறார்.

‘எனக்கு க்ஷேமம் ஏற்படட்டும்’ க்ஷேமம் என்றால், இருப்பது போகாமல் இருக்கட்டும். க்ஷேமமாகிற எம்பெருமான் எப்போதும் கூட இருந்து ரக்ஷிக்கட்டும் என்று அர்த்தம்.

க்ஷேம சப்தத்தினாலே சொல்லப்படக்கூடியவன் நாராயணன் — பரமாத்மா — என்பது தெரிகிறது. ஆகையினாலேதான் யோகோ யோகவிதாம் நேதா என்ற திருநாமங்கள். யோகவித் என்றால் யார்...? அந்த எம்பெருமானை நன்கு உணர்ந்த யோக வித்துக்கள்.

அப்படிப்பட்டவர்களுக்கெல்லாம் யஜமானன் அவன்.

ஞானினாம் அக்ரகண்ய: ஞானிகளுக்குள்ளே, மனத்தில் வைத்து எண்ணப்படக்கூடிய மகான்களுக் கெல்லாம் நேதாவாய் — எஜமானனாய் விளங்கக் கூடியவன்: ஞானிகளுக்கெல்லாம் ஈசுவரனாக இருக்கக் கூடியவன் அந்த எம்பெருமான். அவனை விரும்பக் கூடிய ஞானிகளிடத்திலே அன்பு உடையவன் என்பதுதான் 'யோகவிதாம் நேதா' என்ற சப்தத்தினால் சொல்லப்படுகிறது.



## ⑥

**யோ**கவித் என்கிற சப்தத்தை ஆசார்யர்கள் மேலும் விளக்கிக் காட்டுகிறார்கள்.

யோக சப்தத்தினாலே வேதமானது சொல்லப் படுகிறது என்கிறார்கள். வேதாத்யயன சம்பத் இருக் கிறது பாருங்கள்... அது பெரிய யோகம். ஜன்மாந்திரத் திலே சுக்ருத விசேஷம் இருந்தால்தான் வேதம் ஒருத்த ருக்கு லப்யம் ஆகும்— வேதத்தைக் கசடற கற்று, அந்த வேதத்தைச் சொல்கிற வாக்படுத்வமும் வசப்படும். ஜன்மாந்திர சுக்ருதம் இல்லையென்றால் அது வராது.

வேதத்தை அனவரதமும் சொல்லிக்கொண்டே யிருக்க வேண்டும். பஞ்சமஹா யக்ஞத்திலே, பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் பிராமணன் வேதத்தை அத்யயனம் பண்ண வேண்டும். அத்யயனம் பண்ணி அதை நித்யம் சொல்லவேண்டும்.

மனு ஸ்ம்ருதியானது பிராமணனுக்கு நித்யம் ஆறு கடமைகளைச் சொல்கிறது.

தான் நித்யம் வேதத்தை அத்யயனம் பண்ண வேண்டும்.

தன்னை வந்து அடைந்து கேட்கக்கூடியவர் களுக்கு, வேதத்தை நன்கு சொல்லிக் கொடுக்க வேண்டும்.

தான் நன்கு யக்ஞத்தைப் பண்ணவேண்டும்.

இதரர்களுக்கு ரித்விக்காக இருந்து யக்ஞத்தை நன்கு நடத்தி வைக்கவேண்டும்.

தான் நிறைய தானம் கொடுக்கவேண்டும்.

இதராள் கொடுத்தால் வாங்கிக் கொள்ள வேண்டும்.

இந்த ஆறும் பிராமணனின் நித்ய கடமைகள். ஒருத்தர் தானம் கொடுத்தால் 'வாங்க மாட்டேன்' என்று பிராமணன் சொல்லக் கூடாது. அவர்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்து இவன் அதை வாங்கிக் கொள்ளவேண்டும்.

இதை விசேஷமாக ஓரிடத்திலே சொல்லியிருக்கிறது: அடுத்த க்ஷணத்திலே ஒருத்தருக்குப் பிராண வியோகம் ஏற்படப்போகிறது; அவர் பிராணன் போய் விடும் என்கிற நிலை. அப்போது என்ன பண்ணுவார்கள் என்றால், அந்தச் சமயத்தில் பிராணன் போகாமல் தடுப்பதற்கு முடியும் என்று சாஸ்திரத்தில் சொன்னபடி செயல்படுவார்கள். அந்தச் சமயத்தில் அவர் தன் கையால் தொட்டு ஒரு தானம் பண்ணவேண்டும், ஒரு பிரும்மவித்துக்கு. காலபுருஷ தானம் என்று பெயர் இந்த தானத்துக்கு.

நல்ல கறுப்பு எள்ளை வெல்லப்பாகு வைத்துக் கிளறி அந்தக் கிளறிய எள்ளைக் கொண்டு யமன் மாதிரி ஓர் உருவத்தை உண்டாக்கி, அதை இந்த மனிதரைக் கொண்டு தொடச் செய்வார்கள். மரணப் படுக்கையிலே இருப்பவர் இப்படித் தொட்டுக் கொடுத்து தானம் பண்ணினால் அவர் உயிர் பிழைத்து

விடுவார் என்கிறது சாஸ்திரம். இதற்குப் பெயர் கால புருஷதானம்.

இப்படி தானம் கொடுப்பவர் நன்றாகப் பிழைத்து விடுவார் என்று சொல்கிற அதே இடத்திலே, அடுத்தது என்ன ஆகும் என்று கேட்டால், தானம் வாங்கிக் கொண்டவர் போய்விடுவார்!

அப்படி வாங்கிக் கொண்டவர் போய்விடுவார் என்றால் யாராவது வாங்கிக் கொள்ள வருவார்களா? இப்படியிருக்கையில் ஒரு பிராமணன் இந்த காலபுருஷ தானத்தை வாங்கிக் கொள்வதா? உயிர் போய்விடும் என்றால், எப்படி வாங்கிக் கொள்வது?

ஆனால், வாங்கிக் கொள்ள வருபவரிடம் ஒரு பெரிய தனம் இருக்கிறதே! 'காயத்ரி' ஆகிற தனம் அவரிடம் இருக்கிறது.

மற்றவை ஏதும் தனமே அல்ல! இவன் பொருளைத் தேடிக் கொண்டும், மற்றவர்களைத் தேடிக் கொண்டும் ஓடவே வேண்டாம். இவன் தன் கிருஹத் திலே இருந்துகொண்டு காயத்ரியை ஜபித்தானே யானால் இவனை நாடி எல்லாமே வரும் — இவன் இருக்கிற இடத்துக்கே வரும். இவன் செல்லும் இடமெல்லாம் சிறப்பு வரும்.

சுவானுஷ்டானத்திலே லோபம் ஏற்பட்டதானால் அப்போது மற்ற விஷயங்களுக்கெல்லாம் இவன் அல்லலுற வேண்டியதுதான். இந்த மாதிரி தானம் வாங்குகிறபோது ஒரு ஆயிரம் காயத்ரியை ஜபித்து விட்டு வாங்கிக் கொண்டால் அந்த தானத்திலே இவருக்குப் பிராண பயம் ஏற்படாது.

காயத்ரி மந்திரத்தினால் அவ்வளவு ரக்ஷணமானது ஏற்படுகிறது.

மனு ஸ்ம்ருதி என்ன சொல்கிறது... கட்டையினால் ஆன ஒரு யானை இருக்கிறது. தோலினாலான மான் இருக்கிறது. பார்க்கிறவர்களெல்லாம் யானை என்கிறார் கள்; மான் என்கிறார்கள்.

வடிவிலே மான் மாதிரியும், யானை மாதிரியும் இருப்பதனாலே யானை என்றும், மான் என்றும் விவரிக்கப்படுகிறது — சொல்கிறார்கள் — அவ்வளவு தான்.

அந்தக் களிறு பிளிறிக் கத்துமா? மான் துள்ளி ஓடுமா?

அந்த மாதிரி எந்த ஒரு பிராமணன் காயத்ரியை அத்யயனம் பண்ணவில்லையோ, அவன் கட்டை யினாலே ஆன யானையைப் போன்றவன்தான். கட்டையினாலான யானை எப்படி யானை என்று பெயர் பெறுகிறதோ, தோலினாலான மான் எவ்வாறு மான் என்று பெயர் பெறுகிறதோ, அப்படி பிராமணன் என்று வெறுமே அவன் பெயர் பெறுகிறான், அவ்வளவு தான்!

வேத அத்யயனத்துக்கு அத்தனை மகிமை. வேதத்தை யோகம் என்றொரு சொல்லாலும் குறிப்பிடு வதுண்டு.

**ஆ**ஸ்ரிதானாம் வத்ஸல: என்று பகவானுக்குப் பெயர். பிரபதன சுலபன் என்று ஒரு திருநாமம்.

அடிபணியக்கூடியவர்களுக்குப் பரம சுலபமாகக் கிடைக்கக்கூடியவன் அவன்.

பின்னால், சஹஸ்ரநாமத்தில் 'விஜிதாத்மா விதேயாத்மா, ஸத்கீர்த்தி சின்ன ஸம்சய:' என்கிற திருநாமங்கள் இதே அர்த்தத்தைத்தான் காட்டுகின்றன.

விஜிதாத்மா விதேயாத்மா என்று பராசர பட்டர் பிரித்துப் பொருளுரைத்தார்.

ஆதிசங்கர பகவத் பாதாள், விஜிதாத்மா / அவிதேயாத்மா என்று பதம் பிரித்துப் பொருளுரைத்தார்!

விஜிதாத்மா என்றால், எல்லாவற்றையும் ஜெயித்தவன்; அவிதேயாத்மா என்றால் யாருக்கும் வணங்காதவன் என்பது ஆதிசங்கரருடைய வாக்கு.

அவருடைய பாஷ்யத்திலே 'எல்லாரையும் ஜெயிக்கக்கூடியவன் பரமாத்மா; யாராலும் ஜெயிக்கப் படாதவன்' என்று வருகிறது.

எல்லாரையும் ஜெயிக்கக்கூடிய இந்தப் பரமாத்மாவே ஒரு சிலருக்கு வணங்கி நிற்கக்கூடியவனாகவும் இருக்கிறான். தன்னை அடிபணியக் கூடியவர்களை வணங்கி நிற்கிறான் பரமாத்மா. எதிரம்பு கோத்து, அவனை ஜெயிக்க முடியாது. திருவடியைப் பற்றியவர்கள் அவனைச் சுலபமாக ஜெயித்து விடலாம்.

பக்திஸ்ச்ய நியதா வீரா! 'பாவோ நான்யத்ர கச்சதி' என்றான் ஆஞ்சநேயன்.

"வீரன் என்றால் நீயல்லவா மஹாவீரன்! ஆனால், உன் வீரம் என்னிடத்திலே செல்லுபடியாகாது. உன்னை எதிர்ப்பவர்களிடத்தில் வேண்டுமானால் உன்னுடைய வீரம் செல்லுபடியாகலாம். ஆனால், உன் திருவடியைப் பற்றிய என்னிடத்திலே உன் வீரம் என்னவென்று காட்டி விட முடியும்? உன்னைத் தவிர

எனக்கு வேறெதிலேயும் மனது போகவில்லை" என்று பேசினான் ஆஞ்சநேயன்.

யக்ஞ யாகாதிகளினாலே பகவானை ஆராதிக்கக் கூடியவர்களுக்கு, இந்தச் சரீரத்திலே இருக்கக்கூடிய அவயவங்கள், சரீரத்தைப் பெற்றிருக்கும்படியான ஆத்மா என்று எல்லாவற்றுக்கும் க்ஷேமத்தை பகவான் உண்டுபண்ணுகிறான்.

ஆயுள், இந்த்ரியங்கள், அவற்றின் பலம், அதைத் தவிர மனம்—வாக்கு எல்லாமே நல்ல முறையில் செயல்படவேண்டும் என்பது அவா. இவை மொத்த மும் நல்ல முறையிலே செயல்படுவதுடன் இது மொத்தமும் பகவத் வினியோகமாக வேண்டும்.

வாக்கு இருக்கிறதென்றால், அவன் பெருமை பேசுகிற வரையில் அது வாக்கு.

ச்ரோத்ரம் என்றால் — அவன் பெருமையைக் கேட்டால் அது ச்ரோத்ரம்.

அவன் பெருமையைக் கேட்பதற்காக இந்தச் செவி. அவனை அடிபணிவதற்காக இந்தச் சரீரம். அவனை நினைப்பதற்காக இந்த மனம். அவன் பெருமையைப் பேசுவதற்காக இந்த நாக்கு — வாக்கு. அதற்காகத்தான் அனைத்தையும் பகவான் கொடுத்திருக்கிறான்.

அந்த மாதிரி இந்த இந்த்ரியங்களை பகவத் விஷயத்தில் ஈடுபடுத்தினோமேயானால், இந்த ஆத்மா கெட்டொழியாமல், நல்ல முறையிலே அவன் ஏற்கக் கூடிய ஹவிஸாக விளங்கும்.

ஆத்மார்ப்பணம் என்கிற சிறந்த யக்ஞத்தை நாம் பண்ணி, பகவத் அனுக்ரஹத்தைச் சம்பாதிக்க முடியும் என்று வேதமானது யக்ஞ பிரகரணத்திலே காட்டிக் கொடுக்கிறது.

அதையேதான் 'யோகோ யோக விதாம் நேதா பிரதான புருஷேச்வர: நாரசிம்ஹவபு: ஸ்ரீமான் கேசவ புருஷோத்தம:' என்கிறது சஹஸ்ரநாமம்.

யோகமாக பகவானே இருக்கிறான் என்று பார்த்தோம். யோக க்ஷேமத்தை உலகத்தவர்க்கு உண்டு பண்ணுகிறான்.

யோகிகளிடத்திலே நித்யவாஸம் பண்ணக் கூடியவன் அவன். அவனுக்கே யோகமென்று பெயர் — என்றெல்லாம் ஏற்கெனவே பார்த்தோம்.

பராசர பட்டர் இந்த யோக சப்தத்துக்கு மிக அழகாக வியாக்யானம் செய்கிறார்:

அடையப்படுகிறவனானதனாலே அவன் யோக: என்று அழைக்கப்படுகிறான்.

ஜீவாத்மா பகவானை ஆராதித்தால், அந்த ஆராதனத்தினாலே சந்துஷ்டி அடைந்து, பரமாத்மா அவனை அனுக்கிரஹம் பண்ணுகிறான். அவன் இருக்கிற இடத்துக்கே இவன் அழைத்துச் செல்லப் படுகிறான். பகவானாலேயே அழைத்துச் செல்லப் படுகிறான்.

அப்படி நம்மை அழைத்துச் செல்பவன், தன்னை வந்து அடையச் செய்கிறவன் யோக: என்ற சப்தத்தால் அழைக்கப்படுகிறான்.

இந்தப் பொருள்பட வராஹ சரம சுலோகமும் கீதையின் 'சர்வதர்மான் பரித்யஜ்ய' சுலோகமும் அமைந்திருக்கின்றன. இப்படிப்பட்ட சுலோகங்களுக் கெல்லாம் மூலமாக, வராஹ அவதாரத்திலே பகவான் பேசியதை ஆண்டாள் சொல்கிறாள்.

## 7

ஆண்டாள் என்ன சொல்கிறாள்:

பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்குப்பண்டு ஒருநாள்
மாசு உடம்பில் நீர்வாரா மானம் இலாப்பன்றி யாம்
தேசு உடைய தேவர் திருவரங்கச்செல்வனார்
பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே

அந்த எம்பெருமான் வராஹ அவதாரம் பண்ணிப் பேசிய பேச்சை யாராவது அழித்துவிட முடியுமோ! அது பேர்க்கவும் பேராத பேச்சல்லவோ என்று ஆண்டாள் கொண்டாடுகிறாள்.

அப்படிப்பட்ட பகவானின் திருநாமத்தை நம் உடலிலே பலமிருக்கிறபோது, புஷ்டியிருக்கிறபோது, தேஜஸ் இருக்கிறபோது, எல்லாம் நல்ல முறையிலே வேலை செய்கிறபோது, நாடி—நரம்பெல்லாம் நல்ல முறையிலே இயங்குகிறபோது நன்றாக உரக்கச் சொல்ல வேண்டும்.

நல்ல வாக்கு அமைந்திருக்கிறபோதே அவன் திருநாமத்தை நன்கு வாய்விட்டுச் சொல்லுங்கள்.

அதே மாதிரி, அவன் திருவடியிலே நல்ல புஷ்பங் களைக் கொண்டு வந்து அர்ச்சனை பண்ணுங்கள்.

நீங்களே புஷ்ப செடியை வைத்து, நீங்களே புஷ்பங் களைப் பறித்து, அதைக் கொண்டுவந்து பகவானுடைய

திருவடியிலே அர்ச்சனை பண்ணவேண்டும். ஒருத்தரிடத்திலே புஷ்பம் வாங்குவது அதமம். விலை கொடுத்து வாங்கிப் பண்ணுவது அதமாதமம்!

தோட்டம் வைத்து, அதிலேயிருந்து புஷ்பம் எடுத்து அர்ச்சனை பண்ணினால் மிகுந்த சந்துஷ்டி அடை கிறான் பரமாத்மா.

புஷ்பங்களால் இவ்வாறு பூஜிப்பதோடு இந்த ஆத்மாவை 'அவனுடையது' என்று அவன் திருவடி யிலே சமர்ப்பித்தல் வேண்டும்.

இந்த மூன்று காரியங்களை யார் பண்ணுகிறார் களோ, தங்கள் வாழ்நாளில் திருநாமத்தை நன்கு உச்சரித்து, அவன் திருவடியிலே புஷ்பங்களை அர்ச்சித்து, யார் ஆத்ம சமர்ப்பணம் என்கிற சரணாகதியைப் பண்ணுகிறார்களோ, அவர் அந்திம காலத்திலே கட்டை மாதிரியும் கல் மாதிரியும் விழுந்து கிடக்கிறபோதுகூட பகவான் கைகொடுப்பான். எல்லோரும் அவரைக் கைவிட்டுவிடுவார்கள். ஆனால் 'அஹம் ஸ்மராமி மத்பக்தம்! நயாமி பரமாம் கதிம்' என்று பகவான் கைகொடுப்பான்: "அவன் என் பக்தன், என் பெயரைச் சொன்னவன், என் திருவடியிலே ஆத்ம சமர்ப்பணம் பண்ணியவன். ஒரு நாளும் அவனை நான் கைவிடமாட்டேன்..." என்று பகவான் அந்திம காலத்திலே வந்திருந்து இந்த ஆத்மாவை சுவீகரித்துக் கொண்டு போகிறான்.

ஆகையினாலே, முக்தி உபாயமாக பரமாத்மா இருக்கிறான் என்பதை யோக: என்ற சப்தம் காட்டுகிறது.

பெரியாழ்வார் ரொம்ப அழகாகச் சொல்கிறார்

ஒருத்தன் மரணப் படுக்கையிலே இருக்கிறபோது அவனைச் சுற்றியிருப்பவர்கள் மிகுதியாக வாட்டுகிறா களாம்... "நீ சேர்த்து வைத்த பொருளை எங்கே வை திருக்கிறாய்?" என்று கேட்கிறார்களாம்! 'எவ்வள வைத்திருக்கிறாய்?' என்று அவர்கள் கேட் வில்லை! அவன் படுக்கையைச் சூழ்ந்து நின்று அவ மனத்தைக் குத்துகிறார்களாம்! "பொருள் வைத் துண்டாகில் சொல்லு" என்கிறார்களாம்!

இதன் தொனி என்னவென்றால் 'நீ எங் பொருள் சேர்த்து வைத்திருக்கப்போகிறாய்? இருக்கி போதே எல்லாவற்றையும் அழித்துவிட்டாயே. ஏதேனு மிச்சம் மீதி இருந்து, எங்கேனும் வைத்திருந்தா சொல்லு!' — என்பதாகும்!

"அதைச் சொல்லிவிட்டுப் போய்விட்டாயானா பரவாயில்லை'' என்று சித்ரவதை பண்ணு கிறார்களாம்.

இப்படி ஒரு காலம் வரும் என்று இவர் மு கூட்டியே உணர்ந்து பகவான் நாமாவைச் சொல் ஆத்ம சமர்ப்பணம் பண்ணிவிட்டார்.

'மார்வம் என்பதோர் கோயில் அமைத்து,
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பதோர் பூவிடவல்லார்க்கு
அரவ தண்டத்துள் உய்யலுமாமே!'

என்கிறார் ஆழ்வார்.

மார்பகமாகிற உயர்ந்த கோயிலில் மாதவனாகி தெய்வத்தை நாட்டி, அவன் திருவடியிலே பக்தியாகி புஷ்பத்தை பூஜிக்கக்கூடியவர்களுக்கு யமசர்ச்சை

கிடையாது. நரக லோகத்திலே போய் அவர்கள் அல்லலுறவே வேண்டியதில்லை.

அந்திம காலம் என ஒன்று வரும் என்பதனை உணர்ந்து, 'அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன். அரங்கத்தரவணை பள்ளியானே' என்று உடம்பில் பலம் இருக்கிறபோதே, இப்போதே சொல்ல வேண்டும் அவன் நாமாக்களை. அந்திமகாலத்திலே 'சொல்லு சொல்லு' என்று யாராவது நினைவூட்டினாலும் சொல்ல வராது. நல்ல காலத்திலேயே சொல்லவில்லை; அந்திமகாலத்தில் யமனுடைய பாசத்தில் அகப்பட்டுக் கொண்டவர்களால் எப்படிச் சொல்ல முடியும்?

ஒருவருக்கு மித்ரர் ரொம்ப நண்பர். அவர் மாயும் தறுவாயில் இருக்கிறார். அவருக்கு நிறைய பிள்ளைகள். அதிலே கடைசிப் பிள்ளையின் பெயர் கோவிந்தன்.

இவர் என்ன பண்ணினார், கோவிந்தன் என்கிற பிள்ளையைக் கொண்டு போய் மரணப் படுக்கையிலிருந்த தந்தையின் முன் நிறுத்தினார். "இவன் யார்?" என்று கேட்டார், பிராணன் போகிறவரைப் பார்த்து.

அவர் தன் பையனைப் பார்த்து "கோவிந்தன்" என்று சொல்லுவார் என்பது இவருடைய அபிப்ராயம். ஆனால், இவர் என்ன பண்ணினார்... "இவனா இவன் என் கடைசி பிள்ளை" என்று சொல்லிவிட்டுப் பிராணனை விட்டுவிட்டார்!

இப்படி கோவிந்த சப்தம் வாக்கிலே வரமாட்டேன் என்கிறது!

ஏன்...? யம பாசத்துக்கு உள்ளானவன், கடைசி — அந்திம காலத்திலே பகவான் நாமாவைச் 'சொல்;

:

சொல்' என்று வற்புறுத்தினாலும் சொல்ல மாட்டான். வாய் ஒரு பக்கமாக இழுக்கும். கண் ஒரு பக்கம் இழுக்கும். தாய் ஒரு பக்கம், தாரம் ஒரு பக்கம் அரற்ற, தீ ஒரு பக்கமாக சேர்வதன் முன்னம் — அந்த மாதிரி காலத்திலே எப்படி பகவான் நாமா வரும்? நல்ல நிலைமையிலே இருக்கிறபோதே பகவான் நாமாவைச் சொல்லாதவன் அந்திம காலத்திலே எங்கே யிருந்து சொல்ல முடியும்! அது மிகவும் கஷ்டமான தொரு நிலையானதனாலே, இப்போதே சொல்லிவிடு பகவான் நாமாவை என்கிறார்கள் ஆசார்யர்கள்

இப்படி நித்யமே ஜீவனால் அடையப்படுகிறவ னாக அந்த பரமாத்மா இருப்பதனாலே, அவன் கட்டாயம் வந்து (நமது அந்திமக் காலத்தில்) தான் சொன்ன வண்ணம் செய்வான்.

சொன்ன வண்ணம் செய்யும் பெருமான் என்றே பெயர் உண்டு பகவானுக்கு.

'நான் வந்து அழைத்துக்கொண்டு போகிறேன்' என்று சொல்லியிருக்கிறான் அல்லவா? ஆதலால் ஒரு நாளும் அதை மாற்ற மாட்டான் அவன்.

இப்படி ஜீவனால் அடையப்படுகிறவனுக்கு யோக: என்று பெயர்.

வந்து நம்மை அழைத்துக்கொண்டு போகக் கூடியவன். இதை இன்னும் அழகாகச் சொல்ல வேண்டுமானால் பின்னால் சஹஸ்ரநாமத்தில் வருகிற 'மார்கோநேயோ அனயோ நய: வீர: சக்திமதாம் சிரேஷ்ட: தர்மோ தர்ம விதுத்தம:' என்கிற நாமங்களைக் கொண்டுதான் சொல்ல வேண்டும்.

மார்க: வழியாய் இருக்கக்கூடியவன். நய:— அந்த மார்க்கத்திலே அழைத்துக்கொண்டு போகக்கூடியவன்.

நயதீதி நய: உயர்ந்த அர்ச்சிராதி மோக்ஷ மார்க்கத்திலே அழைத்துக்கொண்டு போகக்கூடியவன்.

ஆகையினாலே எம்பெருமானே வழியாகவும் இருக்கிறான். அந்த வழியினாலே அடையப்படக்கூடியவனாகவும் இருக்கிறான்.

நல்வழி அவன் என்பதை யோகம் என்கிற சப்தத்தினாலே தெரிந்துகொள்கிறோம்.

யோக விதாம் நேதா — யோகமாகிற எம்பெருமானை நன்கு உணர்ந்தவர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்குகிறான் பரமாத்மா.

எல்லோருக்கும் மேம்பட்டவனாக அவன் விளங்குவதனாலே 'நேதா' என்று சொல்கிறார்கள் பகவானை.

யோக வித்துக்களுக்கு நேதா. பிரும்ம வித்துகளுக்கும் நேதா.

**வ**ழியாகவும், வழியால் அடையப்படுபவனாகவும் நேதாவாகவும் இருப்பவன், இன்னும் எப்படி இருக்கிறான்?

பிரதான புருஷனாக இருக்கிறான்.

பிரதான புருஷேச்வர:— இது ஒரே திருநாமம்.

பிரதானம் என்று ஒன்று: புருஷன் என்று ஒன்று.

பிரதானம் என்றால் ப்ரக்ருதி மாயா.

இந்தப் பிரகிருதி இருக்கிறதே. அசித்பதார்த்தம்... அசேதனம்... அதற்குப் பிரகிருதி என்று பெயர்.

புருஷன் என்று ஜீவனுக்குப் பெயர். இந்த இரண்டுக்கும்—அதாவது பிரகிருதி, ஜீவன் இரண்டுக்கும் ஈசுவரன் பிரதான புருஷேச்வர:

மூன்று ரத்தினங்கள் சொல்லுவார்கள். ஸ்தோத்திர ரத்தினம், புராண ரத்தினம், மந்திர ரத்தினம்.

ஆளவந்தார் என்கிற ஆசார்யரால் இயற்றப்பட்ட ஸ்தோத்திரத்துக்கு 'ஸ்தோத்திர ரத்தினம்' என்று பெயர்.

நல்ல வாக்கு படைத்தவர் ஆளவந்தார். சிறிய வயதிலேயே அவர் சிறந்த வாக்மி. அப்போது இந்த சோழ சமஸ்தானத்திலே ஆக்கி ஆழ்வார் என்கிற மஹா வித்வான் ஆஸ்தான வித்வானாக எழுந்தருளியிருந்தார்.

ஒரு நாள் சோழ ராஜாவிடம், "இந்த உலகத்திலே இருக்கிற பண்டிதர்களையெல்லாம் நான் ஜெயிக்கிறேன். அப்படி நான் ஜெயித்து, அந்தப் பெருமை உங்களுக்கு—உங்கள் சோழ தேசத்துக்கு ஏற்படும்" என்று ராஜாவினிடத்திலே சொன்னார் ஆக்கி ஆழ்வார்.

இப்படி வாதத்திலே எல்லா பண்டிதர்களையும் ஜெயிக்கிறேன் என்று வெறுமே சொல்வது மஹா பாவம் என்கிறது சாஸ்திரம். அவர்களாக வாதுக்கு வந்தால் வாதாடி ஜெயிக்கலாமேயொழிய அனாவசியமாக ஒருத்தரைக் குறைத்து, தான் பெரிய வித்வான் என்று காட்டிக்கொள்வதற்காக மற்றவர்களை பரீக்ஷை பண்ணுவது கூடாது என்கிறது சாஸ்திரம்.

அந்த சாஸ்திரத்தை மீறி வாதுக்குப் போனார் ஆக்கி ஆழ்வார்.

# 8

வித்யா கர்வம் கூடாது என்பதை மனு ஸ்ம்ருதி வெகு அழுத்தமாகச் சொல்கிறது.

குருவை—தனக்கு வித்யை கற்றுக் கொடுத்த ஆசார்யனை—அது, இது என்று ஏக வசனத்திலே பேசுகிறவன்; குருவிடம் எல்லாவற்றையும் கற்றுக் கொண்ட பிற்பாடு, 'அவர் எனக்கு என்ன கற்றுக் கொடுத்தார்? எங்கள் வம்சமே பண்டித வம்சமாக்கும்; அதனால் பலது தெரிந்து கொண்டேன்' என்று அவரை மட்டமாகச் சொல்கிறவன் ஒருத்தன் இருக்கிறான்.

இன்னொருத்தனோ, 'ஆஹா! அவர் பெரிய கனபாடியோ! அவருக்கு என்ன தெரியும்?' என்று ஒரு பண்டிதரைப் பரீக்ஷை பண்ண ஆரம்பிக்கிறான்.

— இப்படிப்பட்டவர்களெல்லாம் அடுத்த ஜன்மாவிலே ஸ்மசானத்திலே பட்டமரமாகத் தோன்றுவார்களாம். காக்கை, காடை போன்ற பிணங்கொத்திப் பறவைகளெல்லாம் அந்தப் பட்ட மரத்திலே உட்கார்ந்து கொண்டு மூக்கைத் தீட்டும் என்கிறது மனு ஸ்ம்ருதி.

இதைக் கேட்டுக்கொண்டே இருந்த ஒருத்தர்,

"இது என்ன சிக்ஷை (தண்டனை) — மனு ஸ்ம்ருதியிலே சொல்லியிருக்கிற தண்டனை? மனுஷனாக

ஆறறிவு படைத்து, இவ்வளவு சக்தி — சாமர்த்தியங்கள் இருக்கிறபோதே அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை. மரமாகப் போனபிற்பாடு அவன் கோயிலில் இருந்தால் என்ன? ஸ்மசானத்திலே இருந்தால் என்ன? அவன் மீது கருடன் உட்கார்ந்தால் என்ன? பிணங்கொத்தி உட்கார்ந்திருந்தால் என்ன?'' என்று கேட்டான்.

“அதுதான் இல்லை!'' என்று அவனுடைய ஆசார்யர் அவனுக்கு விளக்கினார். “மரமாக இருந்தாலும் மரத்துக்குள்ளே அந்த ஆத்மா இருந்து அவஸ்தைப் படுகிறது. எதைக் கூடாது என்று சாஸ்திரம் சொல்கிறதோ, அதைத் தவிர்ப்பதே உத்தமம்” என்றார்.

இதே மனு ஸ்ம்ருதியிலே, காலை வெயிலில் அதிக நேரம் நிற்கவேண்டாம் என்று சொல்லியிருக்கிறது. அது கெடுதல். அந்த சூர்ய ஒளி விகாரங்களை ஏற்படுத்தும். அதனால் அதிக நேரம் பிராத: கால வெயிலில் நிற்கலாகாது.

அதே மாதிரி, ஸ்மசானத்திலிருந்து வருகிற காற்றைச் சுவாசிக்கலாகாது.

‘உடைந்துபோன ஆசனத்தில் உட்கார்ந்து ஜபம் பண்ணாதே’ என்கிறது சாஸ்திரம்.

சின்னதாக இருந்தாலும் பூஜைக்கு அமரும் பலகை ஒரே மரத்தில் செய்ததாக இருக்க வேண்டும். இரு பலகைகளை இணைத்துச் செய்தால் நடுவிலே ஒரு கோடு இருக்கும். அந்த மாதிரி ஆசனத்தில் உட்கார்ந்து விட்டு, “எனக்கு மந்திரம் சித்திக்கமாட்டேனென்கிறது. உட்கார்ந்தால் ஏதோ யோசனையெல்லாம் வருகிறது; யாரோ ஒருத்தர் வந்துவிடுகிறார். ஜபம் பண்ணவே முடியவில்லை...” என்று சொல்லிப் பயனில்லை.

இப்படியெல்லாம் யாராவது சொன்னால், அவர் உட்கார்ந்திருக்கிற ஆசனத்தை எடுத்துப் பார்க்க வேண்டும். அவர் போட்டுக் கொண்டிருக்கிற ஆசனம் சரியாக இருக்கிறதா? அதன் மேலே இவர் எப்படி உட்கார்ந்திருக்கிறார் என்று எல்லாவற்றையும் பார்க்க வேண்டும். இதெல்லாம் ரொம்ப முக்கியம். இவை யெல்லாம் சரியாக இருந்தால்தான் மந்திரமானது நல்ல முறையிலே ஓடும். இல்லையென்றால் பல தடங்கல்கள் ஏற்படும்.



உடைந்துபோன மணையிலே உட்காரக் கூடாது என்று மனு ஸ்ம்ருதியிலே அழகாகச் சொல்லி யிருக்கிறது.

அதே மாதிரி, ஸ்மசானப் புகையை சுவாசிக்கவே கூடாது என்றும் சொல்கிறது. ஆனால், குருவை நிந்தனை செய்பவனோ ஸ்மசானத்திலே பட்ட மரமாகத் தோன்றி, எந்தப் புகையை சுவாசிக்கவே கூடாதோ அதை சுவாசித்துக்கொண்டே நிற்கக்கூடிய நிலை ஏற்படுகிறது.

மனிதப் பிறவியிலே கை தட்டி ஒருத்தரைக் கூப்பிடணுமானால் கை இருக்கிறது. கூப்பிட வாக்கு இருக்கிறது. ஆனால், ஸ்மசானத்திலே மரமாகப் போன பிற்பாடு கை தட்ட முடியாது. இன்னொருத்தரைக் கூப்பிட முடியாது. அவஸ்தையை அனுபவித்துக் கொண்டேயிருக்க வேண்டியதுதான்.

இப்படியெல்லாம் சாஸ்திரத்திலே சொல்லப் பட்டிருந்தாலும் ஆக்கி ஆழ்வானுக்கு 'விநாச காலே விபரீத புத்தி' ஏற்பட்டது. எல்லாரையும் வீணே வாதுக்கு அழைத்தான்.

அவருடைய குரு ஒரு குருகுலத்திலே வாஸம் பண்ணிக் கொண்டிருந்தார். ராஜா பல்லக்கை அனுப்பி ஊரிலிருக்கும் ஆசார்யர்களையெல்லாம் வாதுக்கு அழைத்தான். சேவகர்களெல்லாம் இந்த குருகுலத்துக்கு வந்து, "பெரிய சபை நடக்கிறது; ஆக்கி ஆழ்வான் என்கிற வித்வானோடு வாக்குவாதம் பண்ண வேண்டும்'' என்று அழைக்கிறார்கள்: "ராஜா அழைத்துக்கொண்டு வரச் சொன்னார்'' என்று கூறுகிறார்கள்.

அப்போது அந்த குருகுலத்திலே ஆசார்யர் இல்லை. வெளியே போயிருந்தார். அங்கே குருகுலத்தில் ஒரு சின்னப் பையன்: "ஆசார்யர் அளவுக்கு எதற்கு? நானே வருகிறேன்" என்றான், சேவகர்களைப் பார்த்து!

அங்கேயிருந்து சேவகர்கள் போய் ராஜாவினிடத்திலே கேட்டார்கள். 'இந்த மாதிரி ஒரு சின்னப் பிள்ளைதான் வரேனென்கிறான். அழைத்துக்கொண்டு வரலாமா?' என்று கேட்டார்கள்.

"வயது நிர்ணயம் கிடையாது. யார் வேண்டுமானாலும் வரலாம்" என்றவுடனே, அந்தச் சின்னப் பிள்ளையான யாமுனேயனை பல்லக்கிலே உட்கார வைத்து அழைத்துப் போகிறார்கள்.

உப்பரிகையிலே ராஜா நின்றுகொண்டிருக்கிறான். ராணியும் நின்றுகொண்டிருக்கிறாள்.

ராணி சொல்கிறாள்: "இந்தக் குழந்தைதான் ஜெயிக்கும்."

ராஜா சொல்கிறான்: "இந்தக் குழந்தை ஜெயிக்கிறதாவது? எப்பேர்ப்பட்ட வித்வான் ஆக்கி ஆழ்வான்? அவரை ஜெயிக்க முடியுமா?"

"இந்தக் குழந்தை ஜெயிக்கவில்லையானால் நான் ராணி என்கிற ஸ்தானத்தை விட்டு விடுகிறேன்" என்றாள் அவள்!

"இந்தக் குழந்தை ஜெயித்ததானால் பாதி ராஜ்யத்தைக் கொடுத்து விடுகிறேன்" என்றார் ராஜா!

அப்போது அந்தக் குழந்தை வீதி வழியே வந்தபடி ஒரு சுலோகம் சொல்கிறது. அந்த சுலோகத்தின் பொருள்:

"நாங்கள் வெறும் கவிகள் அல்ல; புஸ்தகப் புழுக்கள் அல்ல... அனைத்தையும் அப்படியே மனப் பாடம் பண்ணி ஒப்பிப்பதற்கு. நாங்கள் யார்...? எதிர்த்துவரக்கூடிய பிரதிவாதி என்கிற யானையின் மஸ்தகத்தின் மேல் ஏறி உட்கார்ந்துகொண்டு அதன் மஸ்தகத்தைப் பிளக்கக்கூடிய சிம்ஹங்கள் நாங்கள்!"

குழந்தை வித்வான் ஆக்கியாழ்வானோடு வாதிடு வதைக் காண சபை கூட்டப்பட்டது. 'ஜெய விஜயீ பவ!' என்று சிஷ்யர்கள் புடை சூழ்ந்து கோஷமிட, சபையிலே வந்தமர்ந்தார் ஆக்கி ஆழ்வான். ராஜாவைப் பார்த்து, "இன்றைக்கு என்னோடு வியாக்யார்த்தம் பண்ணுவதற்கு—தர்க்கம் பேசுவதற்கு — யார் வந்திருக் கிறார்கள்?" என்று கேட்டார்.

"இவர்தான்!" என்று ஒரு சின்னப் பையனைக் காண்பித்தார் ராஜா.

"இவனென்ன அல்ப முயல்குட்டி! நானோ ஒரு சிம்ஹம். என் எதிரிலே இப்படியொரு அல்ப முயல் குட்டியா? இது என்ன பேசும்?" என்று கர்ஜித்தார் ஆக்கி ஆழ்வான். "என்ன பேசும் என்று எனக்குத் தெரியாது. நீங்களே பேசலாமே!" என்றார் ராஜா.

உடனே அந்த வித்வான் அந்தக் குழந்தையைப் பார்த்து, "எந்த சாஸ்திரத்தில் பிரவேசம்? என்ன பேசப் போகிறாய் நீ?" என்றார்.

அதற்கு அந்தக் குழந்தை, "எல்லா சாஸ்திரமும் எனக்குத் தெரியும்" என்றது.

"அப்படியானால், நீ சின்னக் குழந்தையானத னாலே உனக்கே முதல் அவகாசம் தந்தேன்" என்றார்

ஆக்கி ஆழ்வான். "என்னை என்ன கேட்கப் போகிறாய்?" என்றார்.

அந்தக் குழந்தை சொன்னான்: "நான் என்னவெல்லாம் இருக்கிறது என்று சொல்கிறேனோ, அதையெல்லாம் தேவரீர் 'இல்லை' என்று சொல்ல வேண்டும். எது எதுவெல்லாம் இல்லை என்று நான் சொல்கிறேனோ, அதையெல்லாம் 'இருக்கிறது' என்று தாங்கள் ஸ்தாபனம் பண்ணவேண்டும். நீங்கள் சொல்லுவதை எல்லோரும் சாஸ்திர ரீதியாக ஒப்புக் கொள்ளும்படியாக இருக்க வேண்டும். அவ்வாறு பதில் சொல்ல முடியாது போனால், தோற்றவராவீர்கள்; பதில் சொன்னால் ஜெயித்தவர் ஆவீர்கள்" என்றது குழந்தை.

"கேளு!" என்றார் ஆக்கி ஆழ்வார்.

அவரைப் பார்த்து முதல் கேள்வியே பிரும்மாண்ட கேள்வியாகக் கேட்கிறது குழந்தை.

"உன் அம்மா மலடி அல்ல!" என்கிறது!

இதற்கு என்ன பதில் சொல்ல வேண்டும் அவர்...?

"எங்கம்மா மலடிதான்" என்று சொல்ல வேண்டும். எப்படிச் சொல்வார் அவர்!

"அடுத்த கேள்வி கேட்கட்டுமா?" என்கிறான் குழந்தை. "இதற்குப் பதில் சொல்ல முடியாவிட்டால் அடுத்ததைப் பார்ப்போம்" என்றான்.

அப்படியே நடுநடுங்கிப் போய்விட்டார் ஆக்கி ஆழ்வான். முதல் கேள்வியே பிரும்மாஸ்திரமாக அல்லவா இருக்கிறது. அதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. அடுத்த கேள்வி எப்படி இருக்குமோ?

அந்தக் குழந்தை அடுத்தபடியாகக் கேட்கிறது...

---

## 9

முதல் கேள்வியே பிரும்மாஸ்திரமாக இருக்கிறது இங்கே! பதில் சொல்ல முடியவில்லை. அடுத்த கேள்வி எப்படி இருக்குமோ? என்று ஆக்கி ஆழ்வான் மிரள்கிறார்.

குழந்தை கேட்கிறது: "இதோ உட்கார்ந்து கொண்டிருக்கிறாரே இந்த மகாராஜா, இவர் ஸார்வபௌமன்" என்றது.

அப்போது ஆக்கி ஆழ்வார் என்ன பதில் சொல்ல வேண்டும்...? 'இவர் ஸார்வபௌமன் இல்லை' என்றல்லவா சொல்ல வேண்டும். ராஜாவினிடத்திலே ஆஸ்தான வித்வானாக இருந்து கொண்டு அவ்வளவு பெரிய சபையிலே அவர் ஸார்வபௌமன் அல்ல என்று சொன்னால் என்ன நடக்கும்?... சிரச்சேதம் தான் நடக்கும்!

அதனால் ஆக்கி ஆழ்வானுக்குப் பதில் சொல்ல நா எழவில்லை. அதிலேயும் விழித்துக்கொண்டு நின்றார்.

மூன்றாவது கேள்வி ரொம்ப விபரீதமான கேள்வி. "இந்த மூன்றாவது கேள்வியைக் கேட்கட்டுமா?" என்று குழந்தை கேட்கிறது. அவர் நடுநடுங்கிப் போய்விட்டார். வாயே எழவில்லை. இருந்தாலும் அது மூன்றாவது கேள்வியைக் கேட்கிறது:

"இதோ இருக்கிற ராஜ பத்னி மஹா பதிவ்ரதை" என்கிறது குழந்தை.

அப்போது அவர் என்ன பதில் சொல்ல வேண்டும். அவள் பதிவ்ரதை அல்ல என்றல்லவா மறுத்துச் சொல்லவேண்டும். இதற்கும் பதில் சொல்ல முடியவில்லை அவரால்.

ஒரு கேள்விக்கும் பதில் சொல்ல முடியாமல் தவிக்கிறார் ஆக்கி ஆழ்வான். அப்போது நினைக்கிறார். 'என் வித்யா கர்வமே இப்படி ஒரு சிறிய பிள்ளை வடிவமாக வந்து என்னைப் பரீக்ஷிக்கிறது. கடுகு சிறுத்தாலும் காரம் போகவில்லை என்கிற மாதிரி, இத்தனை துளியூண்டான சிறுவன் என்னைக் கேள்வி கேட்கிறான்.'

ஆனால், அவருக்கு இத்தனை பட்ட பிறகும் புத்தி வரவில்லை. "இதெல்லாம் என்னைக் கேட்டாயே... உனக்கு இதற்கெல்லாம் பதில் தெரியுமா?" என்று கேட்கிறார்.

"விடை தெரியாமலா உன்னிடம் நான் கேள்வி கேட்டேன்?" என்றது குழந்தை.

"அப்படியானால், சொல். பதில் சரியாகச் சொல்லிவிட்டாயானால் உனக்கு நான் அடிமை" என்கிறார் ஆக்கி ஆழ்வான்.

அப்போது அந்தக் குழந்தை பதில் சொல்ல ஆரம்பித்தது. முதல் சவாலுக்கு அது பதில் சொன்னவுடனேயே சபை முழுக்க கைதட்டி விட்டது. ஆக்கி ஆழ்வானே கை தட்டிவிட்டார். அவரையும் அறியாமல்.

ஒரு மரம் தோப்பாகாது என்று சொல்வார்கள். ஒரு பெண் வந்து சேவிக்கும்போது வேதம் சொல்லும்

ஆசிமந்திரத்தில், “பத்துப் பிள்ளைகளை நீ பெற வேண்டும். பதினோராவது பிள்ளையாக உன் பர்த்தாவை (கணவனை) நீ பாவிக்க வேண்டும்” என்று வருகிறது.



கடைசி பிள்ளையினிடத்திலே தாயாருக்கு அன்பு மிகுதியாக இருக்குமாம். ஆகையினாலே, பர்த்தாவினிடத்திலே அன்பு குறையாமல் வளர வேண்டும் என்று வேதம் அனுக்கிரஹம் பண்ணுகிறது.

வேதத்தின் வாக்குப்படி பத்துப் பிள்ளைகள் பெற வேண்டும் என்று ஆசி இருப்பதால் ஒரு பிள்ளையைப்

பெறுவதன் மூலம் மலட்டுத் தன்மை நீங்காது என்கிறது, சாஸ்திரம். நிறைய பிள்ளைகள் பிறக்க வேண்டும் என்கிறது.

இங்கே ஆக்கி ஆழ்வான் ஒரே பிள்ளை தன் அம்மாவுக்கு. ஆகையினாலே அதை உணர்ந்து, அந்த தர்க்கப்படி தனது கூற்றை நிரூபித்தது அந்தக் குழந்தை.

ஆக்கி ஆழ்வானுக்கு ஆச்சர்யம். மூக்கிலே விரலை வைத்தார்.

அடுத்து, 'இந்த ராஜா ஸார்வபௌமன் இல்லை' என்று சொல்ல வேண்டும்.

ஸார்வபௌமத்துவம் என்றால் எது...? எவனுடைய பரிபாலனத்தில் சூர்யன் அஸ்தமிக்காமலிருக்கிறானோ அவனை ஸார்வபௌமன் என்று சொல்லலாம்.

பல த்வீபாந்தரங்களிலே இவன் பரிபாலனம் நிகழ வேண்டும். அம்பரீஷ சக்கரவர்த்தியை ஸார்வ பௌமன் என்று சொல்கிறார் சுகபிரும்மம். ஏனென்றால், பல த்வீபங்களிலே அவன் பரிபாலனம், அவன் கொடி பறக்கிறது, அங்கெல்லாம். அப்படிப் பல இடங்களிலே பரிபாலனம் பண்ணக்கூடிய பெரிய ராஜாவைத்தான் ஸார்வபௌமன் என்று சொல்ல லாமேயொழிய சோழ நாட்டுக்கு மட்டும் அதிபதியான ஒருவனை ஸார்வபௌமன் என்று அழைக்க முடியாது. அந்தப் பக்கத்தில் சேர நாட்டிலே இவன் காலை வைத்தால் வெறுமே இருப்பார்களா? பாண்டிய நாட்டிலே காலை வைத்தால் சும்மா இருப்பார்களா? ஒரு பரிமிதமான — வரையறுக்கப்பட்ட — பிரதேசத் துக்கு ராஜா இவர். ஸார்வபௌமன் என்று இவரை எப்படிச் சொல்லமுடியும்? அந்த ராஜாவே அதை ஒப்புக்கொள்ள வேண்டுமே!

மேலும், பாவமே இல்லாதவனைத்தான் ஸார்வ பௌமன் என்று சொல்லலாம். ராஜா பாவம் பண்ண வில்லையென்றால் கூட, ஜனங்கள் பண்ணுகிற பாவம் ராஜாவுக்குப் போய்ச் சேரும். ராஜா பண்ணுகிற பாவம் யாருக்குப் போய்ச் சேரும் என்று கேட்டால், அந்த தேசத்தின் புரோஹிதர்களுக்குத்தான் போய்ச் சேரும்!

அப்படியானால் புரோஹிதர்களுக்கு எவ்வளவு பொறுப்பு இருக்கிறது பாருங்கள்! ராஜாவினிடத்திலே தர்மத்தை எடுத்துச் சொல்லி இன்னின்ன நேரத்தில் இன்னின்ன காரியம் பண்ணவேண்டும் என்று சொல்லி நல்ல காரியத்தை நடத்தி வைத்துக்கொண்டே இருக்கவேண்டும் புரோஹிதர்கள். இல்லையானால் அந்த ராஜாவுக்குப் பாவம் சம்பவிக்கும்; அதுவே புரோஹிதர்களுக்கும் வந்து சேரும்.

இந்த சாஸ்திரப்படி ஜனங்கள் பண்ணுகிற பாவம் ராஜாவுக்குப் போய்ச் சேருமானதனாலே அவன் பாவம் இல்லாதவன் என்று எவ்வாறு சொல்ல முடியும்.

ஆகையினாலே, இந்த இரண்டு காரணங் களினாலும் அவன் ஸார்வபௌமன் அல்ல. "ஸார்வ பௌமத்துவம் சித்திக்காது" என்று சொல்லிவிட்டது அந்தக் குழந்தை!

உடனே ராஜா அதை ஒப்புக்கொண்டான். "இதிலே சந்தேகம் என்ன இருக்கிறது? வாஸ்தவம் தானே?" என்றான்.

அடுத்த கேள்வி — இந்த ராஜபத்னி பதிவிரதை! பதிவிரதை அல்ல என்று நிரூபிக்க வேண்டும்!

பொது தர்மம் என்று சாஸ்திரத்தில் சொல்வார்கள். அதைக் கொண்டு பார்த்தால் பாதிவ்ரத்யத்துக்கு பங்கம் ஏற்படாது இங்கே. பங்கம் ஏற்படாமலே வாதிடலாம். அப்படியான உயர்ந்த தர்மம் அது. உட்கண்ணால் இதைப் பார்க்க வேண்டும்; புறக்கண்ணால் அல்ல.

கல்யாணத்தின்போது இப்போதுகூட ஒரு ஹோமம் நடக்கிறது. மிக முக்கியமான மந்திரங்கள் அச்சமயம் ஓதப்படுகின்றன.

ஒரு பெண்ணாக பூலோகத்தில் பிறவி அடைகிற போது, அந்தப் பெண் முதலில் ஸோம லோகத்திலே சந்திரனிடம் இருக்கிறாள். சந்திரன் என்ன பண்ணு கிறான். அவளை கந்தர்வர்களிடத்திலே ஒப்படைக் கிறான். கந்தர்வர்கள் அவளை அக்னியிடத்திலே ஒப்படைக்கிறார்கள். "அக்னி சாக்ஷியாக இந்தப் பெண்ணை இந்த மனுஷ்யனானவரனுக்கு நான் கொடுக்கிறேன்" என்று அக்னி சொல்கிறான். அக்னி சொன்னவுடனே அதை வழிமொழிகிறவன் யார்...? ததாஸ்து என்று சொல்பவன் யார்? என்றால் வாயு பகவான். அவன் ஆமோதிக்கிறான்— வழிமொழி கிறான்.

ஒருத்தரை "இந்த சபைக்குத் தலைவராயிருக்க நான் முன்மொழிகிறேன்" என்கிறார் ஒருவர். உடனே இன்னொருத்தர் அதை வழிமொழிகிறார். இந்த உலகத் திலே ஓர் அத்யக்ஷதரைத் தேர்ந்தெடுப்பதும் மற்றவர் ஆமோதிப்பதும் — எல்லாமே வேத வழக்குதான்.

வேதத்திலே அக்னி 'ததாமி' என்று சொல்கிறான். அக்னி பிரேரேபிப்பதை வாயு வழிமொழிகிறான்.

ஆகவே, ஸோமதேவனிடத்திலிருந்து கந்தர்வர்களிடம் போய் அங்கிருந்து அக்னியிடத்திலே வருகிறாள் ஒரு பெண். அப்புறம்தான் ஒரு மனுஷ்யனுக்கு வாழ்க்கைப்படுகிறாள்.

"அந்த ரீதியிலே இந்த ராஜபத்னி—இங்கே உட்கார்ந்திருக்கிறாளே, அவளும் ஸோம லோகத்தில் (சந்திரனிடம்) இருந்தவள். கந்தர்வ லோகத்தில் இருந்தவள்: அக்னியினிடம் இருந்தவள்; அதன்பின் ராஜாவுக்கு வாழ்க்கைப்பட்டவள்..." என்று அந்தக் குழந்தை சொன்னவுடனே, அரை மணி நேரம் கைதட்டல் ஓசை கேட்டது சபையிலே.

அந்த மேதா விலாசத்தைக் கேட்டு, கண்டு, "என்னை ஆளவந்தீரோ?" என்று ஓடிவந்து அந்த ராஜ பத்னி அந்தக் குழந்தையைக் கட்டிக் கொண்டாள். அதனால் ஆளவந்தார் என்ற திருநாமம் அவருக்கு.

சின்ன வயதிலிருந்தே ஆளவந்தாருக்கு அவ்வளவு பிரக்ஞை. அப்படிப்பட்ட ஆளவந்தாரால் இயற்றப் பட்ட ஸ்தோத்திரம் இருக்கிறது பாருங்கள். அதற்கு 'ஸ்தோத்திர ரத்தினம்' என்று பெயர்.

அந்த ஆளவந்தார் ஸ்தோத்திரத்தை யார் படித்து ஞானம் அடைகிறார்களோ, அவர்கள் பரம வைராக்கிய நிதிகளாக, தெளிந்த ஞானமுடையவர்களாக இருப்பார்கள். சந்தேகமே அவர்கள் மனத்தில் ஏற்படாது.

இந்த ஆளவந்தார் ஸ்தோத்திரத்திலே, பராசர மஹரிஷியை ஆளவந்தார் கொண்டாடுகிறார்...

•••

# 10

**ஆ**ளவந்தார் ஸ்தோத்திரத்தில் "முனிவரான வியாஸருக்குத் தந்தையான பராசரரை வணங்கு கிறேன்" என்று ஆரம்பிக்கிறார். ஏனென்றால், பராசர ரானவர் வேதத்திலே சொல்லப்பட்ட தத்துவத்தை புராண ரத்தினமான விஷ்ணு புராணத்திலே நன்கு காட்டிக் கொடுத்தார்.

அது என்ன தத்துவம்? சித்—அசித் — ஈசுவர தத்துவம் — சிதசிதீசுவர தத்துவம். தத்வத்ரயம் என்று இதைச் சொல்வார்கள்.

சேதனம், அசேதனம், ஈசுவரன் என்ற இந்த மூன்று தத்துவங்களையும் விஷ்ணு புராணத்திலே அழகாக காட்டிக் கொடுக்கிறார்.

"வள்ளல் அவர் (பராசரர்). உதார: உதார குணம் படைத்தவர். அவரை வணங்குகிறேன்'' என்று பராசரரை வணங்கி ஆரம்பிக்கிறார் ஆளவந்தார்.

**அ**ர்ஜுனனுடைய தேர்த்தட்டு இருக்கிறது பாருங்கள்... அதுதான் சிதசிதீசுவர தத்துவம். அதிலே சித்தும் இருக்கிறது; அசித்தும் இருக்கிறது: ஈசுவரனும் இருக்கிறான்..

சித் யார்? அர்ஜுனன் அறிவையுடையவன்; அந்த ரதத்திலே பூட்டப்பட்டிருக்கிற குதிரைகள். அர்ஜுனன்

ரதத்தட்டிலே உட்கார்ந்திருக்கிறான். அந்த ரதம் அசேதனம். அசித்.

இரண்டையும் நிர்வாகம் பண்ணக்கூடியவன் யார்...? பகவான் கிருஷ்ணன் உட்கார்ந்திருக்கிறானே, அவன்தான். அவன்தான் ஈசுவரன். — இதுதான் சிதசிதீசுவர தத்துவம்.

அடுத்து பாருங்கள், நரசிம்ஹ அவதாரம் — அதுவும் சிதசிதீசுவர தத்துவமே. பிரஹ்லாதன், ஹிரண்யகசிபு இரண்டு பேரும் கம்பத்துக்கு எதிரிலே நின்றுகொண்டிருக்கிறார்கள். இவர்கள் இரண்டு பேரும் அறிவுடையவர்கள் — சித். அறிவில்லாதது — அசித் — கம்பம். அந்த கம்பத்திலிருந்து தோன்றியவன் பகவான் — ஈசுவரன்.

ஆகையினாலே சிதசிதீசுவர தத்துவத்தை நரசிம்ஹ அவதாரத்திலேயும் நாம் பார்க்கலாம்.

பிரதான புருஷேசுவர: என்ற நாமம் இந்த சிதசிதீசுவர தத்துவத்தைக் குறிக்கிறது.

பிரதானம் என்றால் அசித். புருஷன் என்றால் ஜீவன் (சித்) — இந்த இரண்டுக்கும் ஈசுவரன் அவன்!

'நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான்' என்று பின்னால் உத்தரார்த்தத்திலே வருகிறது, சஹஸ்ரநாமத்தில். இவ்வாறு சிதசிதீசுவர தத்துவத்தை நாம் நரசிம்ஹ அவதாரத்திலும் பார்க்கிறோம்.

அசேதனம் இருக்கிறதே, அது ஸ்வரூபத்தில் மாறுபாடு உடையது. இன்றைக்கு இருக்கிற மாதிரி அது நாளைக்கு இருக்காது; மாறிக்கொண்டே இருக்கும்.

ஆனால் சேதனன் இருக்கிறானே, அவன் மாறுபாடு அற்றவன்; ஓர் ஆத்மாவைப் பார்த்தால்

இன்னொன்றைப் பார்க்க வேண்டாம்.

கீதையில் பரமாத்மா கேட்கிறான்: "கத்தியால் அந்த ஜீவனை வெட்டமுடியுமா? அதற்கு அகப்பட மாட்டானே அவன்! ஜலத்திலே நனைக்க முடியுமா? காற்றிலே உலர்த்த முடியுமா ஜீவனை? நெருப்பிலே கொளுத்த முடியுமா?" என்கிறான்.




ஆகையினாலே, இந்த ஜீவன் அழியாதது. அழியக்கூடியது சரீரம். ஸ்தூலமானது சரீரம்; சூக்ஷ்மமானது ஜீவன். அவயவங்களுடையது சரீரம்; அவயவங்

களற்றது ஜீவன். ஜீவன் ரொம்ப நுண்ணியதானது; ரொம்பவும் சிறியது.

அறிவோ அதற்குப் பெரியதாய் அமைந்திருக்கிறது.

அப்படிப்பட்ட அந்த சேதனன், எல்லா சரீரத்துக்குள்ளேயும் விசேஷமான முறையிலே காண்பதற்குக் கிடைத்தாலும் சுவபாவத்திலே மாறுபாடு உடையது. ஒருத்தர் ரொம்ப ஞானியாக இருக்கிறார். வேறொருத்தர் அப்படி இல்லை. இந்த மாதிரி வித்தியாசங்கள் உண்டு.

எத்தனை ஜீவன்கள் பார்ப்பதற்கு ஒரே மாதிரி இருக்கின்றன! ஒரு பாட்டி தினமும் பேரக் குழந்தைக்குக் கதை சொல்கிறாள். பாட்டி இருந்து கதை சொன்னால்தான் குழந்தை தூங்கும்.

நல்ல கதைகள், பகவத் கதைகள் எல்லாம் விசேஷமாகச் சொல்வது வழக்கம். அவ்வாறு சொல்லிக் கொண்டேயிருந்தாள் பாட்டி... ஐந்தாறு கதைகள் சொல்லியாயிற்று. ஆனால், குழந்தை தூங்கமாட்டேனென்கிறது. ஹிம்சை பண்ணுகிறது. பாட்டிக்குத் தூக்கம் வந்துவிட்டது! குழந்தையோ "இன்னொரு கதை சொன்னால்தான் தூங்குவேன்" என்கிறது!

அப்போது அந்தப் பாட்டி ஒரு கதை ஆரம்பித்தாள்:

"ஒரு அம்பாரம் நெல் கொட்டி வைத்திருந்தது- ஒரு குருவி வந்தது. ஒரு நெல்லை எடுத்துக்கொண்டு போச்சு... இன்னொரு குருவி வந்தது... இன்னொரு நெல்லை எடுத்துக்கொண்டு போச்சு... இன்னொரு

குருவி வந்தது, இன்னொரு நெல்லை எடுத்துக்கொண்டு போச்சு" என்று சொல்லி நீட்டிக்கொண்டேயிருந்தாள் கதையை!

இப்படியே அரை மணி நேரம் சொன்னாள். "எத்தனை குருவி வரும், எத்தனை நெல்லை எடுத்துக் கொண்டு போகும்...? போதும் பாட்டி!" என்று தூங்கிப் போய்விட்டது குழந்தை!

அந்த மாதிரி, சிருஷ்டியிலே ஆத்மா எத்தனை என்று கணக்கு உண்டா என்றால், கணக்கே கிடையாது! எண்ணவே முடியாது!

ஆனந்த தீர்த்தர், மத்வாச்சார்யார் மதத்திலேயும் —விசிஷ்டாத்வைதம்— எத்தனையோ ஜீவன்கள் இந்த எம்பெருமானை அடையத் தகுந்தவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எத்தனை என்றால், கணக்கு சொல்ல முடியுமா?

ஆகையினால் ஜீவன் அறிவை உடையவன். அப்படிப்பட்ட ஜீவனை நாம் நன்கு உணரவேண்டும். இதற்கெல்லாம் ஈசுவரனாக இருக்கக்கூடியவன் பரமாத்மா.

அசேதனத்துடைய தன்மை என்ன... இந்த நம்முடைய சரீரம் அசேதனம். இதற்குள்ளே — சரீரத்துக்குள்ளே இருக்கிற ஜீவன் சேதனன் என்று நமக்குள்ளேயே இதைப் பாகுபடுத்தி, இதற்குள்ளேயே ஈசுவரன் உட்கார்ந்திருக்கிறான் என்பதை உணர வேண்டும். நமது சரீரமே இவ்வாறு சிதசிதீசுவர தத்துவமாக அமைந்திருப்பதனாலே, ஸ்வஸ்வரூப ஞானம் (நம்மைப் பற்றிய ஞானம்) நமக்கு வேண்டும்.

'அர்த்த பஞ்சகம்' என்கிற சாஸ்திரம் இதை நன்கு விவரித்துச் சொல்கிறது.

மிக்க இறை நிலையும் மெய்யாம் உயிர் நிலையும்
தக்க நெறியும் தடையாகி...

என்று ஆசார்யர்கள் இதைப் பேசினார்கள்.

ஆகையினாலே, எம்பெருமானுடைய 'பிராப்யஸ்ய பிரம்மணோ ரூபம்' — அவனைக் குறித்த அறிவு, நமக்கு வேண்டும். நாம் சென்று அடையக்கூடிய எம்பெருமானுடைய திவ்ய வடிவு, அவனுடைய ரூபம், குணம், இதையெல்லாம் குறித்த தெளிந்த ஞானம், பகவத் விஷயத்திலே தெளிந்த ஞானம் ஏற்பட வேண்டும்.

ப்ராப்தஸ்ச ப்ரத்யக்யாத்மன: பகவானைச் சென்று அடையக்கூடிய நாம் யார் என்பதையும் நாம் நன்கு தெரிந்துகொள்ள வேண்டும்.

ப்ராப்த்யுபாயம் — அவனை அடைவதற்கு வழி எது என்பதும் நமக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும்.

ப்ராப்த்யுபாயம் பலம் — அடைந்த பிறகு ஏற்படக் கூடிய பலன் என்ன என்றும் தெரிந்திருக்க வேண்டும்.

அவனை அடைய விடாமல் தடுக்கும் தடை எது என்கிற ஞானமும் நமக்கு இருக்க வேண்டும்.

இந்த ஐந்தும் அர்த்த பஞ்சகம்.

இந்த அர்த்த பஞ்சகத்தின் மேல்தான் வேதம் நிற்கிறது. இதைத்தான் இதிஹாஸ — புராணங்கள் எல்லாமே விவரித்துக் காட்டுகின்றன. இந்த ஐந்தைக் காட்டுவதற்காகத்தான் அவையெல்லாம் தோன்றின.

ஆகையினாலே இந்த இடத்திலே, ஜீவ ஸ்வரூபமாகிய நாம் யார் என்று தெரிந்தால்தான் நமக்கு அந்தராத்மாவாக இருக்கும்படியான எம்பெருமானை நாம் நன்கு உணர முடியும்.

பரத சக்கரவர்த்தி என்ற சக்கரவர்த்தி பற்றி தெரியும்.

அவர் தமக்கு ராஜ்ஜிய பாரம் ரொம்ப ஹிம்சையாக இருக்கிறது என்று முடிவு பண்ணி காட்டுக்குப் புறப்பட்டுப் போய்விட்டார். போனால் என்ன ஆயிற்று...?

ஒரு ராஜாவின் கதை இங்கே ஞாபகம் வருகிறது...

ஒரு நாயகமாய் ஓட உலகுடனாண்டவர்
கரு நாய் கவர்ந்த காலன் சிதைகிய பானையர்
பெரு நாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்
திருநாராணன் தாள் காலம் பெற சிந்தித்து உய்ம்மினோ.

அந்த ராஜா அரண்மனையை விட்டான். மனைவியை விட்டான். தன்னுடைய குழந்தைகளை விட்டான். ராஜ்ஜியத்தை விட்டுவிட்டு புத்த மார்க்கத் திலே வெளியே ஓடி வந்துவிட்டான்! வந்து காட்டிலே இருக்கிறான். அவனுக்கு ஏகமாகப் பசிக்கிறது.



## 11

இத்தனை நாளாக நல்ல உயர்ந்த போஜனம் சாப்பிட்டவன் அரசன். கை தட்டினால் கொண்டு வந்து தர பத்திருபது பேர் காத்திருந்தார்கள். இப்போது இவன் நாதியற்றவனாக சாப்பிடுவதற்கு எதுவு மில்லாமல் இருக்கிறான். ஆனால், பசியோ வாட்டுகிறது. ராத்திரி ஆகிவிட்டது. படுத்துக்கொண்டு இழுத்துப் போர்த்திக் கொண்டான். பசி அடங்குமா? திரும்பவும் எழுந்தான். யார் வீட்டிலோ வாசலில் உடைந்து போன மண்பாண்டம் கிடந்தது. அந்த உடைந்துபோன ஓட்டாஞ்சில்லை எடுத்துக்கொண்டு 'பவதி பிக்ஷாம் தேஹி' என்று ராப்பிச்சைக்குப் போக ஆரம்பித்துவிட்டான்.

உபநிஷத் என்ன சொல்கிறது...?

ராத்திரி வேளையிலே பிச்சை எடுக்காதே: அது மஹா பாவம்! ரொம்ப தப்பு. 'அவ்வாறு பிச்சை எடுக்க மாட்டேன்' என்பதை விரதமாகவே வைத்துக் கொள் என்கிறது.

இதே இடத்திலே ஆசார்யர்கள் வியாக்யானம் பண்ணுகிறபோது, "ராத்திரியிலே பிச்சை கேட்பது எவ்வளவு பாவமோ அதே மாதிரி ராத்திரியிலே பிச்சை போடாமல் விட்டாலும் மஹா பாவம்" என்கிறார்கள்!

இப்படிப் 'பாவம் பாவம்' என்று எல்லாவற்றையும் சொல்வதற்குத்தான் வேதம் வந்ததா என்று நாம் சந்தேகப்படலாம். ஆனால், இதனுடைய கருத்தை நாம் நன்கு உணர வேண்டும்.

'நம்மைப் போன்ற ஒரு மனிதன் இரவிலே பிச்சையெடுக்கும்படியான நிலைக்கு இந்தச் சமுதாயத்தை நீ



உருவாக்காதே! 'அவன்தானே பிச்சை எடுக்கிறான்; நமக்கென்ன?' என்று நீ நினைக்காதே. அது உனக்கும் கெடுதல்தான்' என்கிறது சாஸ்திரம்!

'ஏனென்றால், அவன் பிச்சை கேட்க வரவில்லை. உன்னை சிக்ஷிக்க வந்திருக்கிறான்' என்கிறது சாஸ்திரம்.

"போன ஜன்மத்திலே நான் பிச்சை போடாமலிருந்து விட்டேன். ஆகவே இப்போது பிச்சை எடுக்கிறேன்" என்று அவன் சொல்கிறானாம்!

"இப்போது நீ போடாவிட்டால், இதனால் உனக்கு அடுத்த ஜன்மாவிலே பிச்சை எடுக்கிற துர்பாக்கியம் தான் ஏற்படும்" என்று சொல்லிவிட்டுப் போகிறானாம் அவன்!

ஆகவே நது பிக்ஷதே சிக்ஷதே! இன்னொருத்தன் தானே பிச்சையெடுக்கிறான் என்று நாம் விட்டுவிட முடியாது. நம் சமுதாயத்தில் இன்னொருத்தர் பிச்சை எடுத்தால் அதை வேடிக்கை பார்க்கலாகாது. 'பிச்சை எடுக்கும்படியான அவல நிலைக்கு இச்சமுதாயத்தை உருவாக்காதே' என்பது வேதத்தின் கருத்து.

'எப்படியாவது சிரமப்பட்டு நிறைய அன்னத்தைச் சம்பாதிக்க வேண்டும். அன்னத்தை உருவாக்கி எல்லோரும் நன்கு உண்டு உயிர் வாழ வேண்டும் இல்லை என்ற அவச்சொல் உருவாகக் கூடாது...' என்று வேதமே உபநிஷத்தில் அழகாகச் சொல்கிறது.

இப்படி ராத்திரி வேளையிலே பிச்சை கேட்கக் கூடாது என்றால், அதையே செய்கிறான் இந்த ராஜா! உலகத்தையெல்லாம் பரிபாலிக்கும்படியான சக்கரவர்த்திக்கு ராப்பிச்சை கேட்கும்படியான ஓர் அவல நிலை ஏற்பட்டுப் போச்சே...

அப்போது வீதி வழியாகப் போகிறான். தன்னை ராஜா என்று கண்டுபிடித்துவிடப் போகிறார்களே என்று இழுத்து இழுத்துப் போர்த்திக்கொள்கிறான்.

அந்தந்த வீட்டிலே மீந்ததைப் போடுகிறார்கள் அவன் கலயத்தில். அதை எடுத்துக்கொண்டு, சாப்பிடு வதற்காக வேகமாகப் போகிறபோது...

'கருநாய் கவர்ந்த காலர் — சிதகிய பானையர்!' என்பதற்கேற்ப, கறுப்பாக ஒரு நாய் படுத்திருந்தது இருட்டில்; தெரியாமல் அதன்மேல் காலை வைத்தான். அது எழுந்து இவன் காலைக் கவ்விற்று... கையிலிருந்த மண்பாண்டத்தைக் கீழே போட்டுவிட்டான் ராஜா! கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை அவனுக்கு!

'கருநாய் கவர்ந்த காலர்' என்றால் கறுப்பான நாய் மட்டுமல்ல... வியாக்யானம் பண்ணும் ஆசார்யர்கள் என்ன சொல்கிறார்கள்? 'கருவுற்றிருந்த நாய் அது' என்கிறார்கள். அப்போதுதான் குட்டி போட்டிருக்கிறது அந்த நாய். குட்டி போட்ட நாய், பழகியவர்களையே கிட்டே விடாது. அது எவ்வளவு தீவிரமாக கோபத் தோடு கடிக்கும் என்பதை அன்று உணர்ந்தான் மன்னன்! சிற்றரசர்களெல்லாம் கப்பம் கட்ட வருகிற போது, பட்டு — பீதாம்பரத்தினால் அவன் திருவடி மூடியிருக்கும். அந்தத் திருவடி தரிசனம் கிடைக்குமா என்று அவர்கள் குனிந்து குனிந்து, இவன் சக்கரவர்த்தி யாக உட்கார்ந்திருந்த காலத்தில் பார்ப்பார்களாம்.

அப்படிப்பட்டவனின் திருவடி இன்றைய தினம் நாற்சந்தியிலே, ஒரு குக்கிராமத்திலே, நாய் கவ்வக் கிடக்கிறதே!

இதிலிருந்து தெரிந்துகொள்ளுங்கள் — ஐச்வர்யம் சாசுவதமல்ல... அது நிலைக்க வேண்டுமானால், அவன் திருவடியை நாம் பற்ற வேண்டும். அதே மாதிரி தாரித்ரியமும் சாசுவதமல்ல...

தாரித்ரியம் நம்மை விட்டு விலக வேண்டு மானாலும் அவன் திருவடியைத்தான் நாம் பற்ற வேண்டும்.

விதுர நீதியிலே, இதரர் மனம் புண்படும்படியாகப் பேசாத விதுரரே ஓரிடத்திலே சுருக்கென்று சொல் கிறார்:

'இரண்டு பேரைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து பெரும் பாறாங்கல்லாக கழுத்திலே கட்டி, நடு சமுத்திரத்திலே இறக்கிவிடலாம்' என்கிறார் அவர்!

சின்னக் கல்லாகக் கட்டினால் எழுந்து வந்துவிடப் போகிறார்களே என்று, பெரிய கல்லாகக் கட்டி நடு சமுத்திரத்திலே இறக்கிவிட வேண்டும்...

யார் அந்த இரண்டு பேர்...?

1. நிறைய பொருள் படைத்தும் பிறருக்கு தானம் பண்ணாமல் இருப்பவர்கள்.
2. பரம தாரித்ரியத்தில் இருந்து கொண்டு, 'கிருஷ்ணா —ராமா— கோவிந்தா' என்று சொல்லாமல், அதற்குப் பதிலாக "நான் கஷ்டப்படுகிறேன்; நான் கஷ்டப்படுகிறேன்" என்று அதையே புலம்பிக் கொண்டிருப்பவர்கள்.

இப்படி பகவான் நாமாவைச் சொல்லாமல் தாரித்ரியத்தைச் சொல்லிப் புலம்புகிறவர்களையும் பொருள் படைத்தும் பிறருக்குக் கொடுக்காமல் இருப் பவர்களையும் நடுக்கடலில் தள்ளிவிடலாம் என்கிறார் விதுரர்!

ஆகையினாலே, ஐச்வர்யம் நிலைத்து நிற்க வேண்டுமானால் அவன் திருத்தாள் பணிய வேண்டும்

பரத சக்கரவர்த்தி தனது ஐச்வர்யத்தையெல்லாம் விட்டுவிட்டு காட்டிலே வந்து வாஸம் பண்ணிக் கொண்டிருக்கிறார். அப்படி வாஸம் பண்ணிக் கொண்டிருக்கிறபோது இவருக்கு எதிர் பக்கத்திலே ஒரு பூரண கர்ப்பிணியான மானானது ஜலத்தைப் பருக வருகிறது. ஜலத்திலே வாயை வைத்து விடுகிறது... பருகிக்கொண்டேயிருக்கிறபோது, சிம்ஹ கர்ஜனை கேட்டது. அவ்வாறு கேட்டவுடனேயே அது நடு நடுங்கிப் போய்விட்டது. அந்த பயத்திலேயே அங்கேயே பிரசவித்து விட்டது அந்த மான்.

அப்படிப் பிறந்த அந்த மான் குட்டி, கரையிலே விழாமல், ஜலத்திலே விழுந்துவிட்டது. தண்ணீர் அடித்துக்கொண்டே போகிறது. அந்த மான்குட்டியை.

எல்லாவற்றையும் விட்டுவிட்டு சர்வசங்க பரித்யாகம் பண்ணிவிட்டு ஐச்வர்யத்தை விட்டு வந்த அந்த ராஜா—சக்கரவர்த்தி—அந்த மான்குட்டி அடித்துக்கொண்டு போகப்படுவதைப் பார்த்தார்.

உடனே அந்த மான்குட்டியை ரக்ஷிக்க வேண்டும் என்கிற எண்ணம் அவருக்குத் தோன்றியது. எடுத்து ரக்ஷித்தார்.

எல்லாவற்றையும் விட்டுத் துறந்தவர் இப்படிப் பண்ணலாமா? என்றால்,

அதற்கு பகவான் கீதையிலே அழகாகப் பேசியிருக்கிறான்:

கர்மாவைத் தெரிந்துகொள்
அகர்மாவைத் தெரிந்துகொள்
விகர்மாவைத் தெரிந்துகொள்

இவை மூன்றையும் தெரிந்துகொண்டு பிற்பாடு கர்மாவில் அகர்மா — விகர்மாவைப் பார்; விகர்மாவில் கர்மா — அகர்மாவைப் பார்... எவன் இதைப் பார்க்கக் கொடுத்து வைத்தவனோ அவன்தான் ரொம்ப புத்திசாலி என்றான்!

இப்படி ஒன்றை மற்றதில் பார்ப்பது இருக்கட்டும். இப்போ, இதிலே ஏதாவது புரிகிறதா என்றால், ஒன்றும் புரியவில்லை. அப்புறம் எப்படி கர்மாவில் விகர்மாவை, அகர்மாவில் கர்மா விகர்மாவை, விகர்மாவில் அகர்மா கர்மாவைப் பார்ப்பது?...



## 12

கர்மா என்றால் புரிகிறது. அகர்மா என்றால்? கர்மாவில் தவறுவது, அல்லது பண்ணாமல் விடுவது.

விகர்மா...? விகர்மா என்பது கனவிலும் பண்ணக் கூடாதது. இந்த விகர்மா கூட சில சமயங்களில் கர்மா வாகிவிடும். உதாரணமாக, பொய் பேசுவது என்பது விகர்மா. ஆனால், பொய் பேசுவது என்கிற விகர்மா கூட சில சமயம் கர்மா ஆகிவிடும். அது எப்போது என்று பார்த்தால், விவாஹ காலத்தில் பொய் சொல்லலாம்.

ஒரு கல்யாண காலத்திலே, மாங்கல்ய தாரணம் ஆகப்போகிறது. கூறைப் புடைவை உடுத்திக்கொண்டு வரப்போயிருக்கிறாள் மணப்பெண். அதற்குள்ளே இங்கே இரண்டு சம்பந்திகளுக்கும் சண்டையாகி விடுகிறது. வந்திருக்கிற பந்து—மித்திரர்கள் எல்லாருமே அந்தச் சண்டையை அதிகப்படுத்தி அந்தக் கல்யாணத்தை நிறுத்துவதற்கா முயற்சி செய்வது!?

சண்டையைத் தவிர்க்க வைத்து அந்தக் கல்யாணத்தை நடத்திக் கொடுக்க வழிபண்ண வேண்டும். ஒரு பொய்யைச் சொல்லியாவது சமாதானம் பண்ண வேண்டும்...

இந்த இடத்திலே நன்றாகக் கவனிக்க வேண்டும்...

விவாஹ காலத்திலே ஆபத்துக்குப் பொய் சொல்லலாம். ஆனால், ஆரம்பத்திலிருந்தே பொய்யைச் சொல்லி ஒரு கல்யாணத்தைப் பண்ணக் கூடாது. கல்யாணம் நின்றுபோகிற சூழ்நிலை வந்தால் அதைக் காப்பாற்றுவதற்குப் பொய் சொல்லலாம்.

அதே மாதிரி, ஒருவர் சொத்தையெல்லாம் இழந்து நடுத்தெருவில் நின்றுபோய் விட்டாரானால், அவரைக் காப்பாற்றுவதற்காக பொய் சொல்லி அவரை அந்தக் குடும்பத்தில் நிலைக்கப் பண்ண வேண்டும். 'நடுத் தெருவிலே அவரை நிற்க வைத்துப் பார்க்காதே' என்கிறது சாஸ்திரம்.

சீதா பிராட்டியே ராமாயணத்தில் பொய் சொல்லி யிருக்கிறாள். ஆஞ்சநேயனே பொய் சொல்லியிருக் கிறான். இந்தப் பொய்யெல்லாம் பார்த்தால் நமக்கு நன்றாகவே தெரியும்— விகர்மா எவ்வாறு கர்மா வாகிறது என்று!

இலங்கையைக் காவல் காக்கும் லங்கிணி, ஆஞ்ச நேயனைப் பார்த்துக் கேட்கிறாள்: "காட்டுக்குள்ளே திரியக்கூடிய குரங்கே... நீ யார்? எங்கேயிருந்து வந்தி ருக்கிறாய்?"

"நான் ராமனால் அனுப்பப்பட்டவன். இங்கே சீதை இருக்கிறாளா என்று பார்க்க வந்தேன்" என்று ஆஞ்சனேயன் உண்மையைத்தானே சொல்ல வேண்டும்? ஆனால், நடந்தது என்ன...?

"இங்கே இருக்கிற வனப்பிரதேசங்களையெல்லாம் பார்த்தால் ரொம்ப அழகாக இருக்கிறது. ஊருக்குள்ளே இருப்பவையெல்லாம் ரொம்ப அழகாக இருக்கின்றன" என்று தான் சுற்றிப் பார்க்க வந்ததாகச் சொன்னானே

யொழிய தான் வந்த காரியத்தையே அவன் சொல்ல வில்லை.

அதே மாதிரி, இலங்கையை துவம்ஸம் பண்ணு கிறான் ஆஞ்சநேயன். படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த ராக்ஷஸிகளெல்லாம் அலறியடித்துக்கொண்டு, சீதை யைப் பார்த்து, "இவன் யார்?" என்று கேட்கிறார்கள். கேட்டால் சீதை என்ன சொல்ல வேண்டும்...?

"ராமனிடத்திலிருந்து வந்திருக்கிறான். என்னிடத் தில் இவன் சூடாமணியைக் கொண்டு வந்து கொடுத்தி ருக்கிறான். நான் அவனிடத்தில் அங்குலியத்தைக்



கொடுத்தனுப்பியிருக்கிறேன். ராம தூதன் அவன்...” என்றெல்லாம் சொல்ல வேண்டும் அல்லவா?

ஆனால், அவள் மறைத்துவிட்டாள். எல்லா வற்றையும் மறைத்துவிட்டாள்!

“எனக்கென்ன தெரியும்?” என்று ஒரு வார்த்தை சொல்லி, “பாம்பின் கால் பாம்பறியும். இவ்வளவு துவம்ஸம் பண்ணுகிறவன் உங்களில் ஒருவனாக இருக்கக்கூடும்” என்று சொல்லிவிட்டாள்.

சீதை பொய் சொன்னாளா என்றால் இல்லை. உத்தமமான ஆத்மா அந்த ஆஞ்சநேயன். அவனை ரக்ஷிப்பதற்காகச் சொன்ன பொய் பொய்யாகாது.

ஒரு மஹரிஷி உட்கார்ந்து கொண்டு தபஸ் பண்ணிக் கொண்டிருக்கிறார். பசுவைத் துரத்திக் கொண்டு கையிலே கத்தியுடன் ஓடி வருகிறான் ஒருவன். பசுவானது, ‘அம்மா’ என்று கத்திக்கொண்டு தபஸ் பண்ணும் மஹரிஷியைக் கடந்து அவருடைய ஆசிரமத்தினுள்ளே நுழைந்து விட்டது. அங்கே போய் மறைந்து கொண்டது.

வந்தவன் கத்தியோடு வந்து மஹரிஷியைப் பார்த்து, “இந்தப் பக்கம் பசு வந்ததா?” என்று கேட்டான்.

“வந்தது, ஆசிரமத்துக்குள்ளே இருக்கிறது” என்று தானே பதில் சொல்லவேண்டும்?

ஆனால், அப்படிப் பதில் சொன்னால், அவர் ஆசிரமத்திலேயே கோ ஹத்தி பண்ணுவான் அவன்.

அவர் பார்த்தார்... ரொம்ப கெட்டிக்காரரர். பொய் சொல்லாமலேயே தப்பித்துக்கொண்டார். “பசு இந்தப் பக்கம் போச்சா” என்று அவன் கேட்டதும் “கண்

பார்க்கும். ஆனால் பேசாது: வாய் பேசும். ஆனால், பார்க்காது...” என்றார்.

“இதுகிட்டே போய்க் கேட்டோமே...” என்று அவன் புறப்பட்டுப் போய் விட்டான்.

ஒரு காரணமுமின்றி பசுவைக் கொல்ல வரும் மூர்க்கனுக்கு புத்தி எவ்வாறு இருக்கும். அவர் சொன்னது அவனுக்குப் புரியவில்லை.

“பார்த்தேன்: பேச முடியாத நிலையில் இருக் கிறேன்” என்பதைத்தான் மஹரிஷி அப்படி சூசகமாகச் சொன்னார். சொல்லி, அவ்வளவு ஆழமாக, சமத்கார மாக அந்தப் பசுவை ரக்ஷித்துவிட்டார்.

விகர்மா கர்மாவாவது இப்படித்தான்!

**அ**கர்மா கர்மாவாகிவிடும் சில சமயங்களில்... பகவான் வீதி வழியாக எழுந்தருள்கிறான். உத்ஸவ சமயம். சாயங்காலம் நாலு மணிக்கு வாகனத்தில் அவனை எழுந்தருளப் பண்ணி, வீதி வழியாக வலம் வருகிறார்கள். முன்னே அருளிச் செயல் கோஷ்டி — பிரபந்த கோஷ்டி; பின்னே வேத பாராயணம் பண்ணுகிறவர்கள்... எல்லோரும் போகிறார்கள்.

சாயங்காலம் ஆறு மணி ஆகிவிடுகிறது. கோயிலுக்கு வந்து சேர ஏழரை ஆகிவிடும். ஆறேகால் மணி என்பது சந்தியாவந்தனத்துக்கான சமயம் இல்லையா...? அதனால், அங்கேயே ஆயக்கால் போட்டு சுவாமியை நிறுத்திவிட்டு, “சுவாமி நீ இங்கேயே நின்றுகொண்டிரு... நாங்கள் போய் சந்தியாவந்தனம் பண்ணிவிட்டு வந்து அப்புறமாக உன்னை எழுந்தருளப் பண்ணுகிறோம்” என்று நடுத்தெருவிலேயே விட்டுவிட்டு வரலாமா என்றால், கூடாது!

சந்தியாவந்தனத்தை அப்போது பண்ணாமல் இருப்பதுதான் கர்மா! அகர்மாதான் கர்மா! பகவானைக் கொண்டு வந்து கோயிலில் எழுந்தருளப் பண்ணிய பிற்பாடு, அதற்கப்புறம் கிருஹத்துக்குப் போய் ராத்திரி ஏழு மணிக்கு "காலாதீத பிராயச் சித்தார்த்தம் இதி அர்க்கியப்பிரதானம் கரிஷ்யே" என்று 'காலம் அதிகமாக ஆனதற்காக ஒரு அர்க்கியம் அதிகமாக விட்டுவிடுகிறேன்' என்று சொல்லி விட்டு விட வேண்டும்.

அதற்காக நித்தியமே இந்த மாதிரி விடக்கூடாது. என்றைக்குக் காலதாமதமாகிறதோ அன்றைக்குத்தான் விட வேண்டுமேயொழிய சாஸ்திரம்தான் அனுமதித்து விட்டதே என்று நித்யம் தாமதம் பண்ணி ஓர் அர்க்கியம் கூடுதலாக விடுவதென்பது ஆகாது!

காலாதீதம் என்பது ஓர் இக்கட்டான நிலை. பகவத் விஷயத்திலே நாம் ஈடுபட்டுக் கொண்டிருக்கிற போது, அகர்மா (கர்மாவைப் பண்ணாதிருத்தல்) ஏற்பட்டால் அது கர்மாவாகிவிடுகிறது.

இதை உணரவேண்டும்.

பாம்பு ஒரு தவளையைப் பிடித்துக்கொண்டி ருக்கிறது. திடீரென்று போய் அந்தப் பாம்பை அடித்துக் தவளையை விடுவிக்கக் கூடாது என்கிறது சாஸ்திரம். 'அது கத்தினாலும் பேசாமல் போ!' என்கிறது. இங்கு அகர்மாதான் கர்மா ஆகும்.

ஜீவராசிகளின் ஸ்ருஷ்டி, ஸ்திதி லயம் இது. இதில் நாம் குறுக்கிட முடியாது. `ஆதிசங்கர பகவத் பாதாள் ரொம்ப அழகாகச் சொல்கிறார்:

பாம்பு தவளையை விழுங்கிக் கொண்டிருக்கிறது. பாதி உடம்பு உள்ளே போய்விட்டது. தவளை என்ன பண்ணுகிறது...? தனக்கு முன் பறக்கிற ஓர் ஈயை நாக்கால் பிடித்திழுத்து விழுங்குகிறது. அந்த இக்கட்டி லும் தவளை ஈயை விடவில்லை! இதுவே போய்க் கொண்டிருக்கிறது; இது இன்னொரு ஜீவனைப் பிடித்து இழுத்துக் கொண்டிருக்கிறதே!

மனிதனும் அந்த மாதிரிதான். தானே ஒரு நாள் ம்ருத்யுனிடத்தில் சிக்கப்போகிறவன்தான். இன்னொ ருத்தனை அடிக்கிறேன், உதைக்கிறேன் என்று ஏன் சொல்கிறான்! இது எவ்வளவு மோசமான உலகம்! என்கிறார் ஆதி சங்கரர்.

“சரி, அகர்மா விகர்மாவாகிவிடக்கூடிய நிலை எது...?

ஒரு சின்ன குழந்தை நடந்து போகிறது. ஒருத்தர் உட்கார்ந்திருக்கிறார். நான் ஒன்றும் பண்ண மாட்டேன் என்று யாருடனும் சம்பந்தம் இல்லாதவ ராக இருக்கிறார். அகர்மாதான் என் நிலை என்று இருக்கிறார். இந்தக் குழந்தை கிணற்றிலே விழப் போகிறது... அப்போதும் இவர் அசையாமல் உட்கார்ந்தபடி இருந்தாரானால் அவருடைய அகர்மா விகர்மாவாகிவிடும்!

இப்படி தன்னுடைய அகர்மாவானது விகர்மாவாகிவிடக்கூடாதே என்கிற அக்கறையில்தான் பரத சக்கரவர்த்தி மான்குட்டியைக் காப்பாற்றினார்.

## 13

பரத சக்கரவர்த்தி அகர்மா என்கிற உயர்ந்த தர்மத்திலே இருந்தார் என்று பார்த்தோம். இருந்தாலும் மான்குட்டியைக் காப்பாற்றினார். ஆனால், அதன் பிறகு அவர் பண்ணியதுதான் தப்பாகிவிட்டது. அந்த மான்குட்டியைக் கொண்டு வந்து ஆசிரமத்திலே வைத்துக்கொண்டார். அது சிறிது நேரம் கண்ணில் தென்படாமல் போனாலும் துடிதுடித்துப் போய் விடுவார். அது அழகாகப் புல்லெல்லாம் மேயும். அத்தனை புல்லும் மொட்டை மொட்டையாக நிற்கும்.

இந்தப் புல்லைப் பற்றிச் சொல்லும்படி என்னைக் கேட்டால் 'மொட்டை மொட்டையாய் நிற்கிறது' என்றுதான் சொல்லுவேன். ஆனால், பராசர மஹரிஷி இந்தக் கதையிலே, இந்த இடத்தை வர்ணிக்கிறபோது என்ன சொல்கிறார்... அவர் வாக்கு எவ்வளவு அம்ருதமான வாக்கு பாருங்கள். ஒன்றைச் சொல்லும் போதே இன்னொன்றை நினைக்கும்படியாகச் செய்பவர்கள்தான் மகான்கள்.

என்ன சொல்கிறார்... மான்குட்டி மேய்ந்திருக்கிறது. புல் மொட்டை மொட்டையாக இருக்கிறது என்பது வாஸ்தவம்தான். அது எப்படி இருக்கிறது என்றால், "ஸாம வேதத்தை அத்யயனம் பண்ணக்கூடிய பிரும்மசாரி உபநயன காலத்திலே எப்படி இருப்பானோ, அப்படி இருக்கிறது" என்கிறார்!

ஏனென்றால், ஸாம வேதிகள் தலையை மொட்டை அடித்துக்கொள்ள வேண்டும். அதனால் இவர் புல்லைப் பார்த்தால் ஸாம வேத பிரும்மசாரி மாதிரி இருக்கிறதே என்கிறார்.

ஆகையினாலே, இந்த சாஸ்திரார்த்தத்தையும் — மஹரிஷி காட்டிய அழகையும்—நாம் பார்க்க வேண்டும்.



இப்படி ஆசிரமத்துக்கருகே புல் மேய்கிற அந்த மானையே நினைத்து நினைத்து ஏங்கி, அந்த பரத சக்கரவர்த்தி மானாகவே பிறந்தார். அதன் பிறகு நல்ல ஞானம் ஏற்பட்டு மறுபடியும் பிரும்ம குலத்திலே வந்து பிறந்தார். ஜட பரதர் என்று பெயர் அவருக்கு.

ஜடமாக ஓரிடத்திலே உட்கார்ந்திருப்பார் இந்த ஜடபரதர். ஒரு பாறாங்கல்லில், அப்படியே அசையாமல் அமர்ந்திருப்பார். யாரிடமும் எதையும் யாசிக்கமாட்டார். யாராவது எதையாவது கொடுத்தால் சாப்பிடுவார். ஆனால், சாப்பிடாததனாலே அவருக்கு இளைப்போ களைப்போ கிடையாது. கல்லிலே உட்கார்ந்திருக்கிறார் இப்படி.

அப்போது ஒரு சமயம், ரகுகணன் என்கிற சக்கரவர்த்தி, கபில மஹரிஷியினிடத்திலே உயர்ந்த விஷயங்களைக் கேட்க வேண்டும் என்பதற்காக வந்து கொண்டிருக்கிறான். அவனுடைய பல்லக்கைச் சுமக்கக் கூடியவர்களுக்குக் களைப்பு ஏற்பட்டு, அவர்களால் சுமக்கமுடியாமல் போயிற்று. ராஜாவைப் பார்த்து, "எங்களால் முடியவில்லை: இன்னும் யாராவது ஆள் இருந்தால் சேர்த்துக்கொள்ளலாமே" என்றார்கள்.

உடனே ராஜா, "பக்கத்தில் கிராமத்தில் யாராவது ஆள் கிடைக்கிறார்களா என்று பார்த்துக்கொண்டு வாரும்" என்று அனுப்பி வைத்தார் ஆட்களை.

இரண்டு பேர் கிளம்பிக் கிராமத்தை நோக்கிப் போனார்கள். ஊர்க் கோடியிலே பார்த்தால், இவர் — ஜடபரதர் — நன்றாக உட்கார்ந்திருக்கிறார்! பத்துப் பேரை அழைத்துக்கொண்டு போகலாம் என்று

முடிவுக்கு வந்து அவரைக் கூப்பிட்டார்கள். உடனே ஜடபரதரும் அவர்கள் கூடவே புறப்பட்டுப்போனார்.

போனால், ராஜாவின் பல்லக்கு அங்கே அழகாக காத்திருக்கிறது. முன்னாலும் பின்னாலும் தண்டு — தூக்குவதற்கான கழி. பின்னால் பத்துப் பேர் பல்லக்கைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டார்கள். முன்னே இருந்த தண்டைத் தூக்கி இவர் ஒருத்தர் தோளிலே வைத்துவிட்டார்கள்.

பல்லக்கு போகிறது! சாஸ்திர ரீதியாக, வீதியிலே நடப்பவர்கள் எப்படி நடக்க வேண்டும்? ஒரு நுகத்தடியைக் கீழே போட்டால் எவ்வளவு தூரம் இருக்குமோ, அத்தனை தூரம் பார்த்து நட என்கிறது சாஸ்திரம். ரொம்ப தூரப் பார்வையும் வேண்டாம். ரொம்ப நெருக்கமாகவும் பார்க்கக்கூடாது. சரியான அளவு தூரம் கண்காணித்தபடி நடக்க வேண்டும்.

ஏனென்றால், கிருமி — கீடாதி — (புழு, பூச்சிகள்) கீழே போயிற்றென்றால், அவை போவதற்கு வழி விட வேண்டும். அவை நின்றால் நாம் தாண்டிப் போக வேண்டும்.

அதனால் தான் சந்நியாசிகள் நான்கு மாதம் சாதுர்மாஸ்ய சங்கல்பம் எடுத்துக்கொள்கிறார்கள். வருஷ ருதுவிலே நான்கு மாதம் அவர்கள் வெளியிலே எங்கேயும் சஞ்சாரம் பண்ணக்கூடாது. நம்மைக் காட்டிலும் அவர்களுக்கு அஹிம்ஸா தர்மம் இன்னும் அதிகம். அவர்கள் சஞ்சாரம் பண்ணுகிறபோது அவர்கள் கால் பட்டு ஜீவராசிகள் மாண்டுபோய் விடக்கூடாது.

நாம் நடக்கிறபோது எத்தனையோ மாண்டு போகின்றன. நாம் படுத்துக்கொண்டு உடம்பைப் புரட்டுகிறபோது எத்தனை சின்னச் சின்ன கிருமிகள் மாண்டு விடுகின்றன. அறியாமல் நிகழக்கூடிய பாவங்கள்! இதெல்லாம் நீங்குவதற்காகத்தான் வைச்வதேவம் என்கிற கர்மாவை நித்யம் நாம் பண்ண வேண்டும் — தடுக்க முடியாமல், நடக்கக்கூடிய பாவங்கள் இவை. இவற்றுக்கான பிராயச்சித்தம் வைச்வதேவம்.

ஆகையினாலே, கீழே பார்த்து நடக்க வேண்டும்; ஏதாவது புழு—பூச்சி நின்றால் தாண்டிப் போக வேண்டும் என்கிற தர்மத்தை எல்லோரும் அனுஷ்டிக்க வேண்டும்.

ஜடபரதர் இதை நன்றாக அனுஷ்டிக்கிறார். கீழே பார்த்தார்... ஏதோ இருக்கிறது; நகரவேயில்லை. ஓர் எகிறு எகிறி அதைத் தாண்டினார்.

தோளில் பல்லக்கை வைத்துக் கொண்டிருக்கிறார். அவர் ஓர் எகிறு எகிறியுவுடனேயே உள்ளே உட்கார்ந்திருக்கிறானே ராஜா... அவன் நெற்றியிலே சரியான அடி! அடிபட்டவுடனே கண்ணிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வருகிறது அவனுக்கு!

"ஏன் இந்த விஷம கதியாகப் போகிறது பல்லக்கு? ஊரிலிருந்து வருகிறபோது நன்றாகத் தூக்கி வந்தீர்களே? இங்கே ஏன் கதி சரியில்லை?" என்று கேட்கிறான் ராஜா.

அதற்கு, பின்னாலிருந்த அத்தனை பேரும் சேர்ந்து பதில் சொல்கிறார்கள்: "முன்னால் இருக்கிற குண்டு தான் அப்படிப் பண்ணுகிறது. நாங்கள் எதுவும் பண்ணவில்லை."

ராஜா, ஜடபரதரை ஏற இறங்கப் பார்த்தான். 'இப்போதுதானே வேலைக்குச் சேர்த்துக்கொண்டோம். உடனே நாம் கடிந்து கொள்ளக்கூடாது. கொஞ்சம் நாழி பார்ப்போம்!' என்று முடிவு செய்து, "சரியாகத் தூக்கிக்கொண்டுபோங்கள்" என்று மட்டும் ஒருமுறை சொல்லிவிட்டு, பல்லக்குக் கதவைச் சாத்திக்கொண்டு உட்கார்ந்தான். இவர்—ஜடபரதர்—அதையெல்லாம் லட்சியமே பண்ணவில்லை. மறுபடியும் ஓர் எகிறு எகிறினார். இந்த முறை கன்னத்தில் சரியான அடி ராஜாவுக்கு! வலியை அவனால் தாங்கவே முடிய வில்லை. பல்லக்கு கதவைத் திறந்து ஜடபரதரை ஒரு குத்து குத்தி, "ஏ குண்டனே! நல்ல பலிஷ்டனாக இருக் கிறாய்... ஊரிலேயிருந்து தூக்கிக்கொண்டு வருகிறவர் களுக்கு இல்லாத களைப்பு உனக்கு இப்போது ஏற்பட்டுப் போச்சா?" என்று கேட்டான்!

பிறந்தது முதலே பேசாத அவர், ராஜா இந்த மாதிரி ஒரு கேள்வி கேட்டவுடனே பேச ஆரம்பித்தார்.

அவர் அன்று, பேசவில்லையென்றால் நமக்குத் தத்துவம் தெரிந்திருக்கப் போவதில்லை. அவர் பேசிய முகூர்த்தம் இருக்கிறதே, அது ரொம்ப உயர்ந்தது.

"யாரைப் பார்த்து குண்டு என்கிறாய்? நான் குண்டு அல்ல; யார் பல்லக்கைத் தூக்குகிறார்...? நான் பல்லக்கைத் தூக்கவில்லை. பல்லக்கைத் தூக்குவதனால் உண்டான சிரமம் யாருக்கு என்று நினைக்கிறாய்..." என்று ஜடபரதர், ராஜாவை நோக்கிச் சொன்னார்.

ராஜா பார்த்தார்... இதென்ன பைத்தியமாக இருக்கும் போலிருக்கிறதே! பிரத்யக்ஷமாக குண்டு

என்று தெரிகிறபோது, "குண்டு இல்லை" என்று மாற்றிச் சொன்னால் யாராவது ஒப்புக்கொள்வார்களா? கண்ணுக்கு நேராகத் தெரிகிறபோது மாற்றிச் சொன்னால் நன்றாக இருக்குமா?

திரும்பவும் "நான் குண்டு அல்ல'' என்பதை அழுத்திச் சொல்கிறார் அவர். 'நான்' என்பது ஆத்மா. ஆத்மாவில் ஒல்லியான ஆத்மா, குண்டான ஆத்மா, பருமனான ஆத்மா என்றெல்லாம் உண்டோ? ஆத்மா வெல்லாம் ஒரே மாதிரி அணுவானது. ஆகையினால் என் சரீரம் குண்டு என்று சொல், ஒப்புக்கொள்கிறேன். ஆனால் ஆத்மாவைக் காட்டிலும் வேறான சரீரத்தை 'நான்' என்று சொல்கிறாயே அது எப்படிப் பொருந்தும்?" என்றும் கேட்கிறார் ஜடபரதர்.

அதற்கும் மேலே அவர் சொல்கிறார்:

"நீ பல்லக்கிலே வருகிறாய். இந்த பூமியிலே பல்லக்கைத் தூக்குவதனால் உண்டான சிரமம் எனது என்கிறாய். நன்றாகக் கவனி. எனது பாதமானது பூமியிலே நன்றாக ஊன்றப்பட்டிருக்கிறது. கணுக்கால் இருக்கிறது. அதற்கு மேல் முழங்கால் இருக்கிறது. அதற்கு மேல் தொடை இருக்கிறது. அதற்கு மேல் இடுப்பு இருக்கிறது. அதற்கு மேல் உடம்பு; அதற்கு மேல் தோள்; அதற்கு மேல் பல்லக்கு வைக்கப் பட்டிருக்கிறது.

இப்போது இந்தப் பல்லக்கை இந்தப் பாதம் தூக்குகிறதா? கணுக்கால் தூக்குகிறதா, முழங்கால் தூக்குகிறதா? தொடை தூக்குகிறதா? தோள் தூக்குகிறதா? எது தூக்குகிறது?" என்றார்.

ராஜாவுக்குத் தலை சுற்றியது! அடுத்து இன்னொரு கேள்வி கேட்டார் ஜடபரதர்:

"விருக்ஷம் —மரம் இருக்கிறது. அது நன்கு சாங்கோபாங்கமாக வளர்ந்திருக்கிறது; உயர்ந்திருக்கிறது. விசேஷமான மரம் என்று எல்லோரும் கொண்டாடு கிறார்கள்! இந்த மரத்தை வெட்டிக் கீழே போட்டால் அதற்கு மரம் என்ற பெயர் போய்விடுகிறது. கட்டை என்று அதைச் சொல்கிறார்கள். அதையே ரம்பத்தால் அறுத்துப்போட்டால் பலகை. அதற்கு வர்ணமெல்லாம் பூசி, பட்டுப் பீதாம்பரங்களெல்லாம் போர்த்தி அலங் கரித்தால் பல்லக்கு—ஆந்தோளிகா — சிவிகா என்று பெயர். எல்லோரும் உன்னை என்ன சொல்கிறார்கள்...? 'ராஜா பல்லக்கிலே பவனி வருகிறான்' என்றுதானே சொல்கிறார்கள்...? 'ராஜா கட்டையிலே போகிறான்' என்று சொல்கிறவர்கள் உண்டோ?" என்றார்!



# 14

ரகுகண சக்கரவர்த்தி, ஜடபரதர் சொன்னதையெல்லாம் கேட்டு ஒன்றுமே புரியாமல் விதிர்விதிர்த்துப் போனார். பல்லக்கிலே இருந்து கீழே குதித்தார். "சுவாமி, தாங்கள் யாரோ தெரியவில்லை. தாங்கள் சொல்கிற விஷயம் எதுவுமே புரிய மாட்டேனென்கிறது. கபிலரிடம் விஷயம் கேட்கலாம் என்றுதான் கிளம்பிப் பல்லக்கில் ஏறினேன். வழியிலே தாங்கள் வந்து இந்த மாதிரி பேசுகிறீர்கள். ஏதோ ஜன்மாந்திரத்திலே பண்ணிய பாப விசேஷத்தினாலே இந்தப் பல்லக்கு தூக்குதல் என்கிற ஒரு காரியம் உங்களுக்கு ஏற்பட்டுப் போச்சு. உண்மையில் இந்தப் பல்லக்கு தூக்குகிற நிலையே உங்களுக்கு இல்லை. நான் தப்பு பண்ணிவிட்டேன்; என்னை மன்னிக்க வேண்டும். எனக்குப் புரியும்படியாகச் சொல்ல வேண்டும்" என்று அழகாக, பணிவாகக் கேட்டுக் கொண்டார்.

அப்போது ஜடபரதர் சொல்கிறார்:

"பல்லக்கைத் தூக்குவது நான் அல்ல. இந்த சரீரம் தூக்குகிறது. இந்த ஆத்மா மற்றொரு ஆத்மாவுக்குத் தஞ்சன் அல்ல. எல்லா ஆத்மாக்களும் அந்த எம்பெருமானுக்கே தஞ்சம்..." என்பதை அழகாக எடுத்துக்காட்டுகிறார்.



"ஒரு ஆத்மா இன்னொரு ஆத்மாவைத் தூக்க முடியுமோ? ஒரு சரீரம் மற்றொரு சரீரத்தைத் தூக்கலாமேயொழிய ஒரு ஆத்மா இன்னொரு ஆத்மாவைத் தூக்குதல் என்பது பொருந்தாத விஷயம். பல்லக்கைத் தூக்குவதால் உண்டான சிரமம் எனக்கு இல்லை. எனக்கு இல்லை என்றால், ஆத்மாவுக்கு இல்லை; சரீரத்துக்குத்

தான் அந்தச் சிரமம். ஆகையினாலே, இப்போது நீ ஏதோ புண்ணிய விசேஷத்தினால் சக்கரவர்த்தியாக உட்கார்ந்திருக்கிறாய். பாப விசேஷத்தினால் இன்னொருவன் பல்லக்குத் தூக்குபவனாகப் பிறக்கிறான். தூக்குதல், தூக்கப்படுதல் என்கிற பாவமானது இங்கே இருக்கிறது. இது நல்ல முறையிலே உனக்குப் புரிய வேண்டும் என்பதற்காக ஒரு கதை சொல்லுகிறேன். கேள்...'' என்று ஆரம்பித்து, கதையைச் சொன்னார் ஜடபரதர்:

"பூர்வகாலத்திலே ரிபு என்று ஒருத்தர் இருந்தார். அவருக்கு ஒரு சிஷ்யன்—நிதாகர் என்று பெயர். ஆத்ம ஞானம் கைவந்த மஹரிஷி ரிபு.

'ஆத்மா என்பது மிகவும் சிறியது, அணுவானது. அதற்கு அவயவங்களெல்லாம் கிடையாது. ஆத்மாவிலே ஜாதி—மத பேதங்களெல்லாம் கிடையாது. பிராமணனான ஆத்மா, வைஸ்யனான ஆத்மா என்றெல்லாம் ஆத்மாவில் கிடையாது. சரீரத்துக்குத் தான் இந்த ஜாதி — பேதங்களெல்லாம்.

ஆத்மா என்றால், அது அறிவுடையதாக விளங்குகிறது, அந்த அறிவாகவும் விளங்குகிறது.'

இப்படியெல்லாம் நிதாகருக்கு உபதேசம் பண்ணினார் ரிபு. உபதேசம் பண்ணிவிட்டு ரிபு என்பவர் புறப்பட்டுப் போய்விட்டார். நிதாகர் அதையே அப்படியே சிந்தனை பண்ணிக்கொண்டிருந்தார். இப்படி அவர் சிந்தித்துக் கொண்டிருக்கையிலேயே ஆயிரம் வருடங்கள் உருண்டோடின. ஒரு நாள் நிதாகர் காட்டுக்குச் சென்று தர்பை

யெல்லாம் நிறைய எடுத்துக்கொண்டு, அதைத் தலையிலே மூட்டையாகக் கட்டிக்கொண்டு ஊருக்குள்ளே வருகிறார். தேவிகா என்கிற நதி தீரத்திலே, சுநகரம் என்கிற பட்டினத்திலே வாஸம் பண்ணிக்கொண்டிருக்கிறார் நிதாகர். அன்றைய தினம் அந்த ஊர் ராஜாவுக்குப் பிறந்த நாள். வீதியிலே ஊர்வலமாக வந்துகொண்டிருந்தார். பட்டத்து யானை மேலே பவனி வருகிறார். ரத—கஜ—துரக பதாதி களெல்லாம் கூட வருகிறார்கள்.

இவர், சமித்தை எடுத்துக்கொண்டு, தர்பத்தைக் கட்டிக்கொண்டு ஊருக்குள் வந்துகொண்டிருந்தாரே நிதாகர்... அவர் என்ன பண்ணினார் என்றால், இவற்றுக்கு நடுவிலே போனால், எல்லாம் அபவித்ரமாகி விடுமே என்று சிந்தித்து, பிற்பாடு போகலாம் என்று முடிவு செய்து அவ்வளவு சுமையையும் தலையிலே வைத்துக்கொண்டு ஓர் ஓரமாக நின்றுகொண்டிருக்கிறார்.

அப்போது அவருடைய ஆசார்யார் ரிபு அங்கே வந்தார். வந்து இவரைப் பார்த்து, 'தனித்து இங்கே நின்றுகொண்டிருக்கிறீரே, வீட்டுக்குப் போகலாமே, ஏன் போகவில்லை?' என்கிறார்.

'ராஜாவினுடைய ஊர்வலம் நடக்கிறதல்லவா? அது போன பிற்பாடு அக்கிரஹாரத்துக்குப் போகலாம் என்று இங்கேயே ஒதுங்கி நிற்கிறேன். பவித்திரமான வஸ்துவையெல்லாம் தலையிலே வைத்துக் கொண்டிருக்கிறேனே!' என்றார்.

உடனே ரிபு கேட்டார்: 'ஊர்வலமா? ராஜாவா? ராஜா என்றால் யார்?'

'ராஜாவென்றால் தெரியாதா? அதோ தெரிகிறதே பெரிய யானை, அந்த யானை மேல் உட்கார்ந்திருக்கிறானே, அவன்தான் ராஜா. கீழே இருக்கிறதே, அதுதான் யானை.'

உடனே, 'யானையா? யானையென்றால் யார்?' என்று கேட்டார் இவர்!

'யானையென்றால் தெரியாதா? நீண்ட துதிக்கையும் தந்தங்களும் கொண்டு அழகாக காட்சி அளிக்கிறதே, காதை ஆட்டுகிறதே... அழகான மணி போடப்பட்டிருக்கிறதே, பெரிய உருவத்தோடு இருக்கிறதே அதுதான் யானை... அதன்மேல் மண்டபம் இருக்கிறதே, அதற்குள் இருப்பவன் ராஜா. மேலே இருப்பவன் ராஜா. கீழே இருப்பது யானை!'

உடனே ரிபு கேட்டார்: 'மேலே இருப்பவர் ராஜா, கீழே இருப்பது யானையா? மேலே என்றால் என்ன? கீழே என்றால் என்ன பொருள்...?'

'மேலே என்றால் தெரியாதா உனக்கு...?' என்று தலையிலிருந்த மூட்டையைக் கீழே போட்டார் நிதாகர். ரிபுவின் மேலே ஏறி உட்கார்ந்து கொண்டார். வந்திருப்பவர் தன்னுடைய ஆசார்யர் என்பது தெரியாததினாலே, கருட வாகனம் மாதிரி இரண்டு பக்கமும் இரண்டு கால்களைப் போட்டுக்கொண்டு அவர் மேல் உட்கார்ந்து, அவர் தலையை ஒரு குத்து குத்திவிட்டுச் சொல்கிறார்:

'நீர் கீழே, நான் மேலே; நான் மேலே, நீர் கீழே-என் போன்று ராஜா அங்கே மேலே, யானை அங்கே கீழே. யானை கீழே, நீர் கீழே. ராஜா மேலே, நான்

மேலே, யானை கீழே, நீர் கீழே!'' என்று மாற்றி மாற்றி கனம் சொல்கிறமாதிரி பிரித்துப் பிரித்துப் பல தடவை சொன்னார்.

'நான் மேலே—நீ கீழே' என்பதை வலியுறுத்தி அதை ராஜாவுக்கும் யானைக்கும் ஒப்பிட்டு; 'தூக்குவது யானை, தூக்கப்படுவது ராஜா' என தூக்குதல் தூக்கப் படுதல் என்கிற சம்பந்தத்தை — வாஹ்ய — வாஹன சம்பந்தத்தை எடுத்துக்காட்டி. 'அது போல்தான் நீர் என்னைத் தூக்குகிறீர்' என்று ஒரு போடு போட்டார்.

இவ்வளவையும் கேட்டுக் கொண்ட ரிபு, 'நான் மேலே, நீர் கீழே என்று சொல்கிறாயே... நான் என்றால் யார்? நீர் என்றால் யார்?...' என்று கேட்டார்!

அப்போதுதான் வந்திருப்பவர் யார் என்பது அந்த நிதாகருக்குப் புரிந்தது!

இந்த மாதிரி விசாரம் பண்ணுபவர் நம் ஆசார்யர் ஒருவர்தான். ஆத்ம விசாரம் பண்ணுகிறவர் அவர். லோகத்தில் மற்ற எல்லோரும் சரீரத்தைப் பார்த்து விட்டுப் போகிறார்களேயொழிய ஆத்ம விசாரம் பண்ணக்கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்?! அத்தகைய மகான் இவர் ஒருவர்தான் என்பதைத் தெரிந்துகொண்டார்.

கீழே குதித்தார், 'என்னை மன்னித்தருள வேண்டும்... தாங்கள் என்று தெரியவில்லை. தாங்கள் எனக்கு ஞானத்தை உணர்த்த வேண்டும்' என்று கேட்டுக்கொண்டார்.

அப்போது ரிபு சொன்னார்: 'ஆயிரம் வருஷங்கள் ஆயிற்று நான் உனக்கு உபதேசம் செய்து. இவ்வளவு

நாள் நீ மனனம் பண்ணினாலும் உனக்கு ஞானம் கை வரவில்லை. எல்லாம் தெரிந்த மாதிரி பேசுவோம்; புரிந்த மாதிரி இருக்கும். ஆனால் ஒன்றும், புரியாது. மறுபடியும் மறுபடியும் அதே விஷயத்திலேயே நாம் உழன்று கொண்டிருப்போம். ஆத்மஞானம் கைவருதென்பது ரொம்ப கஷ்டம்.

'ராஜ சரீரத்தை யானை சரீரமானது தூக்குகிறதேயொழிய, ராஜாவுக்குள்ளே இருக்கிற ஆத்மாவுக்கும் யானைக்குள்ளே இருக்கிற ஆத்மாவுக்கும் தூக்குதல் தூக்கப்படுதல் என்கிற சம்பந்தம் இல்லை. இதை நீ உணர வேண்டும் என்பதற்காகத்தான் உனக்கு இன்று வந்து தெரியப்படுத்தினேன்.

'ஏதோ ஒரு பாப விசேஷத்தினால்தான் அது பிராணியாக வந்து தூக்குகிறது; புண்ய விசேஷத்தினாலே இன்னொரு ஆத்மாவுக்கு ராஜ சரீரம் கிடைத்திருக்கிறது. சக்கரவர்த்தியாக அவன் உட்கார்ந்திருக்கிறான்.'

இதை உபதேசித்துவிட்டு, 'நான் போய் வருகிறேன்' என்றார் ரிபு. "சரி புறப்படுங்கள்" என்றார் நிதாகர்.

**ப**ல நாட்கள் சென்றன. இப்படியே பல நாள் நிதாகர் நித்யம் வைச்வதேவாந்தம் பண்ணிவிட்டு வெளியிலே காத்துக்கொண்டிருப்பார்.

வைச்வதேவம் என்கிற கர்மாவை கிருஹஸ்தாசிரமத்திலே நித்யம் பண்ணவேண்டும்.

காய்கறிகளை நறுக்குகிறோம்—அரிவாள்மணையில் நம் கிருஹத்திலே கல்யாணம் என்றால்

வாழை மரத்தை வெட்டிக் கொண்டுவந்து கட்டுகிறோம். மாவிலைகளையும் தோரணமாக ஆக்குகிறோம். காய்கறிகளையே உண்டாலும், அவற்றை வெட்டுதல், நறுக்குதல், திருத்துதல்கூட பாவம்தான். தாவர வர்க்கங்களை அழிக்காமல் இருக்க முடிய வில்லை. நாம் சாப்பிடுவதற்காக இப்படியெல்லாம் பண்ணுகிறோம். கத்தியால் அறுத்தல் என்பது பெரிய— தப்பான காரியமானதனாலே அந்தப் பாவமெல்லாம் நீங்க வேண்டும். நாம் படுத்துக்கொண்டிருக்கிறபோது எத்தனையோ கிருமி கீடாதிகளெல்லாம் மாண்டு போகின்றன. அந்தப் பாபமெல்லாம் போவதற்காக வைச்வதேவம் என்ற கர்மாவை கிருஹஸ்தாசிரமிகள் நித்யம் செய்ய வேண்டும்.

இந்த கர்மாவைத்தான் நிதாகர் செய்து வந்தார்."



# 15

**வி**டாமல் வைச்வதேவம் பண்ணி வந்த ஒருத்தரைப் பற்றிய கதை இருக்கிறது.

ஒரு கிருஹத்தில் ஒரு அப்பா. அவர் நித்யம் புரோடாசத்தை (அக்னியில் சேர்க்க வேண்டிய ஆஹுதி பண்டம்) எடுத்து வைத்துவிட்டு, கண்ணை மூடிக்கொண்டு மந்திரத்தை ரொம்ப பக்தியோடு சொல்லுவார். ஒரு நாள் கண்ணைத் திறந்து பார்க்கிற போது, ஒரு பூனை வந்து அதை எடுத்துக்கொண்டு போய்விட்டது!

உடனே ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க ஆரம்பித்தார் அவர். பூனை சரியாக, சொல்லிவைத்த மாதிரி அந்த புரோடாசத்தை அக்னியில் சேர்க்கிற சமயத்தில்தான் தினமும் வரும். அந்த வாசனை அதற்கு நன்றாகப் பழகிவிட்டது. மத்தியானம் பன்னிரண்டு மணிக்குச் சரியாக வந்துவிடும்! தினமும் புரோடா சத்தை எடுக்க முயற்சிபண்ணும்.

சாஸ்திரம் அறிந்தவர்கள் அழகாகப் பேசி வைத்திருக்கிறார்கள்.

பசு இருக்கிற இடம்கூட பூனைக்குத் தெரியாது. பசுவுக்கு அது ஒரு நாள் கூட புல் வைக்கோல் போட்ட தில்லை. ஆனால், பூனை பால் குடிக்காத நாளே

கிடையாது! அது நித்யம் பாலைக் குடித்துக் கொண்டிருக்கிறது! ஏன்...? க்ரிஷி— முயற்சி! இந்த வீடு... இந்த வீட்டிலேயிருந்து அந்த வீடு என்று அது போய்க் கொண்டேயிருக்கும் பாருங்கள்... அதற்கு எங்கேனும் ஓரிடத்திலே பால் கிடைத்துவிடுகிறது. தன் முயற்சியினாலே தினமும் பாலைக் கண்டுபிடித்துக் குடிக்கிற பூனை என்றைக்காவது ஒரு நாள் பசுவைப் பார்த்திருக்குமா? பசுவுக்கு ஒரு கை புல்லைப் பிடுங்கிப் போட்டிருக்குமா? ஆனால், தேடி முயற்சிப்பதால் அதற்குக் கிடைத்து விடுகிறது!

அந்த மாதிரிதான் இந்த வீட்டில் பூனையானது தினமும் புரோடாசத்தைச் சேர்க்கிற நேரத்தில் சரியாக வந்து சேர்ந்துவிடும். இவர் என்ன பண்ணினார். மறுநாளிலிருந்து கையிலே தடியை வைத்துக்கொண்டு, பூனை வருகிறபோதெல்லாம் அதை வாசல் வரை துரத்திச் சென்று வெளியே அனுப்பிவிட்டு வருவார். திரும்பி வந்து ஹோமத்தைத் தொடர்வார்.

இப்படி ஹோமம் பண்ணிக்கொண்டிருந்தவர் ஒரு நாள் புறப்பட்டுப் போய்விட்டார்! அவருடைய பிள்ளை வைச்வதேவம் முதலான கர்மாக்களைப் பண்ண வேண்டிய கட்டம் வந்தது. அவனும் அதையெல்லாம் செய்தான். ஒரு நாள், இந்தப் பிள்ளையின் கிருஹத்துக்கு ஓர் அதிதியும் வந்தார். இவன் — இந்தப் பிள்ளை — என்ன பண்ணினான் என்றால், சரியாகப் பன்னிரண்டு மணிக்குத் தினமும் பூனை வருகிறதே என்று, அப்பாவைப் போலவே தடியை எடுத்துக் கொண்டு போய் பூனையை வாசல் வரைக்கும் துரத்திக் கொண்டுபோய் விட்டுவிட்டு அப்புறம் உள்ளே

வந்தான். அப்புறம் அந்த அதிதியைச் "சாப்பிடலாம் வாருங்கள்" என்று அழைத்தான்.

வந்தவர் கேட்டார்: "ஏன்பா, பூனை சாதுவான பிராணிதானே... அதை ஏன் தெருவரைக்கும் ஓட்டுகிறாய்?" என்று!

அதற்கு அவன் சொல்கிறான்:

"எங்கப்பா ரொம்ப சாது. ஆனால், அவர் இப்படித்தான் தினமும் மத்தியானம் பன்னிரண்டு மணிக்குப் பூனையை ஓட்டுவார். அப்பா செய்ததை நானும் விடாமல் செய்ய வேண்டுமல்லவா? அதைத்தான் பண்ணுகிறேன்" என்கிறான்!

**அ**ப்பா எதற்குப் பூனையை ஓட்டினார்...? வைச்வ தேவத்துக்குத் தடையாய் இருக்கிறது என்று ஓட்டினார்.

அப்பா பண்ணிய வைச்வதேவத்தை பிள்ளை விட்டுவிட்டான்; பூனையை ஓட்டுகிற காரியத்தை மட்டும் பண்ணுகிறான்! அது பொருந்துமா? இதை — இந்தக் கதையை — வேடிக்கையாக ஆசார்யர்கள் சொல்லுவார்கள்!

'வைச்வதேவம் என்கிற கர்மாவை நித்யம் சந்தியாவந்தனம் பண்ணுகிற மாதிரி பண்ணவேண்டும். அதைப் பண்ணிவிட்டு வாசலில்போய் நிற்க வேண்டும். ஒரு பசுவைக் கறப்பதற்கு எத்தனை நாழி ஆகுமோ அத்தனை நேரம் நிற்க வேண்டும். அத்தனை நேரத்துக்குள் அதிதிகள் யாராவது வருகிறார்களா என்று பார்க்க வேண்டும். அப்படி யாரேனும் வந்தார்களென்றால் அவர்களுக்கு அன்னமிட்ட பிற்பாடுதான் சாப்பிட வேண்டும்' என்கிறது சாஸ்திரம்.

நன்றாகக் கவனிக்க வேண்டும். இங்கே, ஒரு மணி நேரமோ, இரண்டு மணி நேரமோ காத்திருக்கும்படி சாஸ்திரம் சொல்லவில்லை. ஒரு பசுவைக் கறப்பதற்கு ஆகும் நாழிதான் காத்திருக்கச் சொல்கிறது!

அப்படியானால் கிருஹத்திலே பசு இருக்க வேண்டும் அல்லவா! அதைக் கறப்பதற்கு ஆகும் நேரம் எவ்வளவு என்றும் தெரிந்திருக்க வேண்டும். ஆகவே, இதன் மூலம், கோ சம்ரக்ஷணம் பண்ண வேண்டும் என்பதும் வலியுறுத்தப்படுகிறது.

அந்த மாதிரி கோ சம்ரக்ஷணம், அதிதி உபசரணம், வைச்வதேவம் எல்லாம் பண்ணிக் கொண்டு இந்த நிதாகர் வெளியிலே பவித்திரமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவரைத் தேடிக் கொண்டு ஆசார்யர் வருகிறார் ஒரு நாள். வந்தவுடனே ஆசார்யன் என்று தெரிந்துகொள்ளவில்லை இந்த நிதாகர். "அந்தர்யாமி நிவேதனம் இங்கேயே ஆக வேண்டும். (இங்கேயே உணவருந்த வேண்டும்) தாங்கள் பிரும்ம தேஜஸ்ஸோடு விளங்குகிறீர்கள். உள்ளே கிருஹத்திற்கு எழுந்தருள வேண்டும்'' என்று கூப்பிட்டார்.

அவரும் "வருகிறேன்" என்று சொல்லி எழுந்தருளி னார். உள்ளே வந்தவுடனேயே, "இந்த வீட்டில் என்ன தளிகை? என்ன பண்ணியிருக்கிறது?" என்று கேட்டார்.

என்ன சமையல் என்று சொன்னார். சொன்ன வுடனேயே, "இதெல்லாம் எனக்குப் போதாது. எனக்கு ஓஹோரைகள் (சித்ரான்னங்கள்) எல்லாம் வேண்டும். புளியோதரை வேண்டும். பாயஸம் வேண்டும். தயிர்

வடை வேண்டும். மோர்க்குழம்பு வேண்டும். பருப்பு வேண்டும். தத்யோன்னம் (தயிர்சாதம்) வேண்டும்'' என்று அடுக்கினார்.

திடீரென்று ஓர் அதிதி வந்து 'அது வேண்டும் இது வேண்டும்' என்று கேட்டால் என்ன பண்ண முடியும்?

நிதாகர் ரொம்ப உணர்ந்தவர். பத்னியை ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்துவிட்டார்!

“ஹே ஷாலினி! என்ன ஆச்சர்யம்...? உன்னைப் போல் உத்தமி உண்டோ? இத்தனை நாட்களாக வந்த அதிதிகளுக்கு நாமே பண்ணிப் போட்டிருக்கிறோம். இன்றைக்கு வந்த அதிதி, 'அது வேண்டும் இது வேண்டும்' என்று கேட்கிறார். இப்படி உரிமையோடு கேட்கிற அதிதி எங்கும் கிடைப்பாரா? அவர் கேட்டதையெல்லாம் ஒரு நொடியிலே நீ பண்ணி விடுவாய் என்று எனக்குத் தெரியுமே!'' என்று ஸ்தோத்திரம் பண்ணினார்.

அவளும் ரொம்ப உத்தமி. அன்னியோன்னிய தாம்பத்தியம் அந்த கிருஹத்திலே. 'எந்த கிருஹத்திலே ஸ்த்ரீகள் பூஜிக்கப்படுகிறார்களோ அங்கெல்லாம் சிரேயஸ்' என்கிறது மனுஸ்ம்ருதி.

அப்படியானால் பத்னியைக் கோலமிட்ட மணையில் உட்கார வைத்து, 'ஓம் தர்ம பத்னியை நம:' என்று அர்ச்சனை பண்ணவேண்டும் என்று அர்த்தம் இல்லை. ஸ்த்ரீ தர்மம் நல்லபடியாக நடக்க ஸ்த்ரீகளை நன்றாக நடத்த வேண்டும் என்று அர்த்தம்.

நிதாகரின் மனைவி எல்லாவற்றையும் சமைத்து விட்டு அவரைச் சாப்பிடக் கூப்பிட்டாள். உட்கார்ந்து நன்றாகச் சாப்பிடுகிறார் ரிபு. நல்ல பூரணமாகப் பரிமாறுகிறாள். கடைசியில் தயிர்... கட்டி கட்டியாகத் தயிர் கொண்டு வந்து சேர்த்தாள். அவரும் பிசைந்து சாப்பிட்டார்.

இத்தனை நாழி வாயை மூடிக்கொண்டிருந்த நிதாகர் இன்னும் கொஞ்சம் நாழி வாயை மூடிக் கொண்டிருந்திருக்கலாம்... அவரைப் பார்த்துக் கேட்டார்:

"சுவாமி பசியோடு வந்தீரே... உமக்குத் திருப்தி ஏற்பட்டதா? பசி உபாதை நீங்கியதா? என்றார்.

ரிபு நன்றாக ஒரு ஏப்பத்தை விட்டு விட்டு, தீர்த்தத் தைக் குடித்துவிட்டு, "யாரைப் பார்த்து பசி என்கிறாய்? எனக்குப் பசியுமில்லை களைப்புமில்லை..." என்றார்!



# 16

“நான் எங்கே சாப்பிட்டேன்? எனக்குப் பசியு மில்லே; களைப்புமில்லே!” என்று வந்தவர் சொல்லவும், நிதாகர் உள்ளே சமையல்கட்டிலே போய்ச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்தார். அத்தனையையும் சாப்பிட்டு விட்டு ‘நான் சாப்பிடவில்லை’ என்றால்...?

‘நானா சாப்பிட்டேனே? எனக்கா பசி என்று கேட் கிறீரே... நீர் சாப்பிட்டதைத்தான் நான் பிரத்யக்ஷமாகப் பார்த்தேனே!” என்றார் அதிதியிடம்.

“நான் சாப்பிடவில்லை: எனக்குப் பசி இல்லை...” என்று ‘நான்’ என்கிற சொல்லை அழுத்திச் சொன்னார் வந்திருந்த விருந்தினர். அவர் ‘நான்’ என்பதை அப்படி அழுத்திச் சொன்னவுடனேதான் வந்திருப்பவர் தமது ஆசார்யர் என்று தெரிந்தது நிதாகருக்கு.

நான் என்பது ஆத்மாவையே குறிக்கும் என்றால் ஆத்மாவுக்குப் பசி எது? ஆத்மா சாப்பிடுமா? இப் போது சாப்பிட்ட பொருள்களினாலே ஆத்மா வுக்குப் பலம், தேஜஸ் ஏற்படுமா? இந்தச் சரீரத்திலே ஏற்படக்கூடிய விகாரம் ஆத்மாவை எவ்வாறு தொடும்? பகவான் உள்ளே — சரீரத்தினுள்ளே — ‘ஜாடராக்னி யாக இருந்து தகிக்கிறேன்’ என்கிறான். அவன் தகிக்க தகிக்க தாகம் ஏற்படுகிறது. தகிக்க தகிக்கப் பசி

ஏற்படுகிறது. இது சரீர தர்மம். மனத்திலே ஏற்படக் கூடிய விகாரம். சாப்பிட வேண்டும்போல் தோன்று கிறது. சரீரத்துக்கு ஏற்பட்ட தர்மத்தைப் போய் ஆத்மாவிலே சேர்க்கலாமா?

ஆத்மா, சரீரத்துக்குள்ளே இருக்கிறது என்பதனா லேயே ஆத்மா சாப்பிடுகிறது என்று சொல்லலாமா? ஆத்மாவுக்கு வாய் ஏது, சாப்பிடுவதற்கு? அவயவம் ஏது, எடுத்து வாயிலே போட்டுக்கொள்வதற்கு?

ஆகையினாலே, ஆத்மாவுக்குப் பசி, தாகம் கிடையாது. இந்த விஷயத்தை நாம் நன்கு கவனிக்க வேண்டும்.

தினமும் இரண்டு விதமான அன்னத்தை இட்டு நாம் நம்மை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஒரு அன்னம் சரீரத்துக்கு; ஒரு அன்னம் ஆத்மாவுக்கு.

பரப்ரும்மமாகிற அன்னத்தை ஆத்மாவுக்கு இட வேண்டும்.

“கீரை நல்லதா?” என்று ஒருத்தர் கேட்டார். “கீரை உடம்புக்கு நல்லது. கீதை ஆத்மாவுக்கு நல்லது!”

நாம் சாப்பிடுவது மொத்தம் ஆத்மா அல்லாத — நாம் அல்லாத— விஷயத்துக்குத்தான்! நித்யம் அதற்கே உழைத்துக்கொண்டிருக்கிறோம். அதைப் பேணி வளர்ப்பதிலேயே காலம் நடந்துகொண்டிருக்கிறது.

இதை வித்தியாசப்படுத்திக் காட்டுவதற்குத்தான் நிதாகரிடம் அப்படி ஒரு வேடிக்கை நடத்தினார் ரிபு. ஆத்மா சாப்பிடாது அல்லவா, அதனால் ‘நான் சாப்பிடவில்லை; எனக்குப் பசி இல்லை’ என்றார் — அழகாகச் சொன்னார்.

வேணுகான லோலனாக அழகாக பரமாத்மா புல்லாங்குழல் இசைக்கிறான்.

"சிறு விரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்ய வாய் கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவம் கூடிலிப்பக்
கோவிந்தன் குழல்கொடு ஊதினபோது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
கவிழ்ந்து இறங்கிச் செவி ஆட்டகில்லாவே''

என்றார் பெரியாழ்வார்.

பகவான் அப்படி அழகாக வேணுகானம் பண்ணுகிறான். அவன் விரல்களெல்லாம் பரிமாறுகின்றன.

ஒரு வித்வான் புல்லாங்குழல் ஊதுகிறபோது பார்த்தால், வாயால் காற்றை ஊதுகிறார். விரல்களெல்லாம் வாத்தியத்தின் துளைகள் மீது இருக்கின்றன. ஊதியபடியே விரல்களை மாற்றிக்கொள்கிறார். அப்படி மாற்ற மாற்ற, ஒவ்வொரு இடத்திலே ஒவ்வொரு ஸ்வரம் ஒலிக்கிறது. ஓரிடத்திலே ஷட்ஜம், இன்னொரு இடத்திலே ரிஷபம், ஓரிடத்திலே காந்தாரம்... அந்த த்வனி குழலிலே கேட்கிறது. ஆனால், ஊதுகிற காற்றில் ஸரிகமபதநி உண்டோ?! அந்தந்த ரந்தரத்தின் (துளையின்) வழியாக வருகிறபோது அதது அந்தந்த ரூபத்தைப் பெறுகிறது — சப்தத்தைப் பெறுகிறது.

அந்த மாதிரிதான் இந்த ஆத்மாக்கள். எல்லாம் ஒன்றுபோல் இருந்தாலும், அதது பண்ணிய புண்ணிய

– பாபத்துக்கு ஏற்ப ரூபத்தை ஏற்று ஒன்று யானை என்று பெயர் பெறுகிறது. ஒன்று பூனை என்று பெயர் பெறுகிறது; இப்படி சரீராக்ருதி (உடலின் அமைப்பும் அளவும்) பேதத்தினால் (வித்தியாசத்தினால்) வெவ்வேறு ரூபத்தை அடைந்திருக்கிறதேயொழிய, ஆத்மாவிலே இத்தனை பேதங்கள் கிடையாது.

**ஆ**த்மாத்வைதம் என்பதை நாம் உணர வேண்டும். அறிவுடையது ஆத்மா. அறிவானது ஆத்மா. அதற்கு அன்னத்தினால் பிரயோஜனம் இல்லை. அது இளைக்காது, பருக்காது. ஆகையினாலே, அப்படிப் பட்ட ஆத்மாவாக நமக்குள் திகழ்பவன்தான் புருஷ சப்தத்தினால் சொல்லப்படுகிறான்.

பகவானுக்கு 'புருஷன்' என்று ஒரு நாமா உண்டு. இந்த ஆத்மாவும் புருஷன். ஆகையினால் சரீரத்துக் குள்ளே ஆத்மாவும் இருப்பதனாலே புருஷன் என்று இந்த ஆத்மாவுக்குப் பெயர்.

ஆத்மா சேதனன் — அறிவுடையவன். அசேதன மான சரீரத்துக்குள்ளே இந்த ஆத்மா இருக்கிறது. ஆத்மாதான் சரீரத்தைத் தாங்கிக்கொண்டிருக்கிறது. எந்த சேதனனுக்கு அதீனமாய், அவன் இட்ட வழக்காய் இருக்கிறதோ அது அவனுடைய சரீரம். பகவான் இட்ட வழக்காய் இது இருப்பதனாலே, இது மொத்தமும் அவனுக்கு அதீனமாய் இருக்கிறது. இந்தச் சரீரமும் சரி, இந்த ஆத்மாவும் சரி, பகவானுக்குச் சரீரம். அந்த எம்பெருமான் எல்லாவற்றுக்கும் அந்தராத்மாவாக இருக்கிறான். சித்—அசித்—ஈசுவரன் அவன். அசேதனமாக உலகிலே காணக்கூடிய அறிவற்ற

வஸ்துக்கள், அசையாப் பொருட்களுக்குள்ளேயும், அசையும்படியான அறிவுடையவற்றுக்குள்ளேயும் அவனே இருக்கிறான்.

அந்தராத்மாவாக இந்த இரண்டையும் பரிபாலனம் பண்ணக்கூடிய ஈசுவரனாக பரமாத்மா இருப்பதனாலே, அவையெல்லாம் உயர்ந்த கதியை அடைவதற்கான உபாயமாகவும் கதியாகவும்கூட அந்த எம்பெருமானே இருக்கிறான். அனைவரும் அடைவதற்குரிய பொருளாக அவன் விளங்குகிறான்.

இதைத்தான் 'யோகோ யோகவிதாம் நேதா பிரதான புருஷேசுவர;' என்று சஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது. பிரதான என்றால் சித்—அசித்— அனைத்திலும் உறைகிற என்ற அர்த்தம்.

இந்த சிதசிதீசுவர தத்துவத்துக்குரியவனானவன் எம்பெருமான் நரசிம்ஹன்.

நரம் கலந்த சிங்கமான ரூபத்துடன் அவன் ஆவிர்பவித்து, அவதார காலத்திலே மஹா உக்ர ரூபியாகக் காட்சியளித்தான். ஆனால், பரம சாந்த மூர்த்தி அவன். அவனைக் காட்டிலும் பரம சாந்த மூர்த்தி யாரும் இல்லை. அவனைக் காட்டிலும் தயை உடையவன் யாரும் இல்லை. எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி காக்கும் அவன் ஸர்வ வியாபியாய் அவதரித்தானே!

சஹஸ்ரநாமத்தில் ஒவ்வொரு நாமாவின் பொருளுக்கும் உரியவனாக இந்த நரசிம்ஹனே இருக்கிறான்.

விச்வம் என்பதிலே ஆரம்பித்து, விஷ்ணு நாரசிம்ஹ வபு; வஷட்கார: நாரசிம்ஹ வபு: பூதபவ்ய நாரசிம்ஹ வபு; பூதகிருதே நாரசிம்ஹ வபு: என்று ஒவ்வொரு நாமாவுடனும் தன்வயமாகக்கூடிய நாரசிம்ஹ சப்தம்.

பிரஹ்லாதன் சின்னக் குழந்தை. அந்தக் குழந்தை எந்த இடத்தைச் சொல்லும் என்று பயந்த பரமாத்மா எல்லா இடத்திலேயும் அவசரத் திருக்கோலம் பூண்டு நிறைந்தான்.

நரசிம்ஹ அவதாரத்துக்கு அவசரத் திருக்கோலம் என்று பெயர். அப்படி அது வேகமான அவதாரம்.

ராமாவதாரம் இருக்கிறது என்றால், யார் தமக்கு அப்பாவாக வருவதற்குத் தகுதி இருக்கிறது என்று அதிலே யோசனை பண்ணினான் பகவான். யக்ஞம் பண்ணிக்கொண்டிருந்த தசரதனைத் தந்தையாக வரித்து, அப்புறம் அங்கே வந்து அவதரித்தான் பரமாத்மா.

அந்த மாதிரியெல்லாம் யோசனை பண்ணி ரூபம் எடுக்க அவகாசமில்லை நரசிம்ஹ அவதாரத்தில். அதனால் அவசரத் திருக்கோலம்.

ஆசார்யர்கள் ரொம்ப சமத்காரமாக இதைச் சொல்லுவார்கள்:

வெளியிலே போய் அலைந்துவிட்டு வீடு திரும்புகிற சமயம் எடுக்கிற போட்டோ இருக்கிறது பாருங்கள்... அது ரொம்ப நன்றாக அமையும். போட்டோவுக்கென்று அலங்காரம் பண்ணிக்

கொண்டு போனால், அந்தப் படம் அவ்வளவு ருசிகரமாக இராது!

அந்த மாதிரி, ஏற்கெனவே தீர்மானம் பண்ணி ரொம்ப அழகனாக அவதரிக்க வேண்டும் என்று பல ரூபங்கள் எடுத்துக்கொண்டு வந்தான். ஆனால், அப்படி எடுத்த ராமகிருஷ்ண அவதாரங்களைக் காட்டிலும் அழகானது ஒன்று உண்டோ என்றால் அது நரசிம்ஹ அவதாரம்தான்!

அதனால்தான் நரசிம்ஹ என்ற திருநாமத்தை மட்டும் சொல்லாமல், நாரசிம்ஹ வபு; என்று திருமேனியை சேர்த்துச் சொல்கிறார் பீஷ்மாச்சார்யார், சஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தில்.

அந்த நரசிம்ஹ சரீரம் ரொம்ப அழகு. ஆசார்யர் பராசர பட்டர் ரொம்ப அழகாகச் சொல்கிறார்.

ஒருத்தர் பிறந்தது முதல் பாலைப் பருகிக் கொண்டிருக்கிறார். அவருக்குப் இப்போது 32 வயது ஆகிறது. ஒரு கிருஹத்துக்குப் போனார். அங்கே பால் கொடுத்தார்கள். ரொம்ப ருசியாக இருந்தது. இந்த 32 வயதில் அவர் இந்த மாதிரி பால் சாப்பிட்டதே இல்லை. “இது என்ன, இவ்வளவு ருசியாக இருக்கிறதே, இது பால்தானே?” என்றார்.

“ஆமாம். பால்தான்” என்றார்கள்.

“இதிலே கற்கண்டு போட்டிருக்கிறோம், சர்க்கரை போட்டிருக்கிறோம்” என்று சொன்னார்கள்.

இத்தனை நாளாக அவர் சாப்பிட்ட பால், சர்க்கரை சேர்க்காத பால். மறுநாளிலிருந்து சர்க்கரை

சேராத பால் அவருக்குப் பிடிக்குமோ? 'சர்க்கரை சேர்த்த பாலையே கொண்டு வா' என்று கேட்க ஆரம்பித்தார்.

அதுபோல், இத்தனை நாளாக பல ரூபங்களில் பகவானைப் பார்த்தவர் ஒருத்தர்... ஆனால், ஒரு நாள் நரசிம்ஹனைப் பார்த்தார் அவர்... 'இது சர்க்கரையும் பாலும் கலந்த சேர்த்தி' என்று அதைப் பார்த்த பிறகு மற்றொன்றையும் பார்க்கப் பிடிக்கவில்லை அவருக்கு...!



# 17

அழகியான் தானே அரிஉருவன் தானே
பழகியான் தாளே பணிமின்; குழவியாய்த்
தான் ஏழ்உலகுக்கும், தன்மைக்கும் தன்மையனே
மீன் ஆய் உயிர் அளிக்கும் வித்து

என்கிறார் திருமழிசையாழ்வார்.

"தெள்ளிய சிங்கமாகிய தேவை திருவல்லிக்கேணி கண்டேனே" என்கிறார் திருமங்கை ஆழ்வார்.

அழகிய சிங்கம் அவன். பார்ப்பதற்கு ரமணீயமான ரூபம். அதனால்தான், 'நாரஸிம்ஹ வபுஷே நம:' 'ஸ்ரீமதே நம:' என்கிற நாமாக்களால் அர்ச்சிக்கப்படுகிறான்.

இந்த ஸ்ரீமத் சப்தத்துக்கு 'ரூபயௌவன லாவண்ய அதீவ சௌந்தர்ய ரூப:' என்று பராசர பட்டர் வியாக்யானம் பண்ணுகிறார். ரொம்ப அழகான ரூபம். பார்ப்பதற்கு ரமணீயமான திவ்ய ரூபம் படைத்தவன் நரசிம்ஹன் ஆனதனாலே ராமகிருஷ்ணாதியவதாரங் களைக் காட்டிலும் அழகாக வந்து தோன்றினான். எங்கும் நிறைந்தான். அவசரக் கோலத்திலே, 'அந்தக் குழந்தை எந்த இடத்தைக் காட்டுமோ?' என்று எல்லா இடங்களிலும் நிறைந்தான்.

அத்ருச்யத அத்யத்புத ரூபம். இந்த அவதாரத்தில் ஈடுபடாதவர்களே கிடையாது. எல்லோரும் இதில் ஈடுபட்டு இதன் பிரபாவத்தைப் பேசியிருக்கிறார்கள்.

ஸ்ரீமத் பாகவதத்தில் ஸப்தம ஸ்கந்தத்தில் நரசிம்ஹ அவதாரத்தைச் சொல்லும்படியான சுலோகம் வருகிறது. ஸ்ரீமத் பாகவதம் மொத்தமும் நரசிம்ஹ பரம். ராமாயணமும் நரசிம்ஹனைச் சொல்கிறது. மஹா பாரதமும் நரசிம்ஹனைச் சொல்கிறது. பதினெட்டு புராணங்கள், உப புராணங்கள், ஆசார்யர்கள், ஆழ்வார்களின் ஸ்ரீ சூக்திகள் அனைத்தும் நர சிம்ஹனுடைய பிரபாவத்தையே பரக்கப் பேசுகின்றன என்று சொன்னால் மிகையாகாது.

ஸ்ரீமத் பாகவதம் இருக்கிறது பாருங்கள், அது கிருஷ்ணனுடைய கதையைச் சொல்வதற்கென்றே ஏற்பட்டது. ஸரஸ்வதி நதிக்கரையிலே, வியாஸ பகவான் ரொம்ப கவலையோடு உட்கார்ந்திருக்கிறார். அங்கே நாரதர் வந்தார். வியாஸரைப் பார்த்து, “சுவாமி! இத்தனை சிந்தனையோடு இருக்கிறீரே, உலகத்தில் சிதை—சிந்தை என்று இரண்டு கேள்விப்பட்டிருக்கிறீர்கள் அல்லவா?” என்றார்.

சிதை—சிந்தை இரண்டையும் நாம் உணர வேண்டும்.

சித்தா—என்பது மனசிலே ஏற்படக்கூடிய வியா கூலம்—கஷ்டம்.

சிதா என்பது ஸ்மசானத்திலே சவத்தை எரிப்ப தற்காக விறகினாலும் வரட்டியினாலும் அடுக்கப்பட்ட படுக்கை.

சாஸ்திரம் என்ன சொல்கிறது...? சிந்தையைக் காட்டிலும் சிதையே மேலானது என்கிறது. ஏனென்றால், சிதையானது பிராணனற்ற சரீரத்தைத்தான் எரிக்கிறது. சிந்தை பிராணனுள்ள சரீரத்தையே எரித்து விடுகிறது.

அதனால்தான் வியாஸரிடம் "சிந்தைக்கு இடங்கொடுக்கலாமா?" என்று கேட்டார் நாரதர்.

அதற்கு வியாஸ பகவான் சொன்னார்:

"வேதங்களையெல்லாம் நான் விவரித்தேன். புராணங்களும் எழுதினேன். மகாபாரதத்தை எழுதினேன். இவ்வளவு எழுதியும் என் மனத்திலே வியாகூலமாக இருக்கிறது. எதையோ பறிகொடுத்த மாதிரி இருக்கிறது" என்றார்.

அப்போது நாரதர் அவருக்குப உபதேசம் பண்ணினார்:

"ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தை நன்கு விபுலமாக — நல்ல முறையிலே நீங்கள் எடுத்துக்கூறவில்லை. அங்கங்கு கோடி காண்பித்திருக்கிறீர். அந்த கிருஷ்ணாவதாரத்தின் மகிமையைச் சொல்லும்படியான புராணத்தை இயற்றும். இந்த வியாகூலம் நீங்கும்" என்றார்.

அந்த உபதேசத்தைப் பெற்றுக்கொண்டு, கிருஷ்ணனுடைய அவதாரத்தைச் சொல்வதற்காகவே பாகவத புராணத்தை எழுதினார். அதில் தசம ஸ்கந்தத்தில் கிருஷ்ணாவதாரத்தையும் லீலைகளையும் ரொம்ப அழகாக எடுத்துச் சொல்கிறார். அப்படிச் சொல்கிற போது, கிருஷ்ணன் 'அற்புதமான குழந்தை' என்றார்

வியாஸர். அதே வியாஸர் அதே பாகவதத்தில் ஸப்தம ஸ்கந்தத்தில் நரசிம்ஹ அவதாரத்தைச் சொல்கிறபோது "அத்ருச்யத அத்யத்புத ரூபம்" என்று குறிப்பிடுகிறார். கிருஷ்ணாவதாரம் அற்புதம்; நரசிம்ஹ அவதாரமோ அதிஅற்புதம்! ஆகவே இந்த நரசிம்ஹ அவதாரமானது வியாஸருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டது என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறதல்லவா? அவருடைய வாக்கிலிருந்தே அது தெரிகிறது.



**ரு**க்மணி பிராட்டி, ஏழு சுலோகங்களை கிருஷ்ணனுக்கு எழுதி அனுப்பினாள். அந்த ஏழு சுலோகங்களில்

எங்கேயாவது அவனை 'கிருஷ்ணா' என்று கூப்பிடு கிறாளா என்றால், இல்லை. ஏனென்றால் 'கிருஷ்ணா' என்று கூப்பிட்டால் எங்கே வராது போய்விடுவானோ என்கிற பயம்!

கிருஷ்ணாவதாரமே 'வந்தாய் போல வாராதாய்; வாராதாய் போல் வருவானே' என்றபடிக்குத்தான் அமைந்தது. 'வரேன்' என்று சொல்லுவான்; ஆனால் வரமாட்டான். வரமாட்டேன் என்று சொல்லுவான்; ஆனால் வந்து நிற்பான்!

"ஹே மதுசூதனா!" என்று கிருஷ்ணனை அணுகிக் கேட்டான் துரியோதனன்: பீஷ்ம — துரோணாதி களெல்லாம் உம்மை வரவேற்க பூரண கும்பத்துடன் நின்றுகொண்டிருக்கிறார்கள். சக்கரவர்த்தி நான் அவர் களோடு நிற்கிறேன். எல்லாவற்றையும் தாண்டிக் கொண்டு உன் அல்ப புத்தியைக் காட்டி நீ விதுரர் கிருஹத்துக்குப் போனாயே!" என்றான்.

விதுரர், கிருஷ்ணன் வருவான் என்று எதிர் பார்க்கவேயில்லை. அங்கே போய் அவரைப் படாத பாடு படுத்திவிட்டான் கிருஷ்ணன். விதுரரோ கிருஷ்ணனுக்கு ஆசனத்தை எடுத்துப் போட்டுவிட்டு அதைத் தடவித் தடவிப் பார்க்கிறார். வாழைப்பழத்தை உரித்து, பழத்தைக் கீழே எறிந்துவிட்டு தோலை கிருஷ்ணனிடம் தருகிறார். தோலைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறான் பரமாத்மா!

அந்த மாதிரி அவர் பக்தியோடு கொடுத்ததைச் சாப்பிட்டான்! எதையும் எதிர்பார்த்து அவன் அவர் கிருஹத்துக்குப் போகவில்லை.

இப்படிப்பட்ட கிருஷ்ணனை,

"மாலாய்ப் பிறந்த நம்பியை
மாலே செய்யும் மணாளனை
ஏலாப் பொய்கள் உரைப்பானை
இங்கே போதக் கண்டீரே?''

என்று பாடினாள் ஆண்டாள். ஒரே பொய் இந்த கிருஷ்ணன்! அவதரித்த காலத்திலேயிருந்து பொய் தான்! ஒரு கிருஹத்திலே போய், பானையிலிருந்து வெண்ணெயை எடுக்கிறான். அங்கே கோபஸ்த்ரீ களெல்லாம் உட்கார்ந்திருக்கிறார்கள்.

குழந்தை அவர்களிடம் சொல்கிறது: "இது என் வீடு என்று நினைத்துக்கொண்டு வந்துவிட்டேன்."

"அப்படியானால் ஏன் அந்த பானைக்குள் கையை விட்டாய்?" என்றார்கள். அதற்கு அந்தக் குழந்தை நிர்ப்பயமாக ஒரு பொய்யைச் சொல்கிறது பாருங்கள்.

"பிருந்தாவனத்தில் நான் மாடுகளையெல்லாம் மேய்த்துக் கொண்டிருக்கிறேனல்லவா... ஐந்தாறு நாட்களாக ஒரு கன்றுக்குட்டியைக் காணவில்லை. அது இந்தப் பானைக்குள் இருக்கிறதா என்று தேடிக் கொண் டிருக்கிறேன்!"

இது பொய்! 'ஏலாப் பொய்கள் உரைப்பானை!'

இப்படிப்பட்ட பொய்யனைக் கூப்பிட்டால் வருவானா? ரொம்ப இக்கட்டில் இருக்கிறபோது 'கிருஷ்ணா' என்று கூப்பிட்டால், அவன் உடனே வந்து கையைப் பிடிக்கவேண்டும். யோசனை பண்ணி, நிதானமாகப் பொய் சொல்லிக் கொண்டிருந்தால் காரியம் நடக்காதே!

ஆகவேதான், உடனே உதவக்கூடிய பெருமாள் யார் என்று பார்த்து அவனை நோக்கி விஷயத்தைச் சொன்னாள் ருக்மிணி. அவள் சொன்ன அந்த ஏழு சுலோகங்களிலும் 'கிருஷ்ணா' என்று பகவானை அவள் கூப்பிடாமல் 'நரசிம்ஹா!' (நரலோக மனோ பிராமம்) என்கிறாள். "அழகான ரூபம் உடையவனே..." என்கிறாள். திவ்ய மங்கள ரூபம் அவனுடையது. அந்த நரசிம்ஹனைப் பார்க்கிறபோது எவ்வளவு சுந்தரமூர்த்தி யாகத் தெரிகிறான்! ருக்மிணியின் ஹ்ருதயத்தைக் கொள்ளை கொண்ட மூர்த்தி — மனோபிராமன். காலத்தே வந்து உதவக்கூடியவன். 'அடித்த கைபிடித்த பெருமாள்' என்று பெயர் அவனுக்கு — "இங்கேயா இருக்கான்?" என்று ஹிரண்யன் ஸ்தம்பத்தைத் தட்டிய வுடனேயே வந்து கையைப்பிடித்துக் கொண்டான். எந்த அவதாரத்தில் இந்த மாதிரி உண்டு? அவன் உடனே வந்து உபகாரம் பண்ணக்கூடிய அவதாரம் என்பதால் தான் ருக்மிணி பிராட்டி நரசிம்ஹன் என்று பேசினாள்.

ஆகவே, பாகவதத்தைப் பார்த்தோமானால், எங்கும் நரசிம்ஹ பிரபாவம்.

ராமாயணத்திலே பார்த்தோமானால், எங்கும் நரசிம்ஹ பிரபாவம். மாரீசன், ராவணனுக்கு உபதேசம் பண்ணுகிறான்:

"சீதையை அபகரிக்க வேண்டும் என்று சொல் கிறாயே, சீதை எங்கே இருக்கிறாள் தெரியுமா? அவள் கிட்டே நாம் நெருங்க முடியாது; தெரிந்துகொள்! ராமனிடம் போக முடியுமா? அவன் யார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? சீதை யார் மடியிலே

உட்கார்ந்திருக்கிறாள் தெரியுமா? நரசிம்ஹ அவதார மாகத் தோன்றினானே, அவன் மடியிலே உட்கார்ந்தி ருக்கிறாள்.”

“தஸ்யஸா நரஸிம்ஹஸ்ய
ஸிம்ஹோரஸ்கஸ்ய பாமிணி”

“எங்கும் ஒவ்வொரு இடத்திலும் அவனைப் பார்க்கிறேன்” என்று நரசிம்ஹனாகவே ஸ்ரீராமனைப் பார்த்தான் மாரீசன்.

அதே மாதிரி, சுக்ரீவன், ராமனைப் பார்க்கிற கட்டத்தில், பேசுகிறான். “வாலியைக் கொல்லும் சக்தி ராமனுக்கு இருக்கிறது என்பதைத் தெரிந்துகொண்ட வுடனேயே அவன் ஸப்தஸாரவிருக்ஷங்களை பேதித்து (எழு மரங்களைத் துளைத்து) துந்துபி என்கிற அசுர னுடைய எலும்புக்கூடை பாதத்தினால் தொட்டு அது தூரப்போய் விழுந்தபோது, அதைப் பார்த்துக் கொண்டிருந்த சுக்ரீவன் “ஹே ராமா! தாசரதே!” என்று கூப்பிடவில்லை.

கை குலுக்கி, பதம் பணிந்த பிறகு, “தவப்பிரஸாதாது ந்ருசிம்ஹ ராகவா” என்றான்! “நீ வெறும் ராகவன் இல்லை; ந்ருசிம்ஹ ராகவன்” என்கிறான்!



# 18

ராமாயணத்திலே வால்மீகி என்ன சொல்கிறார் பாருங்கள்:

பகவான் ஸ்ரீராமன் மால்யவான் என்ற பர்வத குகையிலேயிருந்து வெளியே வருகிறான். அப்படி குகைக்குள்ளேயிருந்து வரக்கூடிய ராமனைப் பார்த்து

ஸிம்ஹோகிரி குஹாஸய:

— "நரசிம்ஹன் வெளியே வருகிறான்" என்கிறார் வால்மீகி.

அதனால்தான் ஆண்டாள் பாடுகிறபோது 'அது மிருகமும் அல்ல; மனிதனும் அல்ல...' என்கிறாள். அது எங்கே வாஸம் பண்ணுகிறது என்றால், எப்போதும் குகைக்குள்ளே வாஸம் பண்ணுகிறது.

மட்டபள்ளி க்ஷேத்திரத்திலே போய்ப் பார்த்தால் யோகானந்த நரசிம்ஹன் அந்த ராஜ்யலக்ஷ்மி ஸமேத னாக சேர்ந்து உறைகிறான்.

அஹோபில க்ஷேத்திரத்தில் அழகாக உறைகிறான். 'அஹோ... பிலம்; அஹோ... பலம்' என்கிறபடிக்கு வசிக் கிறான். பிலம் என்றால் குகை ஆச்சரியமான குகை; அவன் ஆச்சரியமான பலம் பொருந்தியவன்.

அசுரனை—ஹிரண்ய கசிபுவை—அவன் கொன்ற போது, தேவர்களெல்லாம் "அஹோ பலம்!" என்று

ஆச்சர்யப்பட்டார்களாம். அந்த அஹோபில குகைக் குள்ளே அவன் வாஸம் பண்ணுகிறான். அப்படி வாஸம் பண்ணக்கூடியவன், வேதமாகிற பர்வதத்தில் உபநிஷதமாகிற குகைக்குள்ளே இருக்கக்கூடியவன் நரசிம்ஹன்.

இதைக் கொண்டுதான் ஆண்டாளும்

“மாரி மலை முழைஞ்சில் மன்னிக்கிடந்து உறங்கும்.
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே நீ பூவைப்பூவண்ணா! உன்
கோயில் நின்று இங்ஙனே போந்தருளி கோப்பு உடைய
சீறிய சிங்காசனத்து இருந்து யாம் வந்த
காரியம் ஆராய்ந்து அருள் – ஏலோர் எம்பாவாய்.’’

என்று இந்தப் பாசுரத்திலே, பர்வதகுகைக்குள்ளே யிருந்து எம்பெருமான் நரசிம்ஹன் வெளியே வர வேண்டும் என்கிறாள் திருப்பாவையிலே. ‘யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்’ என்று பிரார்த்திக்கிறாள். யாரிடத்திலே பிரார்த்திக்கிறாள்...? நரசிம்ஹனிடத்திலே தான் பிரார்த்திக்கிறாள் ஆண்டாள்.

**ரா**மாயணத்திலும் நாம் கவனித்துப் பார்த்தோ மானால், நரசிம்ஹன், சுக்ரீவனால் சொல்லப்பட்டான். அடுத்து வால்மீகியும் சொல்கிறார். அடுத்து பாருங்கள், விபீஷண சரணாகதி கட்டத்திலே, விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளக் கூடாது என்று எல்லோரும் சொல்கிறபோது, சுக்ரீவனைப் பார்த்து ஸ்ரீராமனே கேட்கிறான்; “நான் யார் தெரியுமா?”

‘தசரதனுடைய பிள்ளை’ என்றுதான் எல்லார் மனத்திலும் விடை தோன்றியிருக்கும்.

அதுதான் இல்லை. என்ன சொல்கிறான்—

“பிசாசாந், தானவாந், யக்ஷாந்
ப்ருதிவ்யாம்சைவ, ராக்ஷஸாந்
அங்குல்யக்ரேண தாம் ஹண்யாம்
இச்சன்ஸந் ஹரி கணேஷ்வர:

“நான் நினைத்தால் இப்போதே பிசாசுகளான ராக்ஷஸர்கள் யாராயிருந்தாலும் அவர்களை என் விரல் நுனியினாலேயே நசுக்கிவிடுவேன்” என்றான்.

ராமபிரான், தன் வில்லின் ஒரு பாணத்துக்கு யாரையும் இலக்காக்குவேன் என்றல்லவா பேசியிருக்க வேண்டும்! அதை விடுத்து, ‘விரல் நுனியினாலே அழிப்பேன்’ என்றான்.

“மஹாவிஷ்ணுவின் பஞ்சாயுதங்களே நகங்களாயின நரசிம்ஹ அவதாரத்தில்” என்கிறார் சுவாமி தேசிகன்.

தசாவதார ஸ்தோத்திரத்திலே நரசிம்ஹ அவதாரத்தைச் சொல்லுகிறபோது, ‘மற்ற அவதாரங்களில் இவன் ஆயுதங்களைக் கையில் பிடித்துக்கொள்ள வேண்டும். ஆனால், நரசிம்ஹ அவதாரத்தில் இவன் ஆயுதங்களை உதறினாலும் அவை கீழே விழாது’ என்று சொல்லியிருக்கிறது.

பகவானுக்கும் புதுமையிலே வியாமோகம்! எப்பப் பார்த்தாலும் சங்குசக்கர ஆயுதங்களை எடுத்துக் கொண்டு வந்தால் சங்கி — சக்ரி என்று அழைப்பார்

களல்லவா. அதனால் அதை மாற்றிவிட வேண்டும் என்று நகங்களாக மாற்றிக்கொண்டுவிட்டான்!

அந்த நகங்களும் ஸ்தோத்திரம் பண்ணப்படுகின்றன. நூதனனாக வந்த பரமாத்மா ராமாவதாரத்திலும் அதை மறக்காமல் சொல்கிறான். 'நகங்களாலேயே அழித்துவிடுவேன்' என்று ராமனே தன்னை நரசிம்ஹனாகப் பேசிக்கொண்டான்.

அந்த சீதையைப் பார்த்து ஆஞ்சநேயன், "அம்மா! எதற்காக இவ்வாறு கண்ணீர் விடுகிறீர்கள்? என் முதுகிலே ஏறி வரப்போகிறான் — நரசிம்ஹன் வரப் போகிறான். உங்கள் துயர் துடைக்க" என்கிறான்.

அதனால்தான் நரசிம்ஹன் இருக்கிற இடத்தில் எல்லாம் ஆஞ்சநேயனும் நின்றுகொண்டிருக்கிறான்.

சோளிங்கபுரம் போனால் பெரிய மலை — சின்ன மலை என்று இரண்டும் பார்க்கிறோம். பெரிய மலையிலே நரசிம்ஹன்; சின்ன மலையிலே ஆஞ்சநேயன்.

எங்கு பார்த்தாலும் அப்படித்தான். நாமக்கல் க்ஷேத்திரத்துக்குப் போனால் உள்ளே குகைக்குள்ளே நரசிம்ஹன் எழுந்தருளியிருக்கிறான். எதிரே ஆஞ்சநேயன் காட்சி அளிக்கிறான். அந்த ஆஞ்சநேயன் க்ஷேத்திரத்திலிருந்து நூல் இழுத்துக்கொண்டே போய் குகைக்குள்ளே போவோமானால், அது நேரே நரசிம்ஹனுடைய திருவடியிலே போய் நிற்கும். ஆஞ்சநேயன் அந்த திருவடியையே சேவித்துக் கொண்டிருக்கிறான்.

மட்டபள்ளி க்ஷேத்திரத்தில் நரசிம்ஹனின் எதிரே ஆஞ்சநேயன் நின்றுகொண்டிருக்கிறான். எங்கும்

ஆஞ்சநேயன் நரசிம்ஹனைக் கைகூப்பிய வண்ணம் சேவித்துக் கொண்டிருக்கிறானே!

ஏனென்றால், சீதா பிராட்டியினிடத்திலே, "என் முதுகிலே ஏறி நரசிம்ஹன் வரப்போகிறான்" என்று சொன்னான் அல்லவா... அதற்கு அடையாளமாக, ஆயத்தமாக நிற்கிறான் ஆஞ்சநேயன்.

பகவானே தன்னை ராமாயணத்திலே நரசிம்ஹன் என்று சொல்லிக்கொண்டதனாலே, ராமாயணத்தில் எங்கு தொட்டாலும் நரசிம்ஹ மயமாக இருப்பதனாலே ராமாயணமே நரசிம்ஹனைத்தான் கொண்டாடுகிறது.

**ம**ஹாபாரதமும் நரசிம்ஹனைத்தான் கொண்டாடுகிறது என்பதற்கு சஹஸ்ரநாமமே அத்தாட்சி. மஹாபாரதஸாரமான சஹஸ்ரநாமத்திலே, ஆரம்பத்திலே 'நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான்' என்றும், கடைசியிலே 'ஸர்வ பிரஹரணாயுத:' என்றும் வருகிறது. ஆதி—அந்தம் இரண்டுமே நரசிம்ஹனைப் பேசினதனாலே சஹஸ்ரநாமம் மொத்தமும் நரசிம்ஹனையே சொல்கிறது.

சஹஸ்ரநாமம் தன்னுள் மொத்த மஹாபாரதக் கதையையும் வைத்துக்கொண்டிருக்கிறது. சஹஸ்ரநாமத்தில் உள்ள ஒவ்வொரு நாமத்தையும் விளக்கிக் கொண்டே போனோமானால், மஹாபாரதம் பதினெட்டு பர்வாவில் சொல்லப்பட்ட கதை மொத்தமும் அதிலே வந்துவிடும்.

ஆகவே மஹாபாரதக் கதையையும் வைத்துக் கொண்டிருக்கிறது, உபநிஷத் அர்த்தத்தையும் வைத்துக் கொண்டிருக்கிறது. இதில் இல்லாதது வேறு எதிலும்

இல்லை என்கிற ரீதியில் பெருமையுடையதனாலே மஹாபாரதம் மொத்தமும் நரசிம்ஹ விஷயம்.

**ச**ங்கல்ப சூர்யோதயம் என்கிற காவியத்திலே சுவாமி தேசிகன், "யார் ஒருவர் அவதார ரகசியத்தை நன்கு உணர்கிறார்களோ அவர்கள் மறுபடியும் பூமியில் பிறப்பதில்லை; எம்பெருமானுடைய திருவடியை அடைந்து அந்த வானிலவரசிலே திருவடி கைங்கர்யம் —நித்ய கைங்கர்யம்—என்கிற உயர்ந்த புருஷார்த்தத்தைப் பெற்று பகவானை அனுபவிக்கக் கொடுத்து வைத்தவர்களாக ஆகிறார்கள்" என்கிறார்.

இந்த உலகத்திலே வாழும்போது பகவான் பல அவதாரங்கள் பண்ணியிருக்கிறான், பூர்வத்திலே (பழைய காலத்திலே). அந்த அவதாரங்களையெல்லாம் நாம் நன்கு சிந்தனை பண்ணவேண்டும். நன்கு உணர வேண்டும். அப்படி உணரக்கூடியவன் மேம்பட்டவன் என்கிறது வேதம்.

அந்த எம்பெருமானுடைய பிறப்பின் ரகசியத்தை புத்திமான்களுக்குள்ளே உயர்ந்தவர்களாக இருக்கக் கூடியவர்கள் நன்கு உணர்கிறார்கள். ஞானிகள், மஹான்கள் நன்கு உணர்கிறார்கள். எப்படி உணர்கிறார்கள் என்று கேட்டால், இவ்வண்ணம் உணர்கிறார்கள்.

அஜாயமான: — என்றும், பஹுதாவிஜாயதே என்றும் உணர்கிறார்கள்.

அஜாயமான: — என்றால், பிறப்பற்றவன் என்று அர்த்தம். பஹுதாவிஜாயதே என்றால் பலபடியாகப் பிறக்கிறான் என்று பொருள். இது முன்னுக்குப்பின் முரணாக இருக்கிறது பாருங்கள்.

'பிறப்பற்றவன்' என்று சொல்லவேண்டும். இல்லா விட்டால் 'பலபடியாகப் பிறக்கிறான்' என்று சொல்ல வேண்டும். இரண்டையும் சொன்னால் அது எப்படிப் பொருந்தும்? வேதம் அவ்வாறு சொல்லுமா? அதுவும் புருஷசூக்தத்திலே சொல்லப்பட்ட வார்த்தை அது!

பிறப்பற்றவன் என்றும், பலபடியாகப் பிறக்கிறவன் என்றும் ஞானிகள் உணர்கிறார்கள் என்றால் பிறப்பற்றவன் என்ற சொல்லுக்கு என்ன பொருள்? பலபடியாய்ப் பிறக்கிறான் என்பதற்கு என்ன பொருள்?

'பகவானுடைய அவதாரம் இருக்கிறதே, அது நம்மைப் போன்ற பிறப்பல்ல...' என்ற அந்த வாக்கியத்துக்குப் பொருள்:

பலபடியாகப் பிறக்கிறான் என்றால், நம்முடைய பிறப்புக்கு என்னவெல்லாம் காரணமுண்டோ அதெல்லாம் பகவானுக்குக் கிடையாது. அவன் சங்கல்ப மாத்திரத்தினாலே, எப்போதெல்லாம் பிறக்க வேண்டும் என்று நினைக்கிறானோ அப்போதெல்லாம் வந்து பிறக்கிறான்! 'நீ ஏன் பிறந்தாய்?' என்று அவனைக் கேட்க முடியாது! 'ஏன் பிறக்கவில்லை?' என்றும் கேட்க முடியாது.



## 19

**நா**ம் கர்மாதீனர்களாக, புண்ணிய பாபங்களுக்கு வசப்பட்டு, அவற்றால் பிறவி அடைகிறோம். பகவானுடைய பிறப்புக்கு புண்ணிய — பாபங்கள் காரணம் அல்ல. அவனுடைய இச்சைதான் காரணம். எப்போது பிறக்கணும்னு நினைக்கிறானோ, அப்போது வந்து பிறக்கிறான். இப்படியாக அவனே பலபடியாகப் அவதாரமானது சத்யம். அதைத்தான் இங்கே

யோகோ யோக விதாம் நேதா
பிரதான புருஷேஸ்வர:
நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான் கேசவ: புருஷோத்தம:

என்று சஹஸ்ரநாமம் அவதாரங்களைக் குறிப்பிட்டுச் சொல்கிறது.

முதலில் வைத்து எண்ணும்படியான சிறந்த அவதாரமாக, சஹஸ்ரநாமம் போற்றும்படியான ஏற்றமான அவதாரமாக நரசிம்ஹ அவதாரமானது பேசப் படுகிறது.

**ச**ஹஸ்ரநாமங்களுக்கும் பொருளாய் இருக்கக் கூடியவன் லக்ஷ்மிநரசிம்ஹன் என்பது ஸ்பஷ்டம். அப்படி எம்பெருமான் அவதரித்துத் தன் பெருமையைக் காட்டினான். ஆகையினாலே, அவனுடைய அவதாரமானது நம்முடைய பிறப்பைப் போன்றது அல்ல என்பதைத் தெளிவாய்க்

காட்டினான். வேதம் சொல்கிற இதே விஷயத்தைப் பரமாத்மாவும் சொல்லியிருக்கிறான்.

பரமாத்மா பகவத் கீதையிலே இதைத்தானே விளக்கிக் காட்டியிருக்கிறான்! அவனுடைய வாக்கைக் காட்டிலும் நமக்குப் பிரமாணம் என்ன இருக்கிறது? வேதம் சொல்லிற்று; வேதத்தை அடியொற்றி பகவானும் அதையே வலியுறுத்தி அழகாகப் பேசியிருக்கிறான்.

'இதை உணருங்கள் —உணர்ந்தவர்களுக்கு மறு படியும் பிறவி இல்லை' என்கிறான். பகவத் கீதையின் நான்காவது அத்தியாயத்தில் 'ஸ்ரீபகவானுவாச' என்று ஆரம்பித்துச் சொல்லப்படும் விஷயம் இது "ஹே அர்ஜுனா!" என்று அர்ஜுனனைப் பார்த்து பகவான் மூன்றாவது அத்தியாயத்தில் கர்மயோக பிரபாவத்தைப் பேசியிருக்கிறான். இடையிலே அர்ஜுனனை அழைத்து, "கர்மயோக பிரபாவத்தை இப்பொழுதுதான் நான் உனக்குச் சொன்னேன் என்று நினைக்காதே. இதை நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். யாருக்குச் சொல்லியிருக்கிறேன் என்றால் சூரியனுக்குச் சொல்லி யிருக்கிறேன். சூரியன் இதை மனுவுக்குச் சொன்னான். மனு இதை இஷ்வாகுவுக்குச் சொன்னான். பரம்பரையாக ஒருவர் பின் ஒருவரால் கேட்கப்பட்டு, தரிக்கப்பட்டு, அனுஷ்டிக்கப்பட்டும் வருகிறது இது. ஆனால், காலவெள்ளோட்டத்திலே, சொல்லக் கூடியவர்களுக்கு அதிக திறமையில்லாததால், உயர்ந்த விஷயங்களை மறைத்துவிட்டு, சாமான்ய விஷயங் களையே சொன்னதனாலேயும் கேட்கக்கூடியவர்கள் சாமான்ய விஷயங்களையே கேட்டு, உயர்ந்த விஷயங்

களிலே புத்தி செலுத்தாமல் விட்டுவிட்டதனாலேயும், என்னால் சொல்லப்பட்ட யோகமானது நஷ்டம் அடைந்துவிட்டது!” என்றான்.

இதிலிருந்து என்ன தெரிகிறது...? கால வெள்ளோட்டத்திலே உயர்ந்த விஷயங்களைக் கேட்பதும் அதை மறப்பதும் உலகத்திலே சகஜமாயிருக்கிறது என்பது தெரிகிறது!

“ஆகையினாலே, நல்ல விஷயங்களை எடுத்துச் சொல்ல அதிகாரிகள் குறைந்துவருகிறார்கள். நிறைய மனிதர்கள் இருக்கிறார்கள். ஆனால், ஹிதத்தைச் சொல்கிறவர்கள் எத்தனை பேர்?! ஹிதமான விஷயங்களை விட்டு விட்டு சாமானிய விஷயங்களையே சொல்பவர்கள் அதிகமானதனாலே, என்னால் சொல்லப்பட்டது நஷ்டமாகிவிட்டது'' என்றான் பகவான்.

“உயர்ந்த விஷயத்தைத் தன்னுடைய சிஷ்யனுக்கல்லாது, புத்திரனுக்கல்லாது வேறொருவருக்குச் சொல்லக் கூடாது என்று சாஸ்திரம் சொல்வதனாலேயும் 'என்னை சிஷ்யனாக ஏற்றுக்கொண்டு ஆக்ஞாபிக்க வேண்டும்' என்று நீ கேட்டுக் கொண்டதனாலேயும் உன்னை நான் சிஷ்யன் என்றும் தாஸபூதன் என்றும் எனக்கு சேஷபூதன் என்றும் ஏற்று, இந்த உயர்ந்த விஷயத்தை உனக்குச் சொன்னேனடா! அதையும் இப்போதுதான் சொன்னேன் என்று நினைக்காதே... ஏற்கெனவே இதை சூரியனுக்குச் சொல்லியிருக்கிறேன்” என்றான் பகவான்.

இதைக் கேட்டவுடனே அர்ஜுனன் சிரித்தான்! “எதற்குச் சிரிக்கிறாய்” என்று கேட்டான் பகவான்.

தெலுங்கிலே அழகானதொரு பாடல் வரும்:

‘தலையிலே மயில் பீலி அணிந்துகொண்டு, இவன் வெண்ணெயைத் தேடி கிருஹம்தோறும் அலைந்தவன். வெண்ணெயைத் திருடுகிறபோது ஏகப்பட்ட பொய் களைச் சொன்னவன். மத்தினால் மொத்துண்டவன்! ‘மத்தினால் மொத்துண்ட பிரான்’ என்றே பெயர் அவனுக்கு...’ என்று சொல்லும் பாடல்! அர்ஜுனனும் பரமாத்மாவைப் பார்த்து அதையே சொல்கிறான்:

“நீ புளுகிலே வல்லவன் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனால், அதை இப்போதுதான் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறேன். நீ எவ்வளவு பெரிய பொய்யன் என்பதைப் பார்க்கிறேன். இவ்வளவு பெரிய பொய்யை ரொம்ப தைரியமாகச் சொல்கிறாயே!” என்றான்.



உடனே பகவான், “நான் பொய் சொன்னேனா...? பொய்

எதுவுமே சொல்லவில்லையே!" என்றான். உடனே அர்ஜுனன் அவசரமாகத் தன்னைத் திருத்திக் கொண்டு, "கிருஷ்ணா! நீ சொன்னது எனக்குப் புரியவில்லை" என்றான். முதலில் 'பொய்' என்று சொன்னவன், இப்போது 'புரியவில்லை' என்கிறான்!

"என்ன புரியவில்லை?" — பகவான் கேட்டான்.

"நீயோ இப்போது என்னோடு பிறந்திருக்கிறாய்" என்று ஆரம்பித்தான் அர்ஜுனன்... "எனக்குச் சாரதியாக நீ வாழ்ந்து கொண்டிருக்கிறாய். நீயும் நானும் இந்த இருபத்தெட்டாவது துவாபர யுகத்திலே வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இருபத்தெட்டு சதுர் யுகங்களுக்கு முன்பு தோன்றிய அந்த சூரியனுக்கு நீ சொன்னேன் என்கிறாயே... எப்படி? எப்போதோ தோன்றிய சூரியனுக்கு, இப்போது உள்ள நீ 'சொன்னேன்' என்கிறாய், அது எவ்வாறு?"

இந்த மாதிரி அர்ஜுனன் கேட்டவுடனே பகவானுக்குச் சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுப் போய்விட்டது.

**ஆ**ளவந்தார் என்கிற ஆசார்யர் இதை அழகாக கீதாசார்யம் என்ற கிரந்தத்திலே எடுத்துக்காட்டுகிறார்: "தன்னுடைய சுவபாவத்தை பகவான் பேசினான். கர்ம யோகத்தின் இடையிலே நான் யார் என்று நமக்குத் தெரிவிக்கிறான். அதுதான் நமக்கு முக்கியம்" என்கிறார்.

இங்கே பகவான் ஐந்து சுலோகங்கள் பேசுகிறான். அதில் ஆறு விஷயங்களை நமக்குத் தெரிவிக்கிறான். இந்த ஆறு விஷயங்களுக்கும் அவதார ரஹஸ்யம் என்று பெயர். எத்தனை அவதாரங்கள் அவன் எடுத்தாலும் இந்த விஷயம் மனத்தில் கொள்ளவேண்டியது.

பகவான் எத்தனை அவதாரங்கள் எடுத்தாலும் இதற்குப் புறம்பாக நடந்துகொள்ள மாட்டான். இதற்கு உட்பட்டுத்தான் அவன் நடக்கிறான்.

இந்த ஐந்து சுலோகங்களிலே அவன் என்ன சொல்கிறான் பாருங்கள்:

"எனக்கு எத்தனையோ ஜன்மாக்கள் கடந்து விட்டன. நானும் எத்தனையோ பிறவி எடுத்திருக்கிறேன். உனக்கும் எத்தனையோ பிறவிகள் ஏற்பட்டிருக்கின்றன அர்ஜுனா. ஆனால், உன்னைக் கொண்டு என்னை எடை போடாதே. உன்னுடைய பூர்வ ஜன்மா என்னவாக இருந்தது என்று கேட்டால் உன்னால் சொல்ல முடியுமா? இதற்கு முன் என்னவாக இருந்தாய் என்பது தெரியுமா? இனிமேல் எப்படி இருப்பாய் என்று கேட்டால் சொல்ல முடியுமா?... என்னிடம் கேள், உன் ஜன்ம பரம்பரை அத்தனையையும் சொல்லுவேன். இனி எப்படி இருப்பாய் என்பதும் எனக்குத் தெரியும். சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லிற்றே, அந்த மாதிரி நான் சர்வக்ஞன்." — தன்னை சர்வக்ஞன் என்று பகவான் சொல்லிக் கொள்கிறான்.

"உன்னுடைய பிறவியிலே சங்கோஜ (வரையறைக்குட்பட்ட) ஞானமுடையவனாக நீ இருக்கிறாய். எனக்கு அவதார காலத்திலேயும் சங்கோஜ ஞானம் என்பது கிடையாது" என்றான்.

இதைத்தான் நம்மாழ்வார் திருவாய்மொழியிலே அழகாக எடுத்துக்காட்டுகிறார்: 'அவனுடைய ஞானம், அவனுடைய திருமேனி, இதற்கெல்லாம் பங்கமில்லாமல் அவன் அவதரிக்கிறான். அவதார காலத்திலேயும் அவன் திருமேனிக்கு வாட்டமில்லை. அப்ராகிருதமான

திவ்ய மங்கள விக்ரஹமாக அவதரிக்கிறான். அவனுடைய ஞானத்துக்குக் குறைவில்லை' என்கிறார்.

அதனால் தான் 'கௌசல்யா சுப்ரஜா ராம பூர்வா சந்த்யா பிரவர்த்ததே' என்று விச்வாமித்ர மஹரிஷி, ஸ்ரீராமனைத் துயில் எழுப்புகிறார்.

"கௌசல்யா சுப்ரஜா ராமா! தாசரதே ராமா – தசரதன் மகனே எழுந்திராய்" என்று எழுப்பக் கூடாதோ...? ஏன் அம்மாவைச் சொல்லி கௌசல்யை யின் சுபுத்திரன் என்று குறிப்பிடவேண்டும்? ஏனென்றால், அந்தக் குழந்தை ராமன் படுத்துக் கொண்டிருக்கிற அழகை நித்யம் பார்க்கக் கொடுத்து வைத்தவள் அவளல்லவா?

இந்த உலகில் சாமானிய மனிதக் குழந்தையைப் பார்த்து நாம் பூரித்துப்போகிறோம். எந்தவிதமான தோஷமுமில்லாமல் அவதார காலத்திலேயும் பரமாத்மா ஸர்வ கந்த ஸர்வ ரஸனாக உயர்ந்த ரீதியிலே அவதரிக்கிறான். அதைப் பார்த்து ஆச்சர்யப் படுகிறார் விச்வாமித்ரர். 'கௌசல்யா இதை நித்யம் ஸேவிக்கக் கொடுத்து வைத்தவள் அல்லவா? இன்று ஒரு நாள்தானே எனக்குக் கிடைத்தது' என்று விச்வாமித்ரர் சந்தோஷமும் ஏக்கமும் பட்டுக்கொண்டு பகவானை எழுப்புகிறார்.

பகவானின் அவதார கால ஞானமும் அப்படிப் பட்டது; அவன் திருமேனியும் அப்படிப்பட்டது.

அதனால் தான், "நீ உணர மாட்டாய் அர்ஜுனா! எல்லாவற்றையும் நான் உணர்வேன்'' என்று சர்வக்ஞத்வத்தைச் சொன்னான் பகவான்.

# 20

அர்ஜுனனிடம் சர்வக்ஞத்வத்தை எடுத்துச் சொன்ன பகவான் அதற்கும் மேல், தான் வந்து அவதரித்தது தனது சங்கல்பத்தினாலே என்று அழகாக எடுத்துக்காட்டுகிறான். பகவான் அர்ஜுனனிடம் மேலும் சொல்கிறான்:

"பிறப்பற்றவனாய் உன்னை இருக்கச் செய்ய நான் பல விதமாய் வந்து பிறக்கிறேன். அவ்வாறு நான் பிறப்பதற்குக் கர்மாக்கள் காரணம் அல்ல. தர்மமானது வாட்டமுறும் தருணத்தில், அதர்மம் தலைவிரித்தாடும் படியான தருணத்தில் நான் வந்து பிறக்கிறேன். என்னை நான் சிருஷ்டித்துக் கொள்கிறேன்: 'ஆத்மானாம் ச்ருஜாமி',

இரண்டு பொருள் சொல்லலாம் இதற்கு. பகவானும் வந்து பிறக்கிறான் 'ஆத்மானாம் ச்ருஜாமி' என்றால், பகவானுடைய ஆத்ம ஞானிகளையும் பிறப்பிக்கச் செய்கிறான் உலகத்திலே.

"ஆசார்ய புருஷர்களாக ஞானிகளைப் பிறக்கச் செய்து, அவர்கள் மூலமாகவும் உலகத்தைத் திருத்திப் பணிகொள்கிறேன். நானும் வந்து பிறந்தேன். உயர்ந்த மஹான்களையும் உலகிலே பிறப்பிக்கச் செய்வேன்" என்றான் பரமாத்மா.

"என்னுடைய அவதார பிரயோஜனம் என்ன என்று கேட்கிறாயா...?

> பரித்ராணாய ஸாதூனாம்
> வினாசாய ச துஷ்கிருதாம்
> தர்ம ஸம்ஸ்தாப நார்த்தாய
> ஸம்பவாமி யுகே யுகே''

ரொம்ப அழகாகச் சொல்கிறான் பகவான். "அவதார பிரயோஜனம் என்ன என்றால், சாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும், துஷ்டர்களை சிக்ஷிப்பதற்காகவும் யுகந்தோறும் நான் வந்து பிறக்கிறேன்" என்கிறான்.

நாம் கதை கேட்கிறோம். 'திரேதா யுகத்திலே நடந்தது; துவாபர யுகத்திலே நடந்தது; கிருத யுகத்திலே நடந்தது. பகவான் அப்போ அவதாரம் பண்ணினான். இப்போ அவதாரம் பண்ணினான்' என்றெல்லாம் புராணங்களிலே சொல்லிக் கேட்கிறோம்.

ஆனால், 'கலியுகம் பிறந்து ஐயாயிரம் வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டதே... இப்போது ஓர் அவதாரம் பண்ணக்கூடாதா! பரமாத்மா?' என்று ஒரு சந்தேகம் நமக்கு எழுகிறது. அது மாத்திரமில்லை... இன்னொரு சந்தேகமும் வருகிறது.

'ஒரு ஹிரண்ய கசிபு இருக்கிறபோது பரமாத்மா அவதாரம் பண்ணினானே; ஒரு ராவணன் இருக்கிற போது பகவான் அவதாரம் பண்ணினானே. ஒரு சிசுபாலனை வதம் பண்ண பகவான் அவதாரம் பண்ணினானே... தத்துல்யமாய் (கண்ணுக்கு நேராய்) இப்போது நிறைய பேர் அசுரர்களாக இருக்கிறார்களே இந்த உலகத்திலே! ஒருத்தருக்காக அவதாரம்

பண்ணியவன், இப்போது பல பேர் இருக்கிற போது ஏன் வந்து அவதரிக்கக் கூடாது?' என்று சந்தேகம் வரும். அதனால் தான் கீதையிலே அந்தச் சந்தேகத்தைப் போக்குகிறான் பகவான்.

இதற்காகத் தான் 'வினாசாய ச துஷ்கிருதாம்' என்று அழகாக ஒரு 'ச' போட்டிருக்கிறான் பகவான் இந்த சுலோகத்திலே.

இந்த 'ச' படுத்துகிறபாடு இருக்கிறது பாருங்கள்...!

இப்படி கவிதையிலே 'ச' சப்தம் வருவதற்கு அவ்யயம்



என்று பெயர். 'ச', 'து', 'அபி' போன்ற சப்தங்கள் இவ்வாறு அவ்யயமாக சம்ஸ்கிருதத்திலே அமையும். சில சுலோகங்களிலே சந்தஸ்ஸை (பந்தம்) நிரப்புவதற்காக இவை வந்து சேரும். எங்கேயாவது ஓர் அக்ஷரம் குறைகிறது என்றால் அதற்கு ஒரு 'ச' வைப் போட்டால் அந்த அக்ஷரம் பூர்த்தி ஆகிவிடும்.

அனுஷ்டுப் சந்தஸ்ஸில் சுலோகம் என்றால் 32 அக்ஷரத்திலே எழுதவேண்டும் 31 அக்ஷரம் வந்து விட்டது; ஒன்று வரவில்லை என்றால், ஒரு 'ச' வைப் போட்டுவிட்டால் சந்தஸ் பூர்த்தியாகிவிடும்.

இப்படி ஒலியை இட்டு நிரப்புவதற்கும் வரும்; விசேஷ அர்த்தத்தைக் காட்டியும் அது நிற்கும்.

ஒரு காட்டிலே வியாஸருடைய மிகப் பெரிய விக்ரஹம் இருந்தது. அதற்குப் பெரிய தொப்பை! தொப்பையின் நடுவிலே தொப்புள்!

கவி காளிதாஸன் அந்தப் பக்கம் போனான். போகிற போக்கில் வியாஸரையே அவன் கேலி பண்ணுகிறான்! 'இவரென்ன 'ச' காரப்ரியர் அல்லவா! பெரிய கவியென்று இவரைப் போய்க் கொண்டாடுவ தாவது' என்று அந்த விக்ரஹத்தினுடைய தொப் புளுக்குள் ஆள்காட்டி விரலை நுழைத்துக் கேலியாய்க் கேட்கிறான்: "இவர் தானே 'ச' காரப்ரியர்?" என்று! "ஒரு சுலோகத்திலே எத்தனை 'ச'காரம் போடுகிறார் இவர். 'ச'காரம் இல்லாமல் இவரால் கவிதையே இயற்ற முடியாது" என்று பரிகாசத்துடன் தொப்புளுக்குள் விரலை நுழைத்தவனுக்கு, அப்புறம் அதை எடுக்கவே முடியவில்லை! விரல் அகப்பட்டுக்கொண்டது. தொப்புளுக்குள்ளேயே நின்றுபோய்விட்டது!

“என்னைப் பார்த்துக் கேலி பண்ணுகிறாயா நீ? ‘ச’ இல்லாமல் நீ சுலோகம் சொல்லிவிடுவாயோ?” என்று காளிதாஸனைப் பார்த்துக் கேட்கிறார் வியாஸர்!

“ஆஹா, சொல்லுவேனே...’’ என்கிறான் காளிதாஸன்.

“ஏதோ மனத்திலே தயாராய் வைத்திருக்கிறாய் போலும்... அந்த சுலோகம் வேண்டாம். நான் ஒரு விஷயம் சொல்லுவேன், அதைப் பற்றிய சுலோகம் பாட வேண்டும்” என்றார் வியாஸர். சிலைக்குள்ளே இருந்தபடி பேசுகிறார்.

“அப்படியே சுவாமி!’’ என்று காளிதாஸன் சொல்ல, அப்போது வியாஸர் அவனைப் பார்த்து ஒன்று கேட்கிறார்: “திரௌபதிக்கு பஞ்சபாண்டவர்கள் எவ்வெப்போது என்னென்ன ஆகவேண்டும்?”

காளிதாஸனின் விரல் அப்படியே இருந்த இடத்திலேயே இருக்கிறது. அவன் கொஞ்சம் கூட யோசனையே பண்ணவில்லை. ‘ச’ வே இல்லாமல் ஒரு சுலோகம் சொல்லிவிட்டார். அதிலே ‘ச’ காரம் இல்லையே தவிர, நிறைய சமத்காரம் (சாமர்த்தியம்) இருந்தது!

உடனே, அப்படியே பிரத்யக்ஷமாகிவிட்டார் வியாஸர்! “நானும்தான் மகாபாரதம் ஒரு லட்சம் சுலோகம் சொன்னேன். எதிரே கணபதி உட்கார்ந்து எழுதினான். ஆனால், மஹாபாரதத்திலே இந்த மாதிரி ஒரு சுலோகம் கூட வரவில்லையே! எவ்வளவு அழகாக இருக்கிறது இந்த சுலோகம்!” என்று கொண்டாடினார் வியாஸர்.

ஆனால் பகவானுடைய வாக்கிலே — கீதையிலே வந்த 'ச'காரம் சந்தஸ்ஸை நிரப்ப மட்டும் வந்ததல்ல. அதன் நோக்கம் உயர்ந்தது. அது எதைக் காட்டுகிறது என்றால், பகவானுடைய அவதாரத்துக்கு முக்கியமான பிரயோஜனம் என்ன என்பதைக் காட்டுகிறது.

துஷ்கிருத் (துஷ்டர்கள்) வினாசனம் (அழிப்பது) என்பது அந்த அவதாரத்தில் முக்கியமல்ல...

அவனுடைய அவதாரத்தின் முக்கிய நோக்கம் சாது சம்ரக்ஷணம் (உயர்ந்தவர்களைக் காப்பாற்றுதல்) துஷ்கிருத் வினாசனம் என்பது அதன் ஊடே நடக்கக் கூடியதுதான். —இதைத்தான் அந்த 'ச'காரமானது காட்டுகிறது.

இப்போது பகவான் அவதாரம் பண்ணினானே யானால், அவன் கைக்கு நிறைய ஹிரண்ய கசிபுகள் கிடைக்கலாம். அவன் கைக்கு நிறைய ராவணர்கள் கிடைக்கலாம். ஆனால், ஒரு பிரஹ்லாதன் கிடைப்பானா இப்போது? அதற்காகத்தான் பகவான் காத்துக்கொண்டிருக்கிறான்.

பிரஹ்லாதன் போன்ற ஒரு நிஜபக்தனுக்குக் கெடுதல் ஏற்பட்டால், பகவான் அவதாரம் இப்போதும் சித்தம். இந்த க்ஷணமே அவதாரம் பண்ணிவிடுவான் பகவான்.

ஆகவே பிரஹ்லாதனைப் போல் நிஜபக்தி நமக்கு வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது. அப்படிப் பட்ட நிஜ பக்தி உடையவன் ஒருவன் மட்டுமே இருந்து விட்டாலும் போதும்... பகவான் அரை குலைய, தலை குலைய ஓடி வருவான் — சாதுக்களைக் காப்பாற்றுவது தான் முக்கியம் என்பதை இந்த 'பரித்ராணாய சாதூனாம்' சுலோகம் காட்டுகிறது.

“ஜன்ம கர்ம சமே திவ்யம்” என்றும் கூறுகிறான் பகவான் கீதையிலே.

‘மே கர்மா திவ்யம்; மே ஜன்மா திவ்யம்’ — என் கர்மாவும் ஜன்மாவும் திவ்யமானவை என்று பொருள்.

பகவானுடைய கர்மா என்றால் புண்ய பாபம் என்று பொருள் அல்ல...! இங்கே கர்ம சப்தத்துக்கு ‘லீலா’ என்று அர்த்தம். பகவானுடைய அவதார காலத்தில் அவன் பண்ணிய லீலைகளும் திவ்யம்.

“இதை உள்ளபடி உணர்கிறவன் ஒருவன் இருந்தால், (அப்படியும் ஒருவன் இருக்கிறானா?) அவன் மறுபடியும் பிறவியை அடையமாட்டான். என்னையே அடைந்து, உயர்ந்த நிலையிலே விளங்குவான்'' என்கிறான் பகவான்.

ஆகவே, பகவானுடைய அவதாரமானது இந்திர ஜாலம் போன்று பொய் அல்ல; உண்மையாக அவன் வந்து பிறக்கிறான். அவனுடைய அவதார காலத்திலே அவனுடைய ஞானத்துக்கு வரையறை இல்லை, சர்வக்ஞனாகவே வந்து அவதரிக்கிறான். அவன் திருமேனிக்கு வாட்டமில்லை. தர்மம் வாட்டமுறும் போதும் அவன் வந்து அவதரிக்கிறான்—அதர்மம் தலையெடுத்தாடுகிறபோதும் வந்து அவதரிக்கிறான். சாது பரிபாலனம் துஷ்கிருத் வினாசனம் என்பதை அவதார காலத்திலே அவன் பண்ணுகிறான். “இந்த ஆறு விஷயங்களை யார் உள்ளபடி உணர்கிறார்களோ, அவர்கள் மறுபடியும் வந்து பிறக்கமாட்டார்கள்” என்று பகவானே கீதையிலே சொல்லியிருப்பதனாலே, பகவானுடைய அவதாரம் நம்முடைய பிறப்பை அறுப்பதற்காகத்தான்!

## 21

**பொ**ய்ந் நின்றஞானமும், பொல்லா ஒழுக்கும், அழுக்கு உடம்பும்,
இந் நின்ற நீர்மை இனி யாம் உறாமை உயிர் அளிப்பான்
எந் நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்; இமையோர் தலைவா
மெய்ந் நின்று கேட்டருளாய், அடியேன் செய்யும் விண்ணப்பமே.

என்கிறார் நம்மாழ்வார்.

முன்னுரைத்த திருவிருத்தம் நூறு பாட்டும்
முறையில் வரும் ஆசிரியம் ஏழு பாட்டும்
மன்னிய நற்பொருள் பெரிய திருவந்தாதி
மறவாதபடி எண்பத்தேழு பாட்டும்
பின்னுரைத்ததோர் திருவாய்மொழி எப்போதும்
பிழையற ஆயிரத்தொரு நூற்றிரண்டு பாட்டும்
இந்நிலத்தில் வைகாசி விசாகம் தன்னில்
எழில் குருகை வருமாறா, இரங்கு நீயே

என்று வைகாசி விசாக நக்ஷத்திரத்திலே ஆவிர் பவித்தவர் நம்மாழ்வார். அப்படிப்பட்ட நம்மாழ்வார் குறித்து போற்றி!. நான்கு திவ்ய பிரபந்தங்களை அருளி யுள்ளார் அவர். அவை நான்கும் நான்கு வேதங்கள். திருவிருத்தம் என்கிற நூறு பாசுரங்கள் இருக் கின்றனவே, அவை மொத்தம் ரிக் வேதத்தைத் தன்னுள்ளே கொண்டவை.

**அ**டுத்தது திருவாசிரியம் என்ற ஏழு பாசுரம்- யஜுர் வேதத்தின் ஏழு காண்டங்களையும் அதில் அப்படியே காட்டினார்.

பெரிய திருவந்தாதி என்கிற 87 பாசுரத்திலே அதர்வண வேதத்தின் பொருளை அப்படியே காட்டினார்.

1001 சாகைகள் கொண்ட ஸாம வேதத்தை, 1102 பாசுரங்களிலே — தமது திருவாய்மொழி என்கிற பிரபந்தத்திலே காட்டினார்.

வேதங்களைத் தமிழ் மறையாக்கி, எல்லோருக்கும் சுலபமாய்ப் புரிய வேண்டும் என்பதற்காகக் காட்டிக் கொடுத்தார். அதில் திருவிருத்தம் என்ற ரிக் வேத ஸாரத்தில் வருகிற முதல் பாசுரத்திலேயே நுட்பமான ஞானத்துடன் கூறியிருக்கிறார்:

"பொல்லா ஒழுக்கு, துர்கந்த சரீரம், அழுக்கு உடம்பு, இதையெல்லாம் நாம் அடையாமல் இருப்பதற்காக, பகவான் 'என்னின்ற யோனியுமாய்'. வந்து பிறக்கிறான். பூலோகத்தில் பலபடியாய் வந்து அவதரிக்கிறான்" என்கிறார்.

"ஹே, இமையோர் தலைவா! தேவா! தேவாதி ராஜனே! பிறவியே அற்றவனான நீ, வந்து பிறக்கிறாயே! எதற்காகப் பிறக்கிறாய்?..." என்று கேட்கிறார்.

நம் பிறப்பை அறுப்பதற்காகவே பகவான் வந்து பிறக்கிறான் என்கிற அவனுடைய அவதார ரகசியம் நன்கு உணரப்பட வேண்டும்.

'இந்த அவதார ரகசிய ஞானமே நமக்கு மோக்ஷத்தை வாங்கிக்கொடுத்துவிடுமா...? அவதார ரகசிய ஞானம் மோக்ஷத்துக்கு ஓர் உபாயமா?' என்ற கேள்வி வரும். அதை ஆசார்யர்கள் நன்கு விளக்குகிறார்கள்.



அவதார ரகசிய ஞானம் ஏற்பட்டால், பகவத் சரணாரவிந்தத்திலே திருடமான பக்தி ஏற்படும். அந்த பக்தி ஏற்பட்டால் அவன் திருவடியிலே ஆத்ம சமர்ப் பணம் பண்ணும்படியான எண்ணம் வருகிறது. 'இந்த ஆத்மா அவனுடையது' என்று அவனுடைய திருவடி யிலேயே சரணாகதி பண்ணுகிறோம். ஆகையினாலே, அவதார ரகசிய ஞானம் ஏற்பட்டால் மோக்ஷம் நமக்குச் சித்தம்.

கிரமம் கிரமமாக பகவானிடத்திலே நம்மைச் சேர்த்து வைக்கிறது அவதார ரகசிய ஞானம். ஆகையினாலே, நித்யமே அந்த எம்பெருமானுடைய அவதார ரகசியத்தை ஒரு தடவை மனத்திலே நினைத்துப் பார்க்கவேண்டும்.

அப்படிப்பட்ட அவதாரங்கள் எண்ணற்றவை. எத்தனையோ இருந்தாலும், நரசிம்ஹாவதாரத்துக்கு ஈடு, இணையே கிடையாது. இந்த அவதாரம் பரம தயை நிரம்பிய அவதாரம். மற்ற அவதாரங்களை இது ஒரு படி விஞ்சி நிற்கிறது.

ராமாவதாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள்... முப்பத்து முக்கோடி தேவர்கள் சென்று பிரார்த்தித்தார்கள் பகவானை. அவனும் நான்காகத் தன்னைப் பிரித்துக்கொண்டு ராம—லக்ஷ்மண பரத—சத்ருக்னர்களாக வந்து பிறந்தான். கிருஷ்ணாவதாரத்திலோ, எல்லா தேவர்களும் பிரார்த்திக்க, பூமாதா பிரார்த்திக்க, பலராம கிருஷ்ணர்களாக இரண்டு ரூபத்திலே வந்தான்.

நரசிம்ஹ அவதாரத்தில், ஒரு அசுரக் குழந்தை பிரார்த்திக்க, பல ரூபத்தில்—பல வடிவத்தில்—எல்லா இடத்திலேயும் பகவான் நிறைந்து காணப்பட்டான்.

பிறஅவதாரங்களில் நான்கு, இரண்டு என்று எண்ணிக்கை வரையறைக்குட்பட்டுத் தோன்றினான். ஆனால், நரசிம்ஹாவதாரத்தில் அவன் எங்கும் நிறைந்தான்!

'வரதராஜ பஞ்சாசத்' என்கிற சுலோகத்திலே, சுவாமி தேசிகன் அந்த காஞ்சிபுரம் தேவாதி ராஜனைப்

பார்த்து, “ஹே கரீசா! வரதராஜா! நீ பண்ணிய ஒரு அவதாரம் இருக்கே... அது எவ்வளவு உயர்ந்த அவதாரம் என்பது தெரிகிறது. ஏனென்றால், ‘பகவான் எங்கும் நிறைந்திருக்கிறான் என்கிறாயே... அவன் இந்தத் தூணில் இருப்பானா?’ என்று ஹிரண்ய கசிபு கோபப் பட்டபோது அந்தத் தூணிலிருந்தே வெளிப் பட்டாயே!” என்று கேட்கிறான்.

அப்படி வெளிப்படுவதற்காக அன்று எங்கும் நிறைந்த எம்பெருமான், இன்றளவும் அப்படியே இருந்து கொண்டிருக்கிறான்!

அவன் வந்தது ஒரு தூணிலிருந்துதான். மீதி சராசரங்கள் அத்தனையும் இன்னும் பிரசவிக்கவே யில்லை. கர்ப்பமாகவே இருக்கின்றன. நரசிம்ஹனை தன்னுள்ளே கொண்டு இருக்கின்றன.

எங்கு தொட்டாலும் நரசிம்ஹமயம்தான். அவன் இல்லாத இடம் என்பது இல்லை. இப்போதுகூட திரைலோக்யமும் நரசிம்ஹனைத் தன்னுள்ளே கொண்டு விளங்குகிறது. நரசிம்ஹன் இல்லாத இடம் என்பது ஒன்று உண்டோ...? ஸர்வ வியாபியாக அவன் இருக்கிறான் என்பது இதன் மூலம் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

அந்தச் சின்னக் குழந்தை எந்த இடத்தைக் காட்டுமோ என்ற சந்தேகத்தில் பரமாத்மா எங்கும் நிறைந்தானே.... அந்த தயைக்கு ஈடு—இணை உண்டா..? விசேஷ தயை உடையவன் அவன் என்பதை அவதார காலத்திலே காட்டினான்.

ஹிரண்ய கசிபுவை சம்ஹாரம் பண்ணுகிறபோது கூட எவ்வளவு தயை பாருங்கள்:

'உளந்தொட்டு இரணியன் ஒண்மார்பகலம்
பிளந்திட்ட கைகளால்'

என்பதற்கேற்ப அந்த ஹிரண்ய கசிபுவை மடியிலே இருத்திக்கொண்டு, உடனே அவன் மார்பைப் பிளக்க வேண்டியதுதானே...? அவ்வளவு உக்ர ரூபியாக அவதரித்த எம்பெருமான், மஹா கோபத்தோடு இருக்கிறவன், பரீக்ஷை பண்ணுகிறான்! ஹிரண்ய கசிபுவினுடைய ஹ்ருதயத்தை அப்படித் தொட்டுப் பிடித்துப் பார்த்தானாம்! 'அவன் இத்தனை நாள் நம்மை வைத்து, ஏசினது, தூற்றினது எல்லாம் வாயள விலா? ஹ்ருதயத்தளவிலா? என்று தொட்டுப் பார்த்தானாம்! 'வாயளவில்' என்றால் விட்டுவிடுவோம் இவனை. ஹ்ருதயத்தளவில் என்றால் பிளப்போம்!' என்று பரீக்ஷை பண்ணுகிறான்.

ஹ்ருதயத்தளவும் அவனுக்கு துவேஷம் இருந்த தனால்தான் அவனை முடித்தான் பகவான். இல்லை யானால் அவனை விட்டு விட்டிருப்பான் பரமாத்மா!

நிக்ரஹம் பண்ணவேண்டும் என்கிறபோது ஹ்ருதயத்தையும் தொட்டுப் பார்க்கிறவன், அனுக்ரஹம் பண்ண வேண்டுமென்றால் 'வாயளவே' போதும் என்கிறான். 'என் பெயரைச் சொன்னாய், என் ஊரைச் சொன்னாய்' என்று அதற்காகவே பக்தர்களை ஏற்று அனுக்ரஹம் பண்ணுகிறான். தேடித் தேடிக் காரணங்கள் கண்டுபிடித்து ரக்ஷிக்கிறான்.

ஒருவர் கோயிலுக்கே போய் அறியாதவர். அவர் வீட்டிலே இருக்கிற கன்றுக்குட்டி, தும்பை அறுத்துக் கொண்டு கோயிலுக்குள்ளே போய்விட்டது. அதைப்

பிடித்துக் கொண்டுவர இவர் கோயிலுக்குப் போனார். பின்பக்கமாகக் கோயிலுக்குள் நுழைந்த கன்றுக்குட்டி, அங்கேயிருந்து முன் பக்கம் துவஜஸ்தம்பத்திடம் வந்தது. மறுபடியும் பின்னால் போயிற்று. கன்றுக் குட்டியைப் பிடிக்க கூடவே ஓடியவர், நான்கு சுற்று சுற்றிவிட்டார் கோயிலை! கன்றுக்குட்டியைப் பிடித்துக் கொண்டு போய்க் கொட்டகையில் கட்டிவிட்டு மறுபடியும் வாசல் திண்ணையிலே போய் உட்கார்ந்து கொண்டார்!

இவருக்குக் கன்றுக்குட்டி கிடைத்ததே என்ற ஒரு எண்ணம்தானே தவிர 'கோயிலுக்குள் போனோம், பிராகாரத்தைச் சுற்றினோம்' என்ற கவனமெல்லாம் இல்லவே இல்லை. ஆனால், பகவான் இவற்றையெல் லாம் கவனித்து வைத்திருக்கிறான். அவன் பண்ணிய நான்கு பிரதக்ஷணங்களைக் கணக்கில் வைத்துக் கொள்கிறான், அனுக்கிரஹத்தை வாரித்தருவதற்காக!



## 22

பக்தபரா: என்று பக்தர்களைச் சொல்வதுண்டு. இந்தச் சொல்லுக்கு இரண்டு அர்த்தம். பகவானிடத்திலே பக்தி உடையவர் என்று ஓர் அர்த்தம்; பிரசாத பக்தர் என்று இன்னொரு அர்த்தம்! பிரசாதத்துக்காக நித்யம் கோயிலுக்குப் போகிறவர்.

நல்ல இனிப்பான சர்க்கரைப் பொங்கல் பிரசாதம் தருகிறார்கள் கோயிலில். அதை வாங்கிக் கொண்டவர், உருட்டி உருட்டி வாயிலே போட்டுக் கொண்டார். கையைச் சுற்றி மொய்த்த ஈக்களை விரட்ட கையைத் தட்டினார். அப்போதுதான் உள்ளே தாயார் சந்நிதியிலே கற்பூர ஹாரத்தி நடக்கிறது.

தாயார் பார்த்தாள். 'ஒரு நாளும் இவன் நம்மைப் பார்த்துக் கை கூப்பியதில்லையே... இன்றைக்குக் கூப்பி விட்டானே' என்று. 'இவனுக்கு ஐச்வர்யம், ஆயுள், சத்கதி, எதைக் கொடுக்கலாம் என்று யோசிக்கிறாளாம் மஹாலக்ஷ்மி.

ஈயை ஓட்டக் கையைச் சேர்த்தால் அதை அஞ்சலியாக—அஞ்சலி ஹஸ்தமாக எடுத்துக்கொண்டு அந்த ஆதி தம்பதி அனுக்கிரஹம் பண்ணுகிறார்கள்.

ஒருவர் இந்தப் பக்கமாக சைக்கிளில் போகிறார். அவருக்கு இங்கே உள்ளே வந்து பகவத் விஷயத்தை அனுபவிக்க அவகாசம் இல்லை. உள்ளுக்குள்ளே

இத்தனை பாகவதோத்தமர்கள் உட்கார்ந்திருக்கிறார் களே, விசேஷமாக பகவத் சரித்திரம் நடக்கிறதே என்று ஒரு கணம் சைக்கிள் ஹேண்டில் பாரை விட்டுவிட்டு கையை எடுத்துக் கும்பிடுகிறார் அவர். அவருக்குப் பலன் உண்டா என்றால், கட்டாயம் உண்டு. திக்கை நோக்கி அவர் கை கூப்பினாரல்லவா?... அதற்கு நிச்சயமாய்ப் பலன் உண்டு.

ஆளவந்தார் ஸ்தோத்திரத்திலே சொல்லுகிறார்: "உன்னுடைய திருவடியை உத்தேசித்து எவனோ ஒருவன், எப்படியோ அப்படி, எப்போதோ அப்போது..." என்கிறார். எதையும் நிர்ணயமாகச் சொல்லவில்லை, இங்கே... ஆகையினால், யாராய் இருந்தாலும் எப்போது அஞ்சலி பண்ணினாலும் அதற்கும் பலன் ஏற்பட்டுவிடுகிறது.

பகவான் இப்படியெல்லாம் நமக்குப் புண்ணி யத்தைச் சேர்த்தால்தான் உண்டு! எப்படியெல்லாம் முடிகிறதோ அப்படியெல்லாம் அவனே முன்வந்து நமக்கு அனுக்கிரஹம் பண்ணுகிறான்.

வேறு காரணத்துக்காக வெறுமே கைகூப்பினாலே அனுக்கிரஹம் பண்ணுகிறான் என்றால், உண்மையான முறையிலே அவன் திருவடியிலே ஆச்ரயிக்கக்கூடியவர் களுக்குக் கட்டாயம் பலன் உண்டு — இதிலே என்ன சந்தேகம் இருக்க முடியும்?

அனுக்கிரஹம் பண்ணுகிறபோது பரமாத்மா 'வாயளவும்' போதும் என்கிறான். நிக்ரஹம் பண்ணுகிற போதுதான் ஹ்ருதயத்தையும் தொட்டுப் பார்க்கிறான். பகவானுடைய நிலை அப்படி. மஹாலக்ஷ்மியும் அப்படித்தான்.

ராவணனைப் பார்த்து. "அந்த ராமனிடத்திலிருந்து ஆக்ஞை இல்லை. அப்படி இருந்ததானால், இங்கேயே இப்போதே, இந்த இடத்திலேயே உன்னை பஸ்பமாக்க முடியும் என்னால்" என்றாள் சீதா பிராட்டி.

அடிக்க வேண்டும் (நிக்ரஹம்) என்கிறபோது ராமனுடைய ஆக்ஞையை எதிர்பார்க்கிறாள். ஆனால், ஒருத்தருக்கு அனுக்கிரஹம் பண்ணவேண்டுமென்றால், அவன் ஆக்ஞையை அவள் எதிர்பார்ப்பதில்லை. நிக்ரஹத்துக்கு மட்டும்தான்! ஆகையினாலேதான் மஹாலக்ஷ்மிக்கு எல்லாம் தெரியும்; நிக்ரஹம் மாத்திரம் தெரியாது என்றார்.

அதே மாதிரி பகவானும், இவ்வளவு கோபமாக, உக்கிர கேஸரியாக அவதரித்தாலும் அந்த ஹிரண்ய கசிபுவின் ஹ்ருதயம் தொட்டுப் பார்க்கிறான்.

இந்த அவதாரத்துக்குத்தான் எவ்வளவு தயை! ஆகையினாலே, நரசிம்ஹ அவதாரம் மிகுந்த தயையுடைய அவதாரம் என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

**பி**ருஹ்லாதனுடைய வார்த்தையைக் காப்பதற்காக பகவான் நரசிம்ஹனாக அவதரித்தான்.

சாமான்யமாக உலகத்திலே 'நரசிம்ஹ அவதாரம் எதற்கு?' என்று கேள்வி கேட்டால், பிரஹ்லாதனை ரக்ஷிப்பதற்காக என்று பதில் கிடைக்கும். ஆனால், அதுவல்ல அதற்குரிய பதில்.

பகவான் பிரஹ்லாதனை ரக்ஷித்தவண்ணம் தானே இருந்தான். ஹிரண்யன் ஸர்ப்பத்தைவிட்டு பிரஹ்லாதனைக் கடிக்கச் சொன்னபோது, பகவான் அவனை ரக்ஷிக்கவில்லையா? பர்வதத்திலேயிருந்து அவனை உருட்டிவிட்டபோது பகவான் அவனை ரக்ஷிக்க

வில்லையா? மலை மேலேயிருந்து உருட்டி விட்ட போது, அந்த தைத்ய புத்ரனை, 'நாராயணா' என்று சொன்னதற்காகவே பகவான் வந்து ரக்ஷித்தானே!

சமுத்திரத்திலே தூக்கிப்போட்டபோது அவனை ரக்ஷிக்கவில்லையா? உஷ்ணமான வாயுவை பிரஹ்லாதன் மீது பிரயோகம் பண்ணியபோது ரக்ஷிக்க வில்லையா? பகவான், பிரஹ்லாதனை ரக்ஷிப்பதற்காக இந்த நரசிம்ஹ அவதாரத்தை எடுக்கவில்லை... பிரஹ்லாதனுடைய வார்த்தையை ரக்ஷிப்பதற்காக எடுத்த அவதாரம் அது.

வார்த்தை என்ன...? 'எங்கும் உளன் கண்ணன்!' 'எங்கும் நிறைந்திருக்கிறான் பரமாத்மா; அவன் இல்லாத இடம் இல்லை' என்கிறான் பிரஹ்லாதன். அந்த வார்த்தையை ரக்ஷிப்பதற்காக, அவன் சொல்லிக் காண்பித்த இடத்திலிருந்து பகவான் தோன்றவில்லை என்றால் பகவானுடைய விபூதிக்கு இழுக்கு அல்லவா அது! ஆகவே பிரஹ்லாதன் வார்த்தையைக் காப்பதற்காக அவன் அவதரித்தான்.

“**பி**ரும்மா சொன்ன வார்த்தையை ரக்ஷிப்பதற்காக அவன் நரசிம்ஹாவதாரம் எடுத்தான்.

பிரும்மா ஏகப்பட்ட வாக்கு கொடுத்துவிட்டார் அந்த ஹிரண்ய கசிபுவுக்கு.

பகவான் பிரும்மாவின் வாக்கை ஒதுக்கிவிட்டு, எப்படி வேண்டுமானாலும் ஹிரண்ய கசிபுவைக் கொன்றிருக்கலாம். 'நீ ஏன் அவ்வாறு கொன்றாய்?' என்று யாரேனும் அவனிடம் கேட்க முடியுமா? ஸர்வ ஸ்வதந்த்ரன் அல்லவா அவன்! எப்படி வேண்டு

மானாலும் கொல்லலாம். அப்படிப் பண்ணாமல், பிரும்மா கொடுத்த வரத்துக்குள் அகப்பட்டுக் கொள்ளாமல், அதைக் கடந்து, அகடிதகடனா சாமர்த்தியத்துடன் ஆவிர்பவித்து, பகவான் அந்த ஹிரண்ய கசிபுவை நிக்ரஹம் பண்ணினான்.

நன்றாகக் கவனிக்க வேண்டும்... 'பிரும்மா வரம் கொடுத்தால் செல்லாது' என்று உலகிலே வழக்கு ஏற்பட்டுப்போனால், அப்புறம் பிரும்மாவை யாராவது வணங்குவார்களா? அவரைப் பற்றிப் பேசுவார்களா...?! ஏற்கெனவே உலகத்திலே பிரும்மாவைக் குறித்து அதிக மாக பூஜைகள் கிடையாது. அதிகமாக பிரார்த்தனை களெல்லாம் கிடையாது மீதி தேவதைகளுக்கெல்லாம் உள்ளது மாதிரி பிரும்மாவுக்கு இல்லை. யக்ஞாதிகளில் கூட, பிரும்மா வருகிறபோது, பிரஜாபதி மந்திரத்தை மனத்திலே நினைத்துக்கொண்டு, மனத்தினாலேயே ஹவிஸை ஸமர்ப்பிக்க வேண்டும். வாக்தேவதை யினுடைய சாபம் இப்படி இருக்கிறது. இன்னும் 'பிரும்மா வரங்கொடுத்தால் செல்லாது' என்று சொல்லி விட்டால், உலகத்திலே இப்போது அவருக்கு இருக்கிற மதிப்பு இருக்குமா? அதுவுமல்லவா போய்விடும்.

ஆகையால் பகவான் ரொம்ப ஜாக்கிரதையாக, தான் போட்ட சட்டத்தை மீறாமல், அந்த பிரும்மா வுக்கும் எந்த இழுக்கும் இல்லாமல் செயல்பட்டான்.

ஒருத்தர் நாற்பத்தெட்டு நாள் ராமாயணம் கதை பண்ணினார்; ஓரிடத்திலே பூரணமாகச் சொல்லி முடித்துவிட்டு, இவர் ஊருக்குக் கிளம்புகிறார். அப்போது அங்கே வந்தார் அந்தக் கதையை ஏற்பாடு பண்ணியவர்.

“சுவாமி! ரொம்ப நாட்களாக எனக்கொரு சந்தேகம்” என்றார்.

நாற்பத்தெட்டு நாள் கதை கேட்டதில் ஒரு சந்தேகம் ஏற்பட்டுப் போயிருந்தது அவருக்கு! “நித்தியம் உம்மிடம் கேட்க வேண்டும், கேட்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால், அதற்கு அவகாசமே கிடைக்கவில்லை; இப்போது கேட்கலாம் அல்லவா?” என்று பௌராணிகர் ஊருக்குக் கிளம்புகிற சமயத்தில் கேட்கிறார்.

“கேளும்!” என்றார் அவர்.

“நெடுநாட்களாக ஒரு சந்தேகம் உண்டு... பிரும்மா வுக்கு ஏன் கோயிலோ பூஜையோ இல்லை என்பதுதான் அந்த சந்தேகம். இப்போது உங்கள் உபன்யாஸம் கேட்டு இன்னொரு சந்தேகமும் ஏற்பட்டுள்ளது... இந்த நாற்பத்தெட்டு நாளில் ராமன் ராமன் என்று நிறைய சொன்னீர். ராவணன், ராவணன் என்று நிறைய சொன்னீர். இடையிடையே ராக்ஷஸன் ராக்ஷஸன் என்றும் நிறைய வந்தது. இதிலே ராமன் ராக்ஷஸனா? ராவணன் ராக்ஷஸனா?” என்கிறார் அவர்!



## 23

**ஊ**ருக்குப் போகலாம் என்று கிளம்பிய உபன்யாஸகர், மூட்டையைக் கீழே வைத்துவிட்டார்!

"நாற்பத்தெட்டு நாள் கதை சொன்ன நான், ராமன் ராக்ஷஸனா, ராவணன் ராக்ஷஸனா என்று நீர் தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கு அவ்வளவு அழகாகச் சொல்லியிருக்கிறேன்... இவ்வளவு நாள் கழித்து நீரும் சந்தேகம் கேட்டிருக்கிறீர். இதிலிருந்தே நீர் கேட்ட கேள்விக்குப் பதிலும் கிடைத்திருக்கிறது" என்றார்.

"உம்மையும் படைத்து, என்னையும் படைத்து உன் எதிரிலே என்னை நாற்பத்தெட்டு நாள் கதை சொல்ல வைத்தார் அல்லவா...? அதனால்தான் பிரும்மாவுக்குக் கோயில் இல்லாமல் போயிற்று!" என்றார்.

பிரும்மாவுடைய நிலை ஏற்கெனவே இப்படி இருக்கிறது...! பகவான் நரசிம்ஹாவதாரத்திலே எவ்வளவு கண்ணியமாக நடந்து கொள்கிறான் பாருங்கள்... தன்னைச் சேர்ந்தவர்கள், தன் அடியவர்களெல்லாம் கெட்டுப்போகக் கூடாது; 'அவர்களுக்கு ஒரு கெட்ட பெயர் வரக்கூடாது; அவர்கள் சௌக்கியமாக இருக்க வேண்டும். அவர்கள் வாக்குக்கு கௌரவம் வேண்டும்' என்று எப்போதும் எண்ணுகிறான் பரமாத்மா.

அந்த மாதிரி கண்ணியமாக ஒரு சதஸ்ஸிலே நடந்துகொள்ளக்கூடிய திறமை உள்ளவன்தான் 'நேதா' என்று கொண்டாடப்படுகிறான். அப்படிப்பட்ட நேத்ருத்வம் பகவானிடத்திலே — நரசிம்ஹனிடத்திலே இருக்கிறது. அந்த நரசிம்ஹ அவதார காலத்தில் அதை விசேஷமாக அவன் காட்டினான். பிரும்மாவினுடைய வரத்துக்கு எந்த பங்கமும் இல்லாமல் பகவான் ஆவிர் பவித்து, பிரும்மாவை வேறுவிதமாக சிக்ஷித்தான்.

ஸ்தம்பத்தைப் பிளந்தபோது, 'பிளந்தது தூணு மாங்கே, பிறந்தது சீயம்பிள்ளை' என்பதற்கேற்ப, அவன் தோன்றியபோது உதித்த சப்தம், அவன் சிரித்த அந்த அட்டகாசச் சிரிப்பு... அது அண்ட—பகிரண்டங்களைச் சென்று முட்டியது. எல்லா உலகங்களையும் தாண்டிப் போயிற்று, அந்த சிம்ஹ கர்ஜனை.

சத்யலோகத்திலே பிரும்மா தாமரை மலரிலே உட்கார்ந்து ஜபமாலையை உருட்டிக் கொண்டிருந்தார். எதிரே சரஸ்வதி வீணை வாசித்துக் கொண்டிருந்தாள். நரசிம்ஹ அவதார சப்தமானது சத்யலோகத்திலே பிரும்மா உட்கார்ந்திருக்கிற தாமரை மலரைப் போய் ஓர் அடி அடித்தது. உட்கார்ந்திருந்த பிரும்மா, எட்டு குட்டிக்கரணம் போட்டுக்கொண்டு கீழே விழுந்தார். எழுந்து பார்த்தால், எதிரிலே நரசிம்ஹாவதாரம். அந்த அவதாரத்தைப் பார்த்து ஸ்தோத்திரம் பண்ணுகிறார்! அமராவதி பட்டிணத்திலே இந்திரன் உட்கார்ந்திருக் கிறான்; அவன் வரவில்லை—விழவில்லை. அளகாபுரி என்ற நகரத்திலே குபேரன் உட்கார்ந்திருக்கிறான். அவன் விழவில்லை. விபாவரி என்ற பட்டணத்திலே வருணன் உட்கார்ந்திருக்கிறான்... அவனும் விழவில்லை.

அந்தந்த தேவதைகள் அவரவர் இடத்திலே அழகாக உட்கார்ந்திருக்கிறார்கள்... ஆனால் பிரும்மா மாத்திரம் ஸ்வஸ்தானத்திலேயிருந்து கீழே விழுந்தார்.

ஏன் அவ்வாறு என்று கேட்டால், “இந்த மாதிரி துஷ்டனுக்கெல்லாம் வரங்கொடுத்துவிட்டு, அங்கே நீ தனியே ஜபம் பண்ணிக்கொண்டிருக்கிறாயா? ஜாக்கிரதை! இனிமேல் வரம் கொடுப்பதாக இருந்தால், என்னைக் கேட்டுக்கொண்டு கொடு” என்று பரமாத்மா சப்தத்தினாலேயே பிரும்மாவை ஒடுக்கினான்.

அந்த சப்தம் இருக்கிறதே... நரசிம்ஹ அவதார காலத்திலே எழுந்த அந்த அட்டகாசம் இருக்கிறதே... அதை என்னவென்று வர்ணிக்க முடியும்! பிரும்மா வையே கீழே தள்ளியதென்றால், அந்த சப்தத்தி னுடைய பெருமையை என்னவென்று சொல்வது!

சப்தங்களாகிற வேதத்தினால் அறியப்பட வேண்டிய மூர்த்தி, தான் ஒருவனே என்பதையும் இதன் மூலம் பரமாத்மா உணர்த்தினான்.

‘வேதம்’ என்று சொல்லும்படியான உயர்ந்த பர்வத குகைக்குள்ளே நித்யவாஸம் பண்ணிக்கொண்டி ருக்கிறான்.

பர்வதம்(மலை) என்பது வேதம். குகை—வேதாந்தம்.

வேதமாகிற சிகரத்தில் வேதாந்தமாகிற (உபநிஷத்) குகைக்குள்ளே எம்பெருமான் நரசிம்ஹன் திகழ்கிறான் என்பது வலியுறுத்தப்படுகிறது.

**அ**வதார காலத்திலே பிரும்மாவை சிக்ஷித்த பரமாத்மா, அதி ஆச்சர்யமாய் பிரும்மாவின் வாக்கை ரக்ஷித்துக் காப்பாற்றினான்.

பிரும்மா கொடுத்த வரத்தை எவ்வித பங்கமு மில்லாமல் இந்த அவதாரம் காத்தது. அது மாத்திர மில்லை. நாரதர் வாக்கையும் காத்தது.

'நாரதம்' என்றால் பிரும்ம ஞானம் என்று அர்த்தம். அதை எப்பொழுதும் எல்லோருக்கும் கொடுக்கக்கூடியவர் நாரதர்.

'நாரம்' என்றால் தீர்த்தம். அவர் பிறப்பதற்கு முன்னால் உலகிலே தீர்த்தம் இல்லாமல் எல்லோரும் கஷ்டப்பட்டார்கள். அவர் பிறந்த பின்னால் நல்ல மழை பொழிந்து எங்கும் தீர்த்த சம்வ்ருத்தி ஏற்பட்டது. அதனால் நாரதர் என்று அவருக்குத் திருநாமம். சிறந்த ஞான பிரும்ம புத்திரரான நாரதர், பிரஹ்லாதன் குழந்தையாக அவன் தாயின் கர்ப்பத்துக்குள்ளே இருந்தபோதே சொன்னார்; "இந்தக் குழந்தையை யாராலும் கொல்ல முடியாது" என்று.

ஆனால், பிரஹ்லாதன் பிறந்த பிறகு என்னவா யிற்று?... ஹிரண்ய கசிபு "அவனை அடிக்கிறேன், கொல்கிறேன்" என்கிறான்!

"பிரஹ்லாதன் உயர்ந்த பக்தன். அவனைக் கொல்ல முடியாது" என்று நாரதர் சொன்ன வாக்கைக் காப்பதற்காக, பிரும்மாவினுடைய வாக்கைக் காப் பாற்றுவதற்காக, பிரஹ்லாதனுடைய வார்த்தையைக் காப்பதற்காக பகவான் நரசிம்ஹாவதாரம் எடுத்தான்.

**"விச்வம்** விஷ்ணுர் வஷட்காரோ பூத பவ்ய பவத் ப்ரபு:" என்பது ஸஹஸ்ரநாமத்தின் ஆரம்பம். இதற்கு என்ன பொருள் என்று கேட்டால், விச்வமாகவும்

விச்வத்துக்குள்ளேயும் மஹாவிஷ்ணுவே இருக்கிறான் என்று பொருள்.

மஹாவிஷ்ணு என்றும், விஷ்ணு என்றும் அவனைச் சொல்கிறோம் அல்லவா? ராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமும் யாருடைய அவதாரம் என்று கேட்டால் விஷ்ணுவினுடைய அவதாரம். நரசிம்ஹ அவதாரம் யாருடைய அவதாரம் என்று கேட்டால், அது மஹாவிஷ்ணுவினுடைய அவதாரம். ஆகவே, சஹஸ்ரநாமத்தின் ஆரம்பத்திலேயே சொல்லப்பட்டது நரசிம்ஹாவதாரம்.

எல்லாவற்றையும் தன் வசத்திலே உடையவன் "வஷட்காரேண வஜ்ரேண." எல்லா இடத்திலும் அனுப்பிரவேசனாக அவன் இருப்பதைத்தான் முதல் திருநாமங்கள் சொல்கின்றன. நரசிம்ஹாவதாரத்தில் அதைத்தானே நிதர்சனமாகப் பார்க்கிறோம்?

நரசிம்ஹ ரூபம் இருக்கிறதே, நரம் கலந்த சிங்கம தான ரூபம் — அது எல்லோருடைய ஹ்ருதயத்தையும் கொள்ளை கொண்டது.

அவசரமாக வந்த அவதாரம்தான். மின்னலைப் போல் திடீரென்று தோன்றிய (வித்யுத்வது) அவதாரம் தான். ஆனால், மின்னல் மாதிரியே அழகானது.

உடனே ஓடி வந்த அழகு. இந்த அவசர கோல மானது பார்க்க ரொம்ப அழகானது ரொம்ப ரமணீய மாக எல்லோர் ஹ்ருதயத்தையும் ஆகர்ஷிக்கும்படியான தன்மை படைத்ததாய் விளங்கும் ரூபம்.

அஹோபில மடத்திலே அந்த வெள்ளி மண்டபத் திலே காட்சி அளிக்கிறான் பாருங்கள் மாலோலன்.

அங்கு திவ்ய மங்களமாய் அர்ச்சாரூபத்தில் எழுந்த ருளியிருக்கிறான். லக்ஷ்மியை அணைத்துக்கொண்டு அவளும் அவனை அணைத்துக் கொண்டு அந்தச் சேர்க்கையிலே தங்கடோலையிலே (ஊஞ்சலிலே) ஆடிக் கொண்டிருக்கிறான். கம்பீரமான சிரிப்பு அந்த எம்பெருமானுக்கு. அந்த திவ்ய வடிவழகை ஸேவித்த வர்கள் மறுபடியும் பிறவாதாரே. பிறப்பை அறுக்கும்படியான மாமருந்து அவன்.



## 24

திவ்ய மங்களமான ரூபத்துடன் நரசிம்ஹன் ஆவிர்பவித்தான். அதனால்தான் சஹஸ்ரநாமத்திலே நரசிம்ஹனாக அவன் அவதரித்தான் என்று வெறுமே சொல்லாமல் 'நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான்' என்று வருகிறது.

அந்தத் திருமேனி இருக்கிறதே, அது 'ஸ்ரீமத்' சப்தத்தினாலே மிக அழகான சுந்தரமூர்த்தி என்று விவரிக்கப்படுகிறது.

அந்த அவதார கால நரசிம்ஹனாய் மிகவும் போக்யமான ஸ்வரூபமாய், அனுபவிக்க அனுபவிக்கத் தெவிட்டாததாக விளங்கக்கூடியது என்று காட்டித் தரப்படுகிறது.

அப்படிப்பட்ட திவ்ய மங்கள ரூபத்தோடு தோன்றியவன், உளந்தொட்டு ஹிரண்ய கசிபுவை முடித்தவன், அதே சமயத்தில் பிரஹ்லாதனைக் காத்தவன், ஏக காலத்தில் திடீரென்று தோன்றி அவதார காரியத்தை முடித்துக்கொண்டு வித்யுத்வது — மின்னலைப் போல் மறைந்துவிட்டான்!

லோகத்திலே பல காலம் இருந்து மனிதர்க்காக படாதபாடு பட்டு, தானும் இந்த உலகிலே நீடித்து, கோபதாபங்களுக்கெல்லாம் இடங்கொடுத்து — அப்படியெல்லாம் வாழ்ந்த அவதாரங்கள் உண்டு.

ஆனால், இந்த அவதாரம் வந்தவுடனேயே அதிவேகமாய், வந்த வேகத்தில் புறப்பட்டுப் போய் விட்டது. அந்த சீற்றத்தில் அதிவேகமாய் அருள் பெற்றான் பிரஹ்லாதன்.

சாக்ஷாத் ஈசுவரன் — பரமேசுவரனே — இதைக் கொண்டாடுகிறார்.

உயந்ததான நரசிம்ஹ மந்திரத்திலே பதினொரு பதங்கள் உண்டு. 'மந்திர ராஜம்' என்று இந்த மந்திரத் துக்குப் பெயர். வேதம் சொல்கிறது — இந்த மந்திரத்தை அடிக்கக்கூடிய இன்னொரு மந்திரம் இல்லை என்று!

அதே மாதிரி, நரசிம்ஹ யந்திரம் இருக்கிறது பாருங்கள் — அதை பேதிக்கக்கூடிய வேறு யந்திரமோ மந்திரமோ, தந்திரமோ இல்லை.

யந்திரம் உயர்ந்தது
மந்திரம் உயர்ந்தது
தந்திரம் உயர்ந்தது

நரசிம்ஹ யந்திரத்துக்கு 'சர்வதோபத்ரம்' என்று பெயர். எல்லா இடத்திலேயும் ரக்ஷிக்கக்கூடியது அது.

எல்லாப் பக்கங்களிலேயும் பத்திரமாக எழுந்தருளி யிருக்கும்படியான எம்பெருமான் அந்த யந்திரத்துக் குள்ளேயும் பிரதிஷ்டாபனமாகி இருக்கிறான்.

ஆகவே நரசிம்ஹ மந்திரத்தை அடிக்கக்கூடியது ஒன்று இல்லை. அதை சேதனம் பண்ணக்கூடியது ஏதும் இல்லை. மந்திர சாஸ்திரத்திலேயே இது விசேஷமாகப் பேசப்பட்டிருக்கிறது.

அப்படிப்பட்ட மந்திரங்களிலே ராஜ மந்திரமான, அனுஷ்டுப் சந்தஸ்ஸில் அமைந்த நரசிம்ஹ மந்திரத்தை

சாக்ஷாத் பரமேசுவரனே அக்ஷரம் அக்ஷரமாக விவரிக்கிறான். ஈசுவரனே ஏகாதச ருத்ரர்களாக இருந்து கொண்டு பதினொரு பதங்களையும் விவரிக்கிறான். ஒவ்வொரு சுலோகம் மூலமாக ஒரு பதம் விவரிக்கப் படுகிறது.

அப்படி பூரணமாய் நம்மை ஈடுபடுத்தும் ரூப லாவண்யம் நரசிம்ஹனுடையது.

இதைத்தான் திருப்பாணாழ்வார் பாடினார்:

பரியன் ஆகி வந்த அவுணன் உடல்கீண்ட அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத்து அமலன் முகத்துக்
கரிய ஆகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரி ஓடி நீண்ட அப்
பெரிய ஆய கண்கள், என்னைப் பேதைமை செய்தனவே!

ஈசுவரன் என்ன சொன்னானோ அதையேதான் சொல்கிறார் ஆழ்வார்:

அந்த ரங்கநாதன் ஸ்ரீரங்கத்திலே படுத்துக் கொண்டிருக்கிறானே, அவன் கண்களைப் பாருங்கள் எல்லோரும். இந்தக் கண் யாருடையது தெரியுமா? நரசிம்ஹனுடையது. ரங்கநாதன் என்று சாமானியமாக நினைத்துவிடாதீர்கள். நரசிம்ஹன் அவன். செவ்வரி ஓடிய அப்பெரியவாய கண்கள்—விசாலமான நேத்திரங்கள். ‘விசாலமான நேத்திரங்கள் எதனால் எம்பெருமான் நரசிம்ஹனுக்கு?’ என்று கேட்டால், எத்தனை பக்தர்கள் வந்தாலும் — யார் வந்தாலும் — குளிர கடாக்ஷிக்கும்படியாக ஏற்பட்டவை அந்த நேத்திரங்கள்.

அவன் நேத்திரத்தைப் பார்த்து அவன் சாக்ஷாத் மஹாவிஷ்ணு என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

அவன் நாராயணன் என்பதைக் காட்டிக் கொடுப்பதே அவனுடைய நேத்திரங்கள்தான். எத்தனை அவதாரம் எடுத்தாலும் எத்தனை திருவுருவங்களை பகவான் எடுத்தாலும் அவன் 'ஸ்புட பத்ம லோசன:' வராஹ அவதாரம் பண்ணுகிறான்... 'குர்குர்' என்று சப்தித்தபடி வராஹமாக (பன்றியாக) உருவெடுத்து, கண்களை மூடி மூடித் திறக்கிறான்!

அவனைப் பார்த்து யார் என்று தெரியாமல் வியந்தவர்களெல்லாம் அந்த நேத்திரத்தைப் பார்த்த வுடனே தெரிந்துகொள்கிறார்கள், அவன் சாக்ஷாத் மஹாவிஷ்ணு என்று.

அந்தத் தாமரை தள கண்கள்தான் அவனைக் காட்டிக் கொடுக்கின்றன.

பூதனை, குழந்தை கிருஷ்ணனுக்குப் பாலூட்டி அவனை அழிக்கவேண்டும் என்று வருகிறாள். கம்ஸன் ஆக்ஞைப்படி வருகிறாள். அப்போது குழந்தை கண்ணை கெட்டியாக மூடிக் கொண்டுவிட்டது!

ஏனென்றால், கண்ணைப் பார்த்துவிட்டு அவள் ஓடிப்போய்விடப்போகிறாளே என்று! அவளைப் பிடித்து அழித்துவிட வேண்டும் என்று தீர்மானம் பண்ணிவிட்டது குழந்தை. ஆனால், கண்ணைப் பார்த்தாளானால் நாராயணன் என்று தெரிந்து கொண்டு ஓடிப்போய்விடுவாளே! அப்புறம் தன் காரியம் நடவாமல் போய்விடும் என்று பகவான் கண்ணைத் திறந்து காட்டவே இல்லையாம்.

ஆகையினாலே, எல்லா அவதாரங்களிலேயும் பகவான் ராஜீவ லோசனனாக (தாமரைக் கண்ணனாக) விளங்குகிறான்.

ராமோ ராஜீவ லோசன: ராமனுடைய திரு நேத்திரத்துக்கு இலக்கானவர்கள் இராமாயணத்தில் மூன்று பேர். ஒன்று தசரதன், இரண்டாவது சபரி, மூன்றாவது ஆஞ்சநேயன்.

விச்வாமித்ரர், ராமனைக் காட்டுக்கு அனுப்பும்படி கேட்கிறார் தசரதனிடம். அப்போது அவன் என்ன சொல்கிறான்:

“ராமன் சின்னக் குழந்தை. பதின்மூன்று வயதுகூட ஆகவில்லை அவனுக்கு. தாமரைப் புஷ்பம் போன்ற நேத்திரம் படைத்தவன் அவன். ராக்ஷஸர்களோடு யுத்தம் பண்ணுவதற்கு அவனை நீங்கள் கேட்கிறீர்கள். சாயங்காலத்தில் தாமரைப் புஷ்பம் மூடிக்கொள்ளுவது போல் என் குழந்தை ராமனின் தாமரைக் கண்கள் தூக்கத்திலே மூடிக்கொண்டு விடுமே. அவனால் உங்களுக்குக் காரியம் ஆகுமா?” என்று ராமனுடைய நேத்திரத்தில் ஈடுபட்டுப் பேசுகிறான் தசரதன்.

சபரி என்பவள், “அந்த எம்பெருமானுடைய திருநேத்திரத்துக்கு இலக்காகி உயர்ந்த கதிக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்'' என்று எம்பெருமானின் திருநேத்திரத்தைக் குறித்துச் சொன்னாள்.

அதே மாதிரி, சீதாபிராட்டி ஆஞ்சநேயனிடம் ஸ்ரீராமனைக் குறித்து விசாரித்தபோது, ஆஞ்சநேயன் என்ன சொன்னான்...? முதலில் ஸ்ரீராமனின் நேத்திரத் தைத்தான் அவன் வர்ணிக்கிறான் “பனைக்குப் பனை தத்தித் திரியும் குரங்கினத்தைப் சேர்ந்த என்னையே ஸ்ரீராமனின் கண்கள் ஆகர்ஷித்துவிட்டன என்றால்,

அப்படிப்பட்ட நேத்திரத்தை என்னவென்று சொல்லு வேன்...?" என்றான்.

ஆகவே, எந்த அவதாரம் எடுத்தாலும் பகவானுடைய நேத்திரத்துக்குப் பங்கமில்லை.

அதிலும் எல்லா அவதாரத்தைக் காட்டிலும் நரசிம்ஹ அவதாரத்திலே விசாலமான திருநேத்திரம். இதை ஈசுவரனே எடுத்துச்சொல்கிறான்.

"நன்கு விரிந்த திருநேத்திரங்களால் நரசிம்ஹன் தனது பக்தர்களைக் குளிரகடாக்ஷிக்கிறான்" என்பது ஈசுவரன் வாக்கு!

அந்த நேத்திரத்தினால் அனுக்கிரஹம் பண்ணு கிறான். நிக்ரஹம் என்பதை அறியாதவன்.

நரசிம்ஹ மந்திரம் 32 அக்ஷரங்களைக் கொண்ட உயர்ந்த மந்திரம். அவதார காலத்தில் பகவான் விசால நேத்திரத்துடன் இருந்ததைச் சொல்கிறது. சீற்றத்தோடு அருள் பெற்றான் பிரஹ்லாதன்! கோபமாக இருந்தால் கண்களில் அனல் பறக்கும். ஆனால் இங்கே பாருங்கள்... ஹிரண்ய கசிபுவை பகவான் தீக்ஷண்ய மாகப் பார்க்கிறான்; அதே சமயம் பிரஹ்லாதனை வாத்ஸல்யமாகப் பார்க்கிறான். இரண்டும் ஏக காலத்திலே நடக்கிறது. ஒரே சமயத்தில் நேத்திரம் இரண்டு விதமாக வேலை செய்கிறது. ஹிரண்ய கசிபுவை தீவிரமாகப் பார்க்கிறான். பிரஹ்லாதனை அனுக்கிரஹமாகப் பார்க்கிறான்!

இது எப்படி என்று ஸ்ரீதரீய வியாக்யானம் என்கிற விளக்கத்தில் சொல்லியிருக்கிறது:

சிம்ஹம் இருக்கிறதே... அது மற்ற பிராணிகளை தீக்ஷண்யமாகப் பார்க்கும். தனது குட்டியை வாத்ஸல்யமாகப் பார்க்கும். அந்த மாதிரி, பிரஹ்லாதன் — குழந்தை — பக்தனானதனாலே வாத்ஸல்யமான பார்வையை அவன் மீது செலுத்தினான் பகவான்.

ஹரியை தியானம் பண்ணுங்கள் — ஏனென்றால், அவனிடத்தில் வாத்ஸல்யம் இருக்கிறது. அடி பணிந்தவர்களை வந்து ரக்ஷிக்கக்கூடிய உயர்ந்த குணம் அவனிடத்தில் இருக்கிறது.



# 25

தன்னிடத்திலிருப்பதை இழந்து கூக்குரலிட்டுக் கத்தக்கூடியவர்களை ஓடிவந்து ரக்ஷிக்கக்கூடிய குணம் படைத்தவன் எம்பெருமான். அதுமட்டுமல்ல, ஐச்வர்யத்தைக் கொடுக்கும்படியான உயர்ந்த குணமும் அவனிடத்தில் இருக்கிறது. உயர்ந்த ஸ்தானத்தை நமக்குக் கொடுக்கும்படியான சக்தி அவனிடமிருக் கிறது. பாபத்தை அழிக்கும்படியான சக்தி அவனிடத்தில் இருக்கிறது. இப்படி விசேஷமான குணங்கள் அவனிடத்தில் இருப்பதனாலே அவன் திருவடியைப் பற்றுங்கள் என்கிறது நரசிம்ஹ மந்திரம்.

இந்தக் குணங்களுக்கெல்லாம் சாட்சி இருக்கிறதா என்றால் பிரஹ்லாதன், விபீஷணன், கரிராஜன் (கஜேந்திரன்) பாஞ்சாலி, கௌசல்யா, த்ருவன் என்று ஒவ்வொரு குணத்தையும் அனுபவித்த ஒவ்வொருத்தர் சாட்சி சொல்கிறார்கள்.

வாத்ஸல்யத்துக்கு பிரஹ்லாதன் சாட்சி. வாத்ஸல்யம் என்றால் என்ன...?

கன்றுக்குட்டியிடம் பசு காட்டக்கூடிய அன்பிற்கு வாத்ஸல்யம் என்று பெயர். அந்தப் பசு சாப்பிடக் கூடிய வைக்கோலிலே கோ மலம், கோமியம் எல்லாம் கலந்து துர்கந்தம் அடித்தால் முகர்ந்து பார்த்துவிட்டு

அதைச் சாப்பிடாது பசு. ஆனால், அதுவே கன்றுக் குட்டி உடம்பிலே ஒரே துர்கந்தமாக இருக்கும்... ஆனால் ஆனால் அதை நாக்காலேயே நக்கிக் கொடுத்து பால் கொடுக்கும் பசு. இந்தக் குணத்துக்குத் தான் வாத்ஸல்யம் என்று பெயர். தான் சாப்பிடாமல் இருந்து வருகிறது. ஆனால், தன் கன்றுக்குட்டியை நாக்காலேயே நக்கிச் சுத்தம் பண்ணுகிறதே, அது உயர்ந்த தயை — அதற்குத்தான் வாத்ஸல்யம் என்று பெயர். அதை யாரிடத்திலே காட்டினான் பரமாத்மா... பிரஹ்லாதனிடத்திலே காட்டினான்.

நரசிம்ஹ மந்திரம் 32 அக்ஷரங்கள் உடையது. அதே போல் பகவான் நரசிம்ஹனுக்கு பல மந்திரங்கள் உண்டு. ஒரே அக்ஷரம், மூன்று அக்ஷரம், ஆறு அக்ஷரம், 32 அக்ஷரம், 36 அக்ஷரம், 132, 1132, 10132, ஒரு லட்சத்து நூற்று முப்பத்திரண்டு, ஒரு கோடி கோடி நூற்று முப்பத்திரண்டு, கோடி கோடி 132 — என்று ஒரு இப்படி நரசிம்ஹமந்திரம் பல அக்ஷரங்களுடன் கூடியதாக பல மந்திரங்கள் இருக்கின்றன. நரசிம்ஹ மந்திரத்தைக் காட்டிலும் சிறிய மந்திரம் இல்லை; பெரிய மந்திரமும் இல்லை. அதற்கு ஈடு இணையும் இல்லை.

பெரிய மஹான்களெல்லாம் இந்த நரசிம்ஹ மந்திரத்தை ஜபித்து பயனடைந்துள்ளார்கள். பரத்வாஜாதி மஹரிஷிகள் ஜபித்துள்ளார்கள்.

மட்டபல்லியிலே, ராஜ்யலக்ஷ்மி சமேதனாக விளங்கக்கூடிய நரசிம்ஹனை துதித்திருக்கிறார்கள். பரத்வாஜ சம்ஹிதையிலே முனிவர் விசேஷமாக

நரசிம்ஹனை ஸ்தோத்திரம் பண்ணுகிறார். இரவு பகல் வித்தியாசமில்லாமல் பரத்வாஜர் அந்த மட்டபல்லி க்ஷேத்திரத்திலேயே எழுந்தருளியிருந்து, அந்த நரசிம் ஹனை குகைக்குள்ளேயே அமர்ந்தபடி உபாஸனை பண்ணினார். குகையிலே ஸேவிக்கும்படியான எம் பெருமானை தமது ஹ்ருதயகுகைக்குள்ளேயும் அவர் பார்த்தார்.

நம் ஹ்ருதய குகைக்குள்ளே பகவான் எப்படி வாஸம் பண்ணுகிறான் என்று யாருக்காவது சந்தேக மிருந்தால் மட்டபல்லி க்ஷேத்திரத்தில் குகைக்குள்ளே எப்படி இருக்கிறானோ, அந்த மாதிரி நம் ஹ்ருதய குகையிலேயும் இருக்கிறான் என்று நாம் தெரிந்து கொள்ள முடியும்.

மட்டபல்லியானது கிருஷ்ணா நதி தீரத்திலே இருக்கிறது என்று தெரியும். அதற்கு முன்பு அதே கிருஷ்ணா நதி தீரத்திலே, விஜயவாடாவிலே வேதாத்ரி என்ற க்ஷேத்திரத்தைத் தாண்டித்தான் மட்டபல்லிக்குப் போக வேண்டும்.

ஹைதராபாத் போகிற சாலையிலிருந்து பத்து கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது வேதாத்ரி. வேதாத்ரியிலே உள்ள எம்பெருமானுக்கு யோகானந்தன் என்று பெயர். கிருஷ்ணா நதி தீரத்திலே பெரிய சாளக்கிராம மூர்த்தியாக அவன் காட்சி யளிக்கிறான். உள்ளுக்குள்ளே அழகாக அமர்ந்திருக் கிறான். அவனது இடையிலே ஒரு கத்தி வைத்திருக் கிறான். நாம் இந்த யோகானந்த நரசிம்ஹனை ஸேவிக்கப் போனோமானால் அந்த கத்தியை எடுத்து நம் கையிலே கொடுப்பார்கள். அதை வாங்கிப்

பார்க்கலாம். பகவானே பெரிய வைத்தியன் என்கிறது வேதம். முதல் வைத்தியன் அவன். மருந்தாகவும் இருக்கிறான்; மருத்துவனாகவும் அவனே இருக்கிறான். இங்கே கத்தி வைத்துக் கொண்டிருக்கிற எம்பெருமான் பெரிய 'சர்ஜன்'; 'ஆபரேஷன்' பண்ணுவதிலே திறமை மிக்கவன்.

வேதாத்ரிக்குப் பக்கத்து ஊரிலே ஒருவருக்கு வயிற்றிலே பெரிய கட்டி வந்துவிட்டது. ஆபரேஷன் பண்ணினால் அவர் பிராணனுக்கே ஆபத்து என்று சொல்லிவிட்டார்கள். எல்லா ஆஸ்பத்திரிகளுக்கும் பல இடங்களில் போய்ப் பார்த்துவிட்டு வந்துவிட்டார். வேதாத்ரி நரசிம்ஹனை ஸேவித்து, அங்கே ஒரு மண்டலம் விரதம் இருந்தால் கட்டி தானே போய் விடும் என்றார்கள்.

அங்கே பக்கத்திலேயே இருந்த நரசிம்ஹனை மறந்துவிட்டு எங்கெல்லாமோ சுற்றினாரே...! 48 நாள் அங்கே தங்கி பிரதக்ஷிணம் பண்ணினார். நாற்பத் தெட்டாம் நாள் ராத்திரி, அவர் வயிற்றைத் தட்வுகிற மாதிரி இருந்ததாம்; மறுநாள் பார்த்தால் அந்தக் கட்டியையே காணோம். சொஸ்தமாகி அழகாகத் திரும்பி வந்துவிட்டார்.

ஆரோக்கியத்தைக் கொடுக்கும்படியான எம்பெருமான் அங்கே வேதாத்ரியிலே எழுந்தருளி யிருக்கிறான். இப்போதும் எத்தனையோ பேர் அங்கே வேண்டிக்கொண்டு பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

**வே**தாத்ரியைக் கடந்து நாம் வந்தோமானால், விஜயவாடாவிலிருந்து நூறு கிலோ மீட்டர் தூரத்திலே

கோதாடா என்கிற ஊர் இருக்கிறது. அங்கேயிருந்து உள்ளுக்குள்ளே நாற்பது கிலோ மீட்டர் போக வேண்டும். இதுவும் கிருஷ்ணா நதி தீரம். ரொம்ப நெருக்கமாக கிருஷ்ணாவோடு சேர்ந்திருக்கிறான் நரசிம்ஹன். நதியிலே ஸ்நானம் பண்ணிவிட்டு உடனே கோயிலுக்குள் வந்துவிடலாம். அந்த கிருஷ்ணா நதி தீரத்திலே, நமக்கு பக்தியைக் கொடுக்கக்கூடியவனாக விளங்குகிறான். சிறந்த பக்தியைக் கொடுத்து, ஞானத்தைக் கொடுத்து, வேண்டியதையெல்லாம் தரக்கூடியவள்ளலாக விளங்குகிறான். ஆரோக்கியம் மாத்திரமில்லை, ஐச்வர்யம், புத்தி, ஆயுள் என்று சர்வதோமுகமான எல்லாவற்றையும் கொடுக்கக் கூடியவனாக விளங்குகிறான்.

இந்த கோதாடாவையும் தாண்டி இன்னும் உள்ளே போனோமானால், கிருஷ்ணா நதி தீரத்திலே உயர்ந்த வாடபல்லி என்ற ஊர் அமைந்திருக்கிறது. இங்கேயெல்லாம் விசேஷமாக மஹாயக்ஞங்கள் நடந்திருக்கின்றன. வேதாத்ரியிலே நூறாவது யக்ஞம் நடந்தது.

"ஆரண மலைவாழ் ஆளரியே—உனை காரணம் என நான் இனி அறிந்தேன்" என்ற பாடலானது, அங்கே வேதாத்ரியிலே இருந்தபோதுதான் அடியேன் வாக்கில் வந்தது.

ஆரணமலை என்று வேதாத்ரிக்கு ஒரு பெயர்.

நூற்றிநாலாவது யக்ஞம் மட்டபல்லியிலே நடந்தது. வாடபல்லியிலே நூற்றியாறாவது யக்ஞம் நடந்தது.

வாடபல்லி க்ஷேத்திரத்துக்கு 'தீபாலயம்' என்று பெயர். மட்டபல்லி தாண்டி அமைந்திருக்கிறது அது.

மூஸி நதியும் கிருஷ்ணா நதியும் சங்கமிக்கும்படியான க்ஷேத்திரம். அப்படிப்பட்ட க்ஷேத்திரத்திலே அகஸ்தியருக்கு ஸேவை கொடுத்தான் எம்பெருமான்.

வாடபல்லியிலே, பூமாதாவோடு சேர்ந்த மூர்த்தியாக அவன் காட்சியளிக்கிறான்.

அங்கே கிருஷ்ணா நதிக்கரையிலே ஈசுவரன் ஆலயம் இருக்கிறது. அந்த ஈசுவர மூர்த்தி சிரஸிலிருந்து கங்கையானது சலசலவென்று பெருகி வருகிறது — இன்றைக்கும் பார்க்கலாம் — கங்கையானது கொட்டிக் கொண்டேயிருக்கிறது.

ஈசுவராலயத்தைத் தாண்டி உள்ளே கோட்டைக்குள்ளே நரசிம்ஹன் ஆலயம். 'தீபாலயம்' என்று அதற்குப் பெயர். கார்த்திகை மாதத்திலே அங்கே யக்ஞம் பண்ணுவதுண்டு. 'தீபாலயத்தில் யக்ஞம் பண்ணு' என்று லக்ஷ்மி நரசிம்ஹன் ஆக்ஞாபித்தான். அது எங்கு இருக்கிறது என்று முதலில் தெரியவில்லை. அப்புறம் விசாரித்தால் இந்த இடம் என்று சொன்னார்கள். ஆச்சர்யமான க்ஷேத்திரம் அது. பகவானுடைய மூக்குக்கு நேரே ஒரு தீபம் இன்றைக்கும் எரிந்து கொண்டிருக்கிறது. அவன் திருவடிக்கு நேரே ஒரு தீபம் எரிந்துகொண்டிருக்கிறது — ஜ்வாலை.

கர்ப்பகிருஹத்தினுள்ளே காற்று புகக் கூட இடமில்லை. அவ்வளவு நெருக்கமான இடம். அந்த இடத்தில் மூக்குக்கு நேரே இருக்கிற ஜ்வாலை மாத்திரம் ஆடிக்கொண்டே இருக்கும். அங்கே போகிறவர்களுக்கு நன்றாகத் தெரியும். கீழே இருக்கிற தீபம் அப்படியே ஆடாமல் இருக்கும். மூக்குக்கு நேரே

இருப்பது மட்டும் ஆடும்! இதிலிருந்து என்ன தெரிகிறது? எம்பெருமானுடைய மூச்சுக்காற்றானது அப்படியே அந்த தீபத்தின் மேல் காற்றுப்பட்டு அலைகிறது. அவ்வளவு ஜீவ களையோடு பரமாத்மா அங்கே எழுந்தருளியிருக்கிறான்.

நாம் அவனிடத்திலே சஞ்சலத்தோடு போகிறோம். மனத்திலே பல வியாகூலங்களோடு போகிறோம். அவனை ஸேவிக்க உள்ளே போனோமானால், நம் மனது மாதிரி அந்த தீபம் ஆடுகிறது. அவனை ஸேவித்த பிற்பாடு நமக்கு ஒரு சஞ்சலமும் இல்லை என்பதை, அவன் திருவடிக்கு நேரே இருக்கிற தீபம் காட்டிக் கொடுக்கிறது!



## 26

மட்டபல்லி க்ஷேத்திரம் எங்கே இருக்கிறது என்றால், வேதாத்ரிக்கும் வாடபல்லிக்கும் நடுவிலே இருக்கிறது. சாஸ்திர ரீதியாகப் பார்த்தோமானால், ஞானம்—பக்தி—வைராக்கியம் என்று சொல்லுவார்கள்.

இதிலே பக்தி என்பது சித்தித்து விட்டதானால், முன்னே இருக்கிற ஞானத்தையும் சம்பாதிக்க முடியும். அடுத்து இருக்கிற வைராக்கியமும் கிடைக்கும். பக்தி இல்லையென்றால் வைராக்கியம் சித்திக்காது.

ஆகவே, மட்டபல்லியிலே இருக்கிற எம்பெருமானுடைய அனுக்கிரஹம் நமக்குக் கிடைத்ததானால், வேதாத்ரி நரசிம்ஹனின் அனுக்கிரஹம் கிடைக்கும்; இந்தப் பக்கத்தில் இருக்கிற தீபாலய நரஸிம்ஹனின் அனுக்கிரஹமும் நமக்குப் பரிபூரணமாகக் கிடைக்கும்.

அந்த கிருஷ்ணா நதி தீரத்திலே பஞ்ச நாரசிம்ஹ க்ஷேத்திரங்கள் உள்ளன. அதிலே இந்த மூன்றும் அடங்கும்.

மங்களகிரி க்ஷேத்திரம் எல்லாவற்றுக்கும் பிரதானமாக இருக்கிறது. மங்களகிரியை அடுத்து வேதாத்ரி; அதற்கடுத்து வாடபல்லி. கிருஷ்ணா நதி உத்தர வாஹினியாக, வடக்குப் பக்கமாக ஓடுகிற இடத்தில்,

நதிக்கு எதிரே கேதவரம் என்கிற ஊர். இங்கே மலை மேல் எழுந்தருளியிருக்கிறான் எம்பெருமான் நரசிம்ஹன். இந்த கேதவரம் பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் ஐந்தாவது.

பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் முதல் க்ஷேத்திரம் மங்களகிரி. அந்த மங்களகிரி நரசிம்ஹன் தான் முதன்முதலில் யக்ஞம் பண்ணும்படி அடியேனை ஆக்ஞாபித்தான். அந்த ஆக்ஞைப்படி ஆஸ்திக சமாஜத்தில் முதல் யக்ஞம் நடந்தது.

மங்களகிரி க்ஷேத்திரத்து எம்பெருமானும் கிருத யுகத்திலேயிருந்து இருக்கும்படியான எம்பெருமான். அவனுக்குப் பாலையே அந்த யுகத்தில் நைவேத்யம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். திரேதா யுகத்தில் இக்ஷுஸாரம் (கரும்புச் சாறு). துவாபர யுகத்திலே தேன். இந்த யுகத்திலே கற்கண்டுப்பானகமும் வெல்லப் பானகமும் நிவேதனம்.

அந்த எம்பெருமான் இருக்கிறானே, அவன் பாதியைச் சாப்பிடுவான்; பாதியை நமக்குக் கொடுப்பான். அவனுக்கு அப்படியொரு சக்தி. மலை மேலே ஜலம் கிடையாது. கீழேயிருந்துதான் காவடியிலே எடுத்துக் கொண்டு போகவேண்டும். அங்கே மேலே, பானகம் தயார் பண்ணக்கூடிய பெரிய கல் இருக்கிறது அந்தக் கல்லில் வைத்து வெல்லத்தை உடைப்பார்கள்.

அதை எடுத்து ஒரு கங்காளத்திலே கரைத்து, வழிய வழிய பகவானுக்கு நிவேதனம் பண்ணுகிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள்...

ஒரு சங்கிலே பானகத்தை எடுத்து, வைகானச ஆகம ரீதியாய், புருஷஸூக்தத்தைச் சொல்லி, அந்த

நரசிம்ஹனின் 'அலைத்த பேழ் வாயிலே' சேர்க்கிறார் பட்டர்... அப்படிச் சேர்க்கிற பானகம் உள்ளே போய்க் கொண்டேயிருக்கும். கங்காளத்தில் பாதி ஆனவுடனேயே கலகலவென்று சப்தம் வரும். நரசிம்ஹன் பாதி பானகத்தை ஸ்வீகரிப்பான். அதன் பிறகு உள்ளே செல்லாமல் வெளியிலே வரும். அப்படி வருவதை சேஷமாக சங்கத்திலே எடுத்து, நம்மிடம் பிரஸாதமாகக் கொடுத்துவிடுவார்கள்.



சின்னஞ்சிறு குடத்திலே நைவேத்யம் கரைத்து வைத்தாலும் பாதி; பெரிய கங்காளத்திலே நிவேதனம் பண்ணினாலும் பாதிதான் ஸ்வீகரிப்பான் எம் பெருமான்.

"அர்தம் தாஸ்யாமி! பாதி கொடுக்கிறேன்; பாதி நான் எடுத்துக்கொள்கிறேன்" என்கிறான் பரமாத்மா. இன்றளவும் பானக சகதியாக இருக்கும்படியான அந்த

இடத்திலே ஒரு ஈ எறும்பு கூட வராது. ஆகையினாலே பகவானுக்கு நிவேதனம் பண்ணவேண்டிய பானகத்தில் ஒரு ஈ—எறும்பு இருக்காது. ஆனால், நிவேதனம் பண்ணி எடுத்து வந்த பிற்பாடு அதிலே ஈ—எறும்பு மொய்க்கும்! சாமானிய ஜந்துக்களெல்லாம் கூட "இது நிவேதனம் பண்ணிய பதார்த்தம்; இது நிவேதனம் பண்ணாதது'' என்று ஈடுபடுகிற ஒரு க்ஷேத்திரம் இந்த மங்களகிரி. அப்படியானால் அந்த க்ஷேத்திரத்தின் பெருமையை என்னவென்பது!

அஹோபில மடத்திலே டோலோத்ஸவத்துக்கு (ஊஞ்சல் உத்ஸவம்) எழுந்தருள்கிறான் கிருஷ்ணன், அழகிய சிங்கரோடு. அந்த கிருஷ்ணனுக்குப் பக்கத்திலே, மாலோலனுக்குக் கீழே, அந்த வெள்ளி மண்டபத்திலே எழுந்தருளியிருக்கிறான் ஒரு நரசிம்ஹன். அவன் யாரென்றால், மங்களகிரி லக்ஷ்மி நரசிம்ஹன்தான். பானக ஆராதனம் அங்கே சாயங் கால வேளையிலே நடக்கிறது. பானகமானது நிவேதனம் பண்ணப்படுகிறது.

யுகந்தோறும் அவனை வணங்கியவர்களெல்லாம் ஒவ்வொரு பதார்த்தத்தை நிவேதனம் பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

பாசுபதாஸ்திரத்தைப் பெற்ற அர்ஜுனன் தியானம் பண்ணிய மலை விஜயவாடாவிலே இருக்கிறது. அந்த மலையை இன்னமும் நாம் ஸேவிக்கலாம். கனகதுர்கா அங்கே அந்த மலையருகே எழுந்தருளியிருக்கிறாள்.

மங்களகிரியோ பீமனால் ஆராதிக்கப்பட்ட க்ஷேத்திரம்.

அடியேன் தாயார் வேடிக்கையாக ஒரு நாள் சொன்னார்: "இந்த ஊருக்கு 'விஜயவாடா' என்று ஏன் பெயர் வந்தது என்றால், தபஸ் பண்ணுவதற்காக மலை மேலே ஏறினான் அர்ஜுனன். ரொம்ப நாழி ஆன பிறகு தம்பி வரவில்லையே என்று தர்மபுத்திரன் அவனை 'விஜயா! வாடா!' என்று கூப்பிட்டார். அதனால் விஜயவாடா என்று பெயராயிற்று."

உடனே அடியேன் கேட்டேன் என் தாயாரை: "அது ஆந்திர தேசமாச்சே... தர்மபுத்ரர் தமிழிலா பேசினார்?" என்று. இந்த விஷயத்தின் ரஸோக்தியை நாம் உணரவேண்டும் என்பதற்காக இதைச் சொன்னேன்.

அந்த மாதிரி விஜயன் தபஸ் பண்ணிய இடத்தை அங்கே இன்னமும் பார்க்கலாம். அந்த இடத்தைத் தாண்டித்தான் நாம் மட்டபல்லிக்கே போகவேண்டும். மங்களகிரியையும் தாண்டிப் போக வேண்டும்... அப்படிப் போகையில், எதிரே மலையும் அதனருகே கிருஷ்ணாநதி தீரமுமாக உள்ள அந்த கேதவரத்தில் எம்பெருமான் லக்ஷ்மிநரசிம்ஹன் எழுந்தருளி யிருக்கிறான்.

இந்த ஐந்து க்ஷேத்திரங்களும் (மங்களகிரி, வேதாத்ரி வாடபல்லி, கேதவரம், மட்டபல்லி) பரம், வியூகம், விபவம், ஹார்தம், அர்ச்சை என்று ஐந்து நிலைகளைக் குறிக்கிற க்ஷேத்திரங்கள்.

ஆண்டாள் இந்த ஐந்து நிலைகளைப் பாடியிருக் கிறாள். 'மார்கழி திங்கள்', 'வையத்து', 'ஓங்கி உலகளந்த', 'ஆழி மழைக்கண்ணா', 'மாயனை மன்னும்' ஆகிய ஐந்து

பாசுரங்களிலே இந்த ஐந்து நிலைகளைக் காட்டினாள். பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் இந்த ஐந்து நிலைகளும் இருக்கின்றன.

'பரம்' என்பதை உயர்ந்த மங்களகிரி க்ஷேத்ரத்திலே நாம் பார்க்கலாம்.

'வியூகம்' என்பதை வேதாத்ரி க்ஷேத்திரத்தில் பார்க்கலாம்.

'விபவம்' என்பது, உயர்ந்ததாக இருக்கும்படியான வாடபல்லி க்ஷேத்திரத்திலே காணக்கிடைக்கிறது.

'ஹார்தம்' என்பது கேதவரத்திலே.

'அர்ச்சை' என்பது மட்டபல்லி க்ஷேத்திரத்திலே!

இந்த ஐந்து நிலைகளும் ஐந்து நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் அழகாக அமைந்திருக்கின்றன.

**ந**மக்குள்ளே ஐந்து கோசங்கள் அமைந்திருக்கின்றன: அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமய கோசம். இந்த ஐந்திலும் சுத்தி ஏற்பட்டால்தான் எம் பெருமானை நாம் உணரமுடியும். இந்த ஐந்து க்ஷேத்திரங்களிலேயும் இருக்கும்படியான நரசிம்ஹனை உபாஸனை பண்ணினால் சிறந்தது.

அன்னமய கோசத்தில் சுத்தி ஏற்பட மங்களகிரி நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும். அடுத்து, பிராணமய கோசத்தில் சுத்தி ஏற்பட வேதாத்ரி நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும். மனோமய கோசத்தில் சுத்தி ஏற்பட மட்டபல்லி லக்ஷ்மி

நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும். விஞ்ஞான மயகோசத்தில் சுத்தி உண்டாக வாடபல்லி லக்ஷ்மி நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும். ஆனந்த மயகோசத்தில் சுத்தி பெற கேதவரம் லக்ஷ்மி நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும்.

இந்த ஐந்து க்ஷேத்திரங்களிலும் நரசிம்ஹனை தியானம் பண்ண, இந்த ஐந்து நிலைகளிலும் சுத்தி ஏற்படும்; தெளிந்த ஞானம் பிறக்கும். பகவானை அனுபவிக்கும்படியான நிலையை நாம் அடைவோம்.



## 27

அன்னத்தைக் குறைத்தால்தான் அன்னமய கோசத்தில் சுத்தி ஏற்படும். வேதமானது அன்ன ஸூக்தத்திலேயே சொல்கிறது. "எவன் என்னை நிறைய சாப்பிடுகிறானோ அவனை நான் சாப்பிடுகிறேன்" என்று அன்னமே சொல்கிறது!

'யோ புங்தே அஹமேவ புங்தே'

ஆகையினாலே அன்னத்தை நிறைய சாப்பிட்டால் தான் பலம் என்று நினைத்துக் கொள்ளக்கூடாது. அன்னத்தைக் குறைத்து அனுபவித்தால், அன்னமய கோசத்தில் சுத்தி ஏற்படுகிறது. வியாதியெல்லாம் நீங்குகிறது.

அன்னமய கோசத்திலே சுத்தி ஏற்பட்டுவிட்டால் பிராணமய கோசத்திலும் ஏற்படும். பிராண — அபான — வ்யான — உதானாதி வாயுக்களெல்லாம் நல்ல முறையிலே தரிக்கும். நாம் நல்ல திடகாத்திரர்களாக நம்முடைய கடமையைச் செய்வதற்குத் தவறாமல் எழுந்து சென்று வீர்யத்துடன் வேகமாகச் செயல்படு வோம். இந்த அன்னமய கோசத்திலே சுத்தி ஏற்பட்ட தானால், மனம் விகாரமடையாது; மனம் ஒருமுகப் படுத்தப்படும். மனோமய கோசத்திலே சாந்தி ஏற்படும். அதன் பிற்பாடு தெளிந்த ஞானம், விஞ்ஞான மய கோசத்திலே சுத்தி ஏற்பட்டு, ஆனந்தமயமான

எம்பெருமானை அனுபவிக்க முடியும் என்று உபநிஷத்தானது சுட்டிக்காட்டுகிறது. இதற்கு உறுதுணையாக இந்த லோகத்திலே, அர்ச்சையிலே ஐந்து ஸ்தானங்களிலே நரசிம்ஹனாக எழுந்தருளியிருக்கிறான் எம்பெருமான். நம்முடைய ஹ்ருதயத்திலே இந்த ஐந்து ஸ்தானங்களையும் நாம் தியானம் பண்ணிக்கொள்ள வேண்டும். பண்ணிக் கொண்டால் அவனுடைய அனுக்கிரஹம் நமக்கு ஏற்படும்.



பரத்வாஜ ஹ்ருதயத்திலே, பரத்வாஜ மஹ ரிஷி கண்டெடுத்துச் சொல்லியிருக்கும் உண்மை இது.

**ஆ**ந்திர தேசத்திலே எங்கு போனாலும் நரசிம்ஹ க்ஷேத்திரம்தான். அவற்றில் பிரதான க்ஷேத்திரமாக அஹோபில க்ஷேத்திரம் அமைந்திருக்கிறது. இங்கு ஒரே க்ஷேத்திரத்திலே, ஜ்வாலா, அஹோபில, மாலோல, க்ரோட, காரஞ்ச, பார்கவ,

யோகானந்த, சத்ர வட, பாவன என்று ஒன்பது நரசிம்ஹனையும் ஒரே க்ஷேத்திரத்திலே தரிசிக்கலாம்.

இதிலே மாலோலன் என்கிற மூன்றாவது நரசிம்ஹன்தான் அஹோபில மடத்திலே பீடாதிபதிகளால் ஆராதிக்கப்படும்படியான எம்பெருமான். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் பண்ணி, இந்த நரசிம்ஹனை

"அங்கன் ஞாலம் அஞ்ச, அங்கு
ஓர் ஆள் அரி ஆய் அவுணன்
பொங்க, ஆகம் வள்உகிரால்
போழ்ந்த புனிதம் இடம் –
பைங் கண் ஆனைக் கொம்பு
கொண்டு, பத்திமையால் அடிக்கீழ்
செங்கண் ஆளி இட்டு இறைஞ்சும்
சிங்கவேள் குன்றமே'' என்றார்.

சிங்கவேள் குன்றத்தான் என்றே பெயர் அவனுக்கு. ஏழு மலைகள் அங்கே—அது மாத்திரம் அல்ல... சிம்ஹ ராஜா—உறையும்படியான உயர்ந்த இடம் இந்த அஹோபிலம்.

அப்படிப்பட்ட ஸ்தலத்திலே ஆழ்வார் போய் ஸேவிக்கிறபோது சிம்ஹங்களெல்லாம் யானையை அடித்துத் தின்றுவிட்டு, அதனுடைய தந்தங்களையெல்லாம் வகைப்படுத்திச் சேர்த்துவைத்து.

"ஓம் ஸ்ரீ ந்ருஸிம்ஹாய நம:
ஓம் மஹா ஸிம்ஹாய நம:
ஓம் திவ்ய ஸிம்ஹாய நம:''

என்று அர்ச்சனை பண்ணிற்றாம்! தந்தங்களாலேயே சிம்ஹங்கள் சிம்ஹத்துக்கு அர்ச்சனை செய்கின்றன

அஹோபில க்ஷேத்திரத்திலே இதைக் கண்டு வியந்து அவர் பாடுகிறார்.

சிம்ஹமே தன்னைத் தானே விரும்பும்படியான அழகுடன் அமைந்துள்ளது அஹோபிலம். ந்ருஸிம்ஹ தாபனீய உபநிஷத் சொல்கிறது: மிருகங்களிலே உயர்ந்தது சிம்ஹம். ஆறறிவு படைத்ததால் உயர்ந்தவன் மனிதன். இந்த இரண்டையுமே தனக்கு ரூபமாகக் கொண்டான் பரமாத்மா.

நரசிம்ஹனாக பகவான் அவதரித்து வருவதற்கான காரணம் என்ன என்று கேட்டோமானால், பிரஹ்லாதன் அரக்க குலத்திலே பிறந்தவனான போதிலும் அவனிடத்திலே மனித ஸ்வபாவம் இருந்தது. நல்லது — கெட்டதுக்குப் பயப்படும்படியான பவ்ய மூர்த்தியாக அவன் இருந்தான். அதனால் அவனுடைய மனித குணத்தைத் தனக்கு ஒரு வடிவமாகக் கொண்டான் பரமாத்மா.

பிரஹ்லாதனின் அப்பா அசுரன் — ஹிரண்யன். அவன் மிருக குணம் படைத்தவன். அதையும் தனது ரூபமாக ஏற்றான் பகவான். அப்பாவின் குணத்தையும் பிள்ளையின் குணத்தையும் தனக்கு ரூபமாகக் கொண்டு, நரம் கலந்த சிங்கமாக பரமாத்மா தோன்றினான்.

அந்தக் குழந்தை பிரஹ்லாதனை அவன் அம்மா மடியிலே வைத்துக்கொண்டு ஒரு நாள், "குழந்தாய்! நீ அறிந்ததிலேயே மிகச் சாது எது" என்று கேட்டார்.

"இந்த உலகம் ரொம்ப கொடியது. ஆத்ம பாவமானது. ஆத்மாவைக் கெடுக்கக்கூடியது. இது ஒரு

பாழும் கிணறு. இதிலே ஒருவிதமான பெருமையும் இல்லை. இதை விட்டு விட்டு காட்டுக்குப் போய் ஹரியை உபாஸனை பண்ணவேண்டும்" என்றது.

ஹரி என்ற சப்தத்துக்கு விஷ்ணு என்று ஓர் அர்த்தம். ஹரி என்றால் சிங்கம் என்றும் ஓர் அர்த்தம். 'சிம்ஹத்தை உபாஸிக்க வேண்டும்' என்றது அந்தக் குழந்தை.

பிரஹ்லாதன் சொன்ன வார்த்தை 'சிம்ஹம்'. அந்தக் குழந்தையினுடைய வார்த்தையைக் காப்பாற்றுவதற் காகவே சிம்ஹமாக அவதாரம் பண்ணினான் பகவான் என்று பெரியோர்கள் வியாக்யானம் பண்ணிக் காட்டியிருக்கிறார்கள்.

ஆகவே, பகவான் சிம்ஹமாக அவதாரம் பண்ணிய தற்குப் பிரஹ்லாதன் சொன்ன வார்த்தைதான் காரணம்.

இந்த உலகத்திலே லௌகீக வாழ்விலே எந்த விதமான ஆத்ம பாவமும் கிடையாது! இதை நாம் நன்றாகக் கவனிக்கவேண்டும். ஆனால், நாம் நித்யம் ஓர் ஆனந்தம் சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஆனால், 'இந்த ஆனந்தமெல்லாம் ஆனந்தமேயில்லை' என்று சொல்லிவிட்டான் பிரஹ்லாதன்.

அழகாக மகான்கள் விளக்கியிருக்கிறார்கள். இதை— ஒரு கதை மூலமாக.

**அ**மாவாஸை இருட்டில் ஒருத்தன் காட்டிலே போய்க்கொண்டிருக்கிறான். கண் தெரியவில்லை. புலி துரத்துகிறது அவனை. புலி துரத்துகிறதே என்று

வேகமாக ஓடுகிறான். ஓடுகிறபோது கால் தடுக்கி, பாழுங்கிணற்றில் விழுந்துவிடுகிறான். சரியான அடி படுகிறது. தலையிலே அடிபட்டு ரத்தமாகக் கொட்டு கிறது. மேல் துணியைக் கிழித்து, தலைக்குக் கட்டுப் போடுகிறான். புலியோ மேலே கிணற்றைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது. இவனானால், 'அப்பாடா! புலியிடமிருந்து தப்பினோம்' என்று நினைக்கிறான்.

தலையிலே கட்டுப் போட்டுக் கொண்டேயிருக்கிற போது, கிணற்றிலே சலசலவென்று சப்தம் கேட்கிறது. பார்த்தால், பெரிய மலைப் பாம்பு! வாயைப் பிளந்தபடி இவனை நோக்கி வருகிறது அந்தப் பாம்பு! அது எப்போது கிணற்றிலே விழுந்தது என்று தெரியவில்லை. இவனுக்கு முன்பே விழுந்து விட்டது. வெளியிலே வர முடியவில்லை அதற்கு. அதன் வாயிலே ஆகாரமாகப் போய் விழுந்தால் அது விடுமா? நெருங்கி நெருங்கி வருகிறது.

இவன் நடுநடுங்கிப் போய்விட்டான். புலியிட மிருந்து தப்பித்தோமே என்று பார்த்தால் பாம்பு வருகிறதே! பார்த்தான். அதிர்ஷ்டவசமாக, மரத்தின் கிளை ஒன்று கிணற்றுக்குள் வளைந்து வந்தது. அதை எம்பிப் பிடித்துக் கொள்ளலாம் என்று ஓர் எகிறு எகிறினான். மரக்கிளையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். மேலேயும் போகமுடியவில்லை. கீழேயும் போக முடியவில்லை. ஆனால், எத்தனை நாழி கிளை யைப் பிடித்துக் கொண்டிருக்க முடியும்? கையெல்லாம் வலிக்கிறது!

இதற்கிடையே இருட்டிலே "கடுக்கு கடுக்கு... கடுக்கு கடுக்கு..." என்று ஒரு சப்தம் கேட்கிறது, அவன்

காதிலே! நிமிர்ந்து பார்த்தால், இவன் எந்தக் கிளையைப் பிடித்துக் கொண்டிருக்கிறானோ, அதனுடைய அடிப் பாகத்தை இரண்டு பெருச் சாளிகள் சேர்ந்து கடிக்கின்றன. ரம்பம் போட்டு அறுக்கிற மாதிரி கடிக்கின்றன. இன்னும் கொஞ்ச நேரம் அவை துருவினால், இவனுக்கு மரணம்தான். எப்படியும் பிழைக்கவேண்டும் என்கிற எண்ணத்திலே, இவன் கிணற்றின் கரையைப் பிடித்துக்கொண்டு தப்பிக்க எண்ணுகிறான். கைப்பிடியில் உள்ள கிளையை ஆட்டி உடம்பை நெம்பி முன்னுக்குத் தள்ளு கிறான். அப்படி ஊசலாடுகிறபோது, கிணற்றின் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக உடம்பு இடிக்கிறது. அந்தக் கிணற்றைச் சுற்றி நிறைய தேனீக்கள் கூடு கட்டியுள்ளன. இவன் சுவரை இடித்தவுடனே அவையெல்லாம் வெளியே வந்து இவனைப் பாதாதி கேசம் சுரீர் சுரீர் என்று கொட்டுகின்றன. தாள மாட்டாமல் வாயைப் பிளந்து "ஆ ஆ..." என்று அரற்றுகிறான் அவன்.

அப்போது அந்தத் தேன் கூட்டிலேயிருந்து ஒரு சொட்டுத் தேன் அவன் நாக்கிலே விழுந்தது. உடனே அவன், "அடடா! என்ன ஆனந்தம் ப்ரும்மானந்தம்!" என்றான்.

இது காட்டிலே அனுபவிக்கும்படியான அவனு டைய நிலை அல்ல... நம்முடைய நிலை இது! உலகிலே நாம் அனுபவிப்பதாக எண்ணுகிற ஆனந்தமெல்லாம் ஒரு சொட்டுத் தேன் போன்றது... அவ்வளவும் இடுக் கண்கள்தான், உலகத்திலே!

## 28

**உ**லகிலே நாம் அனுபவிக்கிற ஆனந்தம் என்பது ஒரே ஒரு சொட்டுத் தேன் போன்றது என்றால், காட்டிலே இருட்டிலே போனவனின் கதை நமக்கு எதைச் சொல்கிறது என்று பார்க்கவேண்டும்.

இருட்டான காடு என்பது என்ன...? அதுதான் சம்ஸார மருகாந்திரம். புலி துரத்துகிறதே — அது என்ன...? புண்ணியம் — பாவம் என்று நாம் செய்கிற வினைக்கு ஏற்ப, பாப வினையானது நம்மை உட்காரவிடாமல் துரத்துகிறது.

வாழ்க்கையில் சில சந்தர்ப்பங்களிலே நாம் சொல்வது உண்டு; "இன்னும் கொஞ்சம் நேரம் அவர் அங்கே இருந்திருந்தாரானால் இந்தக் கஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கமாட்டாரே..." என்று.

அப்படி கஷ்டத்துக்கு உள்ளானவரை யார் எழுந்து வரச் சொன்னார்கள் என்று கேட்டால், அவர் செய்த பாவமானதுதான் அவரைத் துரத்துகிறது! உட்கார விடாமல் துரத்தியடிக்கிறது — 'போ அங்கே' என்று.

ஆகவே, நாம் செய்கிற புண்ணிய — பாவமானது புலி துரத்துகிற மாதிரி நம்மைத் துரத்துகிறது.

இதற்கு நடுவிலே, கிணற்றிலே வந்து விழுகிற செயலும் நடக்கிறது. கிணற்றிலிருந்து எழ

முடியவில்லை அல்லவா! அந்தக் கிணறானது நமது வீடு—மனைவி — மக்கள் என்கிற பந்தங்கள். இவற்றிலே பற்றுக் கொண்டு, சாமானிய நிலையிலேயே சங்கோஜ ஞானத்தோடு (ஒரு சிறிய வரையறைக்குட்பட்ட அறிவோடு) நாம் இருக்கிறோம்.

கிணற்றுக்குள்ளே பாம்பு வாயைத் திறக்கிறதே, அந்தப் பாம்பு யார் என்றால், அதுதான் பசி—பிணி—மூப்பு — துன்பம் என்ற நிலைகள். வரக்கூடிய வியாதிகளெல்லாம் வாயைத் திறந்து கொண்டு பயமுறுத்துகின்றன. மூப்புத் தன்மை — கிழத்தனம் — இவனைப் பரிகாசம் பண்ணுகிறது.

இதற்கிடையே உடம்புக்கு வந்துவிட்டதானால், மருத்துவரிடத்திலே ஓடுகிறோம். அவர் 'இதிலே கெட்டிக்காரர்—அதிலே கெட்டிக்காரர்' என்றெல்லாம் சொல்கிறார்கள். மருத்துவரிடத்திலே கையைக் காண்பிப்பது போன்ற செயல்தான் பாம்புக்குப் பயந்து கொண்டு மரக்கிளையை எட்டிப் பிடிப்பது. என்னதான் மருந்து தேடி வாங்கினாலும் அது எத்தனை நாளைக்கு நமக்குக் கை கொடுக்கும்? எத்தனை நாள் ஒருத்தர் இருப்பார் என்று விதித்திருக்கிறதோ அத்தனை நாள்தான் அவர் இருப்பார்! அதற்கு மேல் ஒரு க்ஷணம்கூட இருக்கமுடியாது!

ஒரு குழந்தை உற்பத்தி ஆவதை நாம் பார்க்கிறோம். பிறந்தவுடனே அதைக் கொண்டாடி புண்யாவசனம் பண்ணுகிறோம். குழந்தை பிறக்கிறபோதே அதனோடு ஐந்து விஷயங்கள் பிறந்துவிடுகின்றன. இதை சாஸ்திரத்தின் கண்கொண்டு நாம் பார்க்க வேண்டும் — அந்த ஐந்தும் என்னென்ன?

ஆயு: ஆயுள் — இந்தக் குழந்தை எத்தனை காலம் ஜீவித்திருக்கும் என்கிற கால நிர்ணயமும் உண்டாகி விடுகிறது. கர்மா—என்ன செயல் பண்ணி இந்த உலகத் திலே இவன் பிழைப்பு நடத்துவான் என்கிற கர்மாவும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதைத் தவிர வேறொரு கர்மா பண்ணி இவன் ஜீவிக்கவே முடியாது. ஜன்மாந்திரத்திலே செய்த புண்ணிய — பாவத்துக்கு ஏற்பத்தான் இவனுக்குச் செயல் அமையும்.

இவ்வளவு பொருள் இவனுக்கு வாய்க்கும் என்பதும் நிர்ணயிக்கப்பட்டது. அதற்கு மேலே ஒரு பைசா வராது.

கல்வியும் அப்படித்தான். இவ்வளவு வித்யை இவனுக்கு வாய்க்கும் என்பதும் நிர்ணயிக்கப்பட்டது.

இன்றைய தினம் இந்த இடத்திலே, இந்தக் காலத் திலே இவனுக்கு மரணம் என்பதும் நிர்ணயிக்கப் பட்டதுதான். இதையும் மாற்ற முடியாது. கர்ப்பத்துக் குள்ளே இருக்கிறபோதே நிர்ணயிக்கப்பட்ட விஷயம் இவை ஐந்தும்.

சரி, இரண்டு பெருச்சாளிகள் துருவுகின்றனவே, இவன் பிடித்துக்கொண்டிருக்கிற கிளையை... அந்தப் பெருச்சாளிகள் என்ன என்று கேட்டால், ஒன்று ம்ருத்யு, மற்றொன்று காலன். 'க்ஷணே க்ஷணே' ஆயுள் குறைகிறது என்பதைக் காட்டிக்கொண்டே யிருக்கின்றன, இந்தப் பெருச்சாளிகள்.

இத்தனைக்கும் நடுவிலே தேனி கொட்டுகிறதே, அது என்ன? பந்து மித்ராதிகள்—உற்றார் உறவினர். பாதாதி கேசம் இவனைக் கொட்டுகிறார்கள் அவர்கள்!

இதற்கெல்லாம் இடையிலே இந்த ஸம்ஸாரத்திலே அவனுக்குக் கிடைக்கக்கூடிய ஆனந்தம் எவ்வளவு என்றால், அது ஒரு சொட்டுத் தேன் அளவுதான்! மிக அல்பமான பலன்; ஸ்திரமில்லாத — நிலையில்லாத பலன்.

ஆகையினாலே, ஆத்மாவைக் கெடுக்கக்கூடிய இந்தப் பாழுங்கிணறு சம்ஸாரத்தை விட்டுவிட்டுக் காட்டுக்குப் போய் ஹரியை தியானம் பண்ண வேண்டும் என்று குழந்தை பிரஹ்லாதன் சொல்லிற்று. அவனுக்காக பரமாத்மாவும் சிம்ஹ ரூபமாக ஆவிர்பவித்தான். இரண்டு ரூபம் தரித்தான். இரண்டு ரூபமும் அவரவர் குணத்தை வைத்து — மனித குணம் — மிருக குணம் (அசுர குணம்)

'எதேச்சையாகத் தோன்றிய நரசிம்ஹன்' என்று சுவாமி தேசிகன் அவனைச் சொல்கிறார். திடீரென்று தோன்றியவன். பகவத் இச்சையினால் தோன்றிய அவதாரம், இந்த அவதாரம். மிகவும் போக்யமான அவதாரம். பக்தன் பிரஹ்லாதனுக்கு ஏற்பட்ட இடுக்கண்ணைப் போக்குவதற்காக தோன்றிய அவதாரமானதனாலே மிகவும் ஏற்றமுடைய அவதாரம்.

அந்தந்த க்ஷேத்திரத்திலே பரமாத்மா இப்பொழுது நம் இடுக்கண் களைவதற்காக எழுந்தருளியிருக்கிறான். அதிலே மட்டபல்லி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும்படியான எம்பெருமான், அடியேன் மீது ஆவிர்பவித்துப் பேசியிருக்கிறான். இந்தக் கலியுகத்திலே கண்கண்ட தெய்வமாக அவனுடைய பல

விஷயங்களை பரமாத்மா முன்பே வந்து சொல்கிறான் — அவனே வந்து சொல்கிறான்.

"நான் சொல்கிறபடி செய்யுங்கள்; க்ஷேமம் ஏற்படும்" என்கிறான்.

"மட்டபல்லி க்ஷேத்திரத்துக்கு வாருங்கள்" என்று அனைவரையும் அழைக்கிறான்.

முதலில் வரும்படியாக அழைக்கிறான் பாருங்கள்... அவ்வாறு அழைப்பவன், நாம் போனவுடனே 'இவன் எப்போது கிளம்பிப் போகப் போகிறான்?' என்று பார்ப்பதில்லை. பதினோரு நாள் நம்மை அங்கேயே இருக்கச் சொல்கிறான்.

பிராத; காலம் (விடியற் காலை) கிருஷ்ணா நதியிலே ஸ்நானம் பண்ணுங்கள். ஸ்நானம் பண்ணி, ஆலயத்திற்கு வந்து, என்னை 32 பிரதக்ஷிணம் பண்ணுங்கள்..." என்கிறான்.

'திருவனந்தபுரத்திலே இருக்கிற மாதிரி பிராகாரம் பெரிதாக இருக்குமா?' என்று ஒருத்தர் கேட்டார்.

திருவனந்தபுரத்துக்கு அடியேன் உபன்யாஸம் பண்ணுவதற்காகப் போயிருந்தபோது, பிரதக்ஷிணம் பண்ணவேண்டும் என்று ஆரம்பித்தேன்; ஒரு நாள். ஒரு பக்கமே ஒரு ஃபர்லாங் அளவு இருந்தது. விடியற்காலை உபன்யாஸம் முடிந்தவுடனே பிரதக்ஷிணம் ஆரம்பித் தேன். முதல் நாள் நாலு பேர் வந்தார்கள் என்னோடு பிரதக்ஷிணம் பண்ண; இரண்டாவது நாள் ஒரு பதினைந்து பேர் வந்தார்கள்; மூன்றாம் நாள், நூறு பேர்

வந்தார்கள்; நான்காவது நாள், உபன்யாஸம் கேட்க வந்த அத்தனை பேரும் பிரதக்ஷிணம் பண்ணினார்கள்!

மட்டபல்லியிலே அவ்வளவு பெரிய பிரதக்ஷிணம் இல்லை. சின்ன இடம். சுலபமாக முடிந்து போய்விடும். ரொம்ப தூரம் போய் நதியில் ஸ்நானம் பண்ண வேண்டுமா என்றால், அதுவும் இல்லை. ரொம்ப நெருக்கமாக இருக்கிறது ஸ்நானகட்டம்.

ஆகையினாலே, ஸ்நானம் பண்ணிவிட்டு வந்து 32 பிரதக்ஷிணங்கள் பண்ணி, இந்த மங்களாஷ்டகம் இருக்கிறதே—பகவானால் கொடுக்கப்பட்ட மங்களாஷ்டகம்—அதைப் பதினொரு ஆவர்த்தி சொல்லவேண்டும். அந்த மண்டபத்திலே நின்று கொண்டு சொல்லலாம். குகைக்குள்ளேயும் பகவானுக்கு எதிரிலே நின்றுகொண்டும் சொல்லலாம். நேராக அடியேனால் அந்தக் குகைக்குள்ளே நுழைய முடியாது. ரொம்ப சங்கோசமான (குறுகலான) இடம். இந்தச் சின்ன வழியிலே நுழைந்து, உள்ளுக்குள்ளே போனால், அந்தச் சின்ன இடத்திலே பகவான் ஆச்சர்யமாக அமர்ந்து காட்சியளிக்கிறான். அந்த வடிவழகை, அந்த தீர்க்க நாசிகையை, விசால நேத்திரமும் அந்த கபோலமும் , அந்த நெற்றியும், அந்த அதர பல்லவமும் (பற்கள்)... ரமணீயமான அந்த ரூபத்தை இன்றெல்லாம் ஸேவித்துக் கொண்டிருக் கலாம். எல்லோரையும் ஆகர்ஷிக்கும்படியான எம்பெருமான் அவன். ஆகர்ஷண சீலன். அந்த குகைக்குள்ளே சென்று ஸேவித்தவர்கள் அனை வருக்கும் இது தெரியும்.

இனிமேல் அங்கே போகிறவர்கள் வேளைக்கு 32 பிரதக்ஷிணம் பண்ணி — தினம் 96 பிரதக்ஷிணம் — இந்த மாதிரி பதினொரு நாள் பண்ணுகிறவர்களுக்கு,

"எல்லா கோரிக்கைகளும் நிறைவேறும். எல்லா விதமான இடுக்கண்களும் தொலையும் — என்னென்ன உண்டோ அது மொத்தம் பொடிபடும். எல்லா க்ஷேமங்களும் ஏற்படும். — இது சத்யம் சத்யம்'' என்று பரமாத்மா பேசியிருக்கிறான்.

அந்த மாதிரி பல மகான்கள் சென்று அவனுடைய அனுக்கிரஹத்தைப் பெற்று, பரிபூரணமான ஆனந்தத்தோடு விளங்குகிறார்கள்.



## ஸ்ரீ மட்டபல்லி மங்களாஷ்டகம்

ஸ்ரீமட்டபல்லிநிவாஸாய மதுராநந்தரூபிணே|
மஹாயஜ்ஞஸ்வரூபாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
க்ருஷ்ணவேணீ தடஸ்தாய ஸர்வாபீஷ்டப்ரதாயிநே|
ப்ரஹ்லாதப்ரியரூபாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
கர்தஸ்திதாய தீராய கம்பீராய மஹாத்மநே|
ஸர்வாரிஷ்டவிநாஸாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
ருக்யஜுஸ்ஸாம ரூபாய மந்த்ராரூடாய தீமதே|
ஸ்ரிதாநாம் கல்பவ்ருக்ஷாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
குஹாலயாய குஹ்யாய குஹ்யவித்யாஸ்வரூபிணே|
குஹராந்தே விஹாராய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
ஸ்ரீபல்யத்ரிமத்யஸ்தாய நிதயே மதுராயச|
ஸூகப்ரதாய தேவாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
தாபநீயரஹஸ்யாய தாபத்ரயவிநாஸிநே|
நதாநாம் பாரிஜாதாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
ராஜ்யலக்ஷ்ம்யா ஸமேதாய ராகத்வேஷவிநாஸிநே|
மட்டபல்லி நிவாஸாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம்||
முக்கூர் ந்ருஸிம்ஹதாஸேந ப்ரோக்தம் மங்கள மத்புதம்|
ய: படேத் ஸ்ரத்தயா பக்த்யா ஸர்வபாபை: ப்ரமுச்யதே||

*அருளியவர்:*
**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**



